# கம்பன் மலர்

2006



கம்பன் கழகம், கோவை



# கம்பன் மலர்

## 2006



சுந்தர காண்டம்
பாத்திரங்கள்

**கம்பன் கழகம்**
மணி மேல்நிலைப் பள்ளி வளாகம்
பாப்பநாயக்கன்பாளையம்
கோவை - 641 037



## கடவுள் வாழ்த்து

(சுந்தர காண்டம்)

“அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு என, பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்,
கலங்குவது எவரைக் கண்டால்? அவர் என்பர் கை வில் ஏந்தி
இலங்கையில் பொருதார் அன்றே, மறைகளுக்கு இறுதி ஆவார்”

| | | |
|---|---|---|
| விலங்குதல் | - | தனித்தனியாக இருக்கும் பஞ்சபூதங்கள் அத்தன்மை விட்டு ஊடுருவி ஒன்றாகக் கலத்தல் |
| விகாரப்பாடு | - | அறுவகை மாற்றங்கள் - அவை. இருத்தல், பிறத்தல், பருத்தல், வளர்தல், தேய்தல், அழிதல் என்பன |
| விக்கம் | - | கண்களுக்குப் புலனாகத் தோன்றும் உடல் - இங்கே பிறப்பு - அறியாமையின் மிகுதி |
| கலங்குதல் | - | நீங்குதல் |

# பொருளடக்கம்



# தோரண வாயில்

பரம்பொருளின் பெருமைகளைப் பேசவும், மேலிருந்து கீழே இறங்கி, அவதாரங்கள் எடுத்து, அடியார்களை மேம்படுத்தவும், பக்திநெறியில் அவர்களை வழிப்படுத்தவும் தானே – பகவானே – பலவித அர்ச்சாவதாரங்களை எடுத்துக் கொண்டு அருள்புரிந்த புண்ணிய பூமி நமது பாரததேசம். மானுடனாகப் பிறந்து, மானுடனாகவே வாழ்ந்து காட்டிய இராமாவதாரமும், மானுடனாகப் பிறந்து தெய்வாம்சத்தோடு வாழ்ந்து தருமத்தை – சத்தியத்தை நிலைநாட்டிய கிருஷ்ணாவ தாரமும் இருபெரும் இதிகாசங்களாக நமது நாட்டிலே பேசப்பட்டு கொண்டு வருகின்றன. இந்திய நாட்டின், அநேகமாக எல்லா மொழிகளிலும், இராமாயண, மகாபாரதக்கதைகள் காவ்யமாக எழுதப்பட்டு, மக்களாலே படிக்கப்பட்டு வந்து கொண்டிருக்கின்றன. குறிப்பாக வான்மீகி முனிவரால் எழுதப்பட்ட இராமா யணத்தையொட்டி, தமிழிலே கம்பன் ''இராமாவதாரத்தை'' எழுதினான். ''நடையில் நின்று உயர்நாயகனின்'' பெருமையை தனது சொற்களாலே வடித்து, அழகுக்கு அழகு சேர்த்தான். 1200 ஆண்டுகளுக்கு முன் அவன் எழுதிய இராமாயணம் இன்றும் மக்கள் மத்தியிலே பட்டி தொட்டி எங்கும் பரந்து, விரிந்து பேசப்பட்டுவருகிறது.

கம்பன் புகழ்பாடும், கோவைக் கம்பன் கழகம் கடந்த 33 ஆண்டுகளாக ஆண்டு தோறும் விழா எடுத்து கம்பனின் பெருமையை – இராமாயணத்தின் உயர்வை, பக்தி உணர்வை பறைசாற்றிக் கொண்டு வருகிறது. 1979 முதல் கம்பன் என்ற ஆழ்கடலில் முக்குளித்து, சிறந்த முத்துக்களை கட்டுரைகளாக ''கம்பன் மலரில்'' வெளியிட்டுக் கொண்டு வருகிறது.

கடந்த ஆண்டுகளில், காண்ட வாரியாகப் பாத்திரப் படைப்புகளை பாலகாண்டம் தொடங்கி, கிட்கிந்தா காண்டம் வரை வெளியிட்டுள்ளோம்.

இவ்வாண்டு (2006) சுந்தரகாண்டமாக மலர்கிறது. சுந்தரகாண்டத்தின் தனிச் சிறப்பே - சிறையிருந்தாள் ஏற்றம் கூறுவதான். அதிலும் சீதாப்பிராட்டியும், அனுமனும் முக்கிய பாத்திரங்களாக வருவது தனிச்சிறப்பு. இக்காண்டத்தில் வரும் ஏனைய பாத்திரங்கள் அனைத்தும் ஏதோ ஒரு வகையில் இந்த இரண்டுப் பாத்திரங்களைப் பின்னிப்பிணைந்து கொண்டே இருப்பதை காணலாம். எனவே தான் 'சுந்தர' அனுமனையும், ''தவம் செய்த தவமாம்'' தையலாகிய சீதாப் பிராட்டியையும் மையமாகக்கொண்டு படைக்கப்பட்டிருக்கிறது. இச் சுந்தரகாண்டம்.

இம்மலரிலே 11 கட்டுரைகள் வெளியாகியுள்ளன. கம்பனில் மூழ்கி முத்தெடுத்த அறிஞர்கள், அவரவர்கள் பாத்திரத்திற்கேற்ப செய்திகளைக் கொடுத் திருக்கிறார்கள்.

''சுந்தரகாண்டத்தின்' நாயகனாக அனுமன் இருக்கிறான். அவனைச் சுற்றியே நிகழ்வுகள் வருகின்றன. புதிய கோணத்தில், புதிய அணுகு முறையில் இப்பாத்திரத்தை நமக்குக் கொடுப்பவர் 'கம்பன் அடிசூடி' பழ. பழனியப்பன். மிகவும் ஆழமான கருத்துக்கள். சிந்தனையைத் தூண்டும் வாதங்கள். அடுத்து ''கற்பின் கனலி''யாகிய சீதாபிராட்டி பற்றிய கட்டுரையை எழுதியவர் பேராசிரியை ஆ. ரா. இந்திரா அவர்கள். நீண்ட கட்டுரையாக இருந்தாலும் பிராட்டியின் சோகத்தையும், மகிழ்ச்சியையும், துணிவையும், வீரத்தையும் இராமன்பால் கொண்ட நேசம், பாசம், பிரிவு இவைகளைத் தனது சொற்ஜாலத்தினாலே வர்ணித்துக் காட்டியிருப்பது படிப்போர் உள்ளத்தை உருக்கும் என்பதில் ஐயமில்லை.

இராவணன் பாத்திரத்தை பேராசிரியர் அகரமுதல்வன் எழுதியுள்ளார். இராவணனது மாட்சி - சீதையின் பால் அவன்கொண்ட காமத்தினால் ஏற்பட்ட வீட்சி ஆகியவற்றை நயம்பட எழுதியிருக்கிறர்.

பிற துணைப் பாத்திரங்கள் பற்றிய கட்டுரைகளை பல்வேறு தமிழ் அறிஞர்கள், பேராசிரியர்கள் எழுதியுள்ளார்கள். மைந்நாகமலை சுரசை, அங்க தாரை பற்றி முனைவர் கா. பாஸ்கரனும், இலங்காதேவியை முனைவர் வே. செல்வசுப்ரமணியனும், திரிசடை, வீடணன் பற்றி புலவர் அரங்கநாதனும், சம்புமாலி, பஞ்சசேனாபதிகள், அக்ககுமாரன் பற்றி முனைவர் க. முருகேசனும், இந்திரசித்து பற்றி முனைவர் பேரா. இந்திரசித்தும், இராமன் - சுக்கிரீவன் பற்றி பதிப்பாசிரியர் நா. நஞ்சுண்டனும், ''வாராது ஒழியான்'' என்ற தலைப்பில் குளித்தலை ராமதாஸ் பாரதியும் எழுதியுள்ளார்கள்.

இறுதிக்கட்டுரையாகச் சுந்தரகாண்டத்தின் பாத்திரப் படைப்புகளுக்கு முத்தாய்ப்பு வைக்கும் வகையில் அமரர். வ. வே. சு. அய்யரின் ''காவ்ய ரசனை'' என்ற நூலிலிருந்து ''சுந்தரகாண்டத்தின்'' பெருமைகளை, சுவையை, பாத்திரங்களின் மேன்மையை எடுத்துக்காட்டும் வகையில் கட்டுரை வருகிறது. அய்யர் அவர்களின் நுண்மாண் நுழைபுலம், பன்மொழிப்புலமை, கம்பனின் காவியத்தில் அவருக்கு உண்டான அளவில்லாத காதல் இதன்மூலம் நாம் உணர முடிகிறது.

இத்துணைப் பாத்திரங்களின் கட்டுரைகளிலே, பாத்திரத்தின் செயல்பாடுகள், வீரம், வீழ்ச்சி இவைகள் பேசப்பட்டிருக்கின்றன. ஏறத்தாழ அனைத்துப் பாத்திரங்களும் அனுமனையும், சீதையையும் சுற்றிச் சுற்றி வருவதால், பாத்திரங்களின் நிகழ்வுகளோடு இந்த இருவரின் செய்திகளும் சொல்லப்படுவதுதான் இக்காண்டத்தின் சிறப்பு. கட்டுரைகள் அனைத்தும் சுவையாக, செய்திகளைச் சொல்லுவதில் ரத்தினச் சுருக்கமாக, பாத்திரங்களை கையாண்டிருப்பதைப் பாராட்டவேண்டும். கட்டுரைகளை எழுதிய அனைத்துப் பேராசிரியர்களுக்கும், புலவர்களுக்கும் எங்கள் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். மலரின் தொடக்கத்தில் வழக்கம்போல் எங்கள் தலைவர் பெரியவர் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள் எழுதிய ''சுந்தரகாண்டம்'' சிறப்புப் பார்வை கட்டுரை வெளியாகியுள்ளது. 93 வயதிலும் இத்துணை ஈடுபாடு இவருக்கு கம்பனிடம் இருக்கிறது என்பதைக் கட்டுரையைப் படித்து அறிந்து கொள்ளலாம்.

மலர் சிறக்க விளம்பரங்கள் தந்துதவிய நிறுவனங்களுக்கும் சிறந்தமுறையில் மலரைக் குறுகிய காலத்தில் அச்சிட்டுக் கொடுத்த கீதாஞ்சலி அச்சகத்தாருக்கும், குறிப்பாக திரு. கோபிநாத்துக்கும், உடனிருந்து பல்வகையானும் ஒத்துழைப்புக் கொடுத்த செயலர் திரு. க. மீ. வேங்கடேசன் அவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். எல்லாவற்றிக்கும் மேலாக எங்களையெல்லாம் கம்பன் வழிநடத்தி, செம்மைப் படுத்தி, செயலாற்ற வைத்த பெருந்தகை, பெரியவர் 'கம்பன் அறநெறிச் செல்வர்' திரு. ஜி. கே. எஸ் அவர்களுக்கு எங்கள் பணிவான வணக்கத்தை கூறியே ஆக வேண்டும். அவர் இன்னும் பன்நெடுங்காலம் வாழ்ந்து வழிகாட்ட இறையருளை இறைஞ்சுகிறோம்.

இனி மலர் உங்கள் கையில். படித்துச் சுவைத்து எங்களுக்கு எழுதுங்கள். அதுவே எங்களுக்கு ''டானிக்'' போல.

என்றும் உங்கள்

கோவை
10-2-2006

**நா. நஞ்சுண்டன்**
மலர்ப் பொறுப்பாளர்
(இணைச் செயலர்)

# சுந்தர காண்டம் – சிறப்புப் பார்வை 

'கம்பன் அறநெறிச் செல்வர்' ஜி.கே. சுந்தரம்

இராமாயணத்தில் பால காண்டம் பருவத்தால் பெயர் பெற்றது. அயோத்தி, ஆரண்யம், கிட்கிந்தா இடத்தால் பெயர் பெற்றவை, யுத்த காண்டம் செயலால் பெயர் பெற்றது. சுந்தர காண்டம் பண்பால் பெயர் பெற்றது என்பார்கள்.

இராமாயண காண்டங்களுள் சுந்தர காண்டம் பகவத் கீதையைப் போல பாராயணம் செய்வதற்குரியது.

வாழ்க்கையில் துன்பங்களும், நஷ்டங்களும் மன வேதனையும் மக்களுக்கு ஏற்படும் போது ஆன்மீகத் துறவிகளும். ஜோதிடம் கூறுபவரும் அவை நீங்கச் சுந்தர காண்டத்தைத் தினமும் படிக்கச் சொல்வார்கள். இது இப்பொழுதும் மக்கள் வாழ்க்கையில் நடைமுறையில் இருந்து வருகிறது.

இதற்கு, என்ன காரணம் என்று கூறினால் சீதைக்கும், இராமனுக்கும் ஏற்பட்ட துன்பங்கள் – பிரிவினால் வந்த வேதனை எல்லாம் மறைவதற்குத் துணையாக இருந்த நிகழ்ச்சிகள் இந்தச் சுந்தர காண்டத்தில் தான் ஏற்பட்டன என்பதுவே.

ஆரண்யத்தில் சீதை இராவணனால் வஞ்சனையாக கவரப்பட்டு அசோக வனத்தில் சிறை வைக்கப்படுகிறாள். அவளுக்கு அங்கு இராவணன் கொடுத்த தொல்லைகளும், ஏற்பட்ட துன்பங்களும் கதையைப் படிப்போருக்கு நன்கு தெரியும்.

ஆனால் இராமன் தன் மனைவிக்கு ஏற்பட்ட ஆபத்தையும் அவள் எங்கு இருக்கின்றாள் என்ற செய்தியும் ஜடாயு போன்றோர்களால் அறிவிக்கும் வரை அறியாது துன்பக் கடலில் மூழ்கி இருந்தான்.

பின்பு கிஷ்கிந்தையில் சுக்ரீவன், அனுமான் போன்றவர்களைச் சந்தித்த பின்புதான் இராமனுக்குத் தன் மனைவி சீதையை தேடிக் கண்டுபிடிக்க முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. இந்த நம்பிக்கை ஏற்படுவதற்கு முக்கியமான காரணமானான் அனுமன்.

சுந்தர காண்டத்தில் அனுமன், சீதை ஆகிய இருவரது பெருமையைக் கம்பன் விரிவாகப் பாடியுள்ளான்.

கிஷ்கிந்தா காண்டத்தில் இராமன் முதன் முதலில் அனுமனைச் சந்திக்கும் போது அனுமன் உரையாடலில் பெற்றிருந்த ஆற்றலை கண்டு மகிழ்ந்து அவனை ''சொல்லின் செல்வன்'' என்று புகழ்ந்தான்.

ஆனால், அனுமனது அந்தச் சொல்லாற்றல் சுந்தர காண்டத்தில் தான் மிகவும் வெளிப்படுகின்றது.

காட்சிப் படலத்தில் அனுமன் சீதையோடு உரையாடிய போதும் இராவணனோடு உரையாடுகின்ற போதும் அவனது சொல் வன்மை புலப்படுகின்றது.

உயிர் விடத் துணிந்த சீதையிடம் இராம நாமத்தைச் சொல்லி, தன்னை யாரென்று வெளிப்படுத்திக் கொண்டு அவளது உயிரைக் காத்த போதும் பின்பு இராமனது நிலைமையை சீதைக்கு எடுத்துக் கூறிய போதும் அனுமனின் பேசும் திறமையைக் கம்பன் நன்றாகப் பாடியுள்ளான்.

சீதையைக் கண்ட அனுமன் தனக்குள் சீதையைப் பற்றி எண்ணிய எண்ணங்களாக கம்பன் அனுமன் வாயிலாகப் பாடியிருக்கும் செய்திகள் அனுமனது சொல்லாற்றலை மேலும் வெளிப்படுத்தும்.

இராவணனை நேரில் சந்தித்த போது தன் தலைவன் இராமனது பெருமை விளங்குமாறும் அவன் வாலியை கொன்ற செய்தியைக் கூறி இராவணனுக்கு உள்ளத்தில் ஒரு அச்சத்தை உண்டாக்குமாறு பேசுவதும் அனுமனின் சிறப்பைக் காட்டும்.

அனுமன் சீதையைத் தூக்கி சென்று ராமனிடம் சேர்ப்பதாக கூறிய போது சீதை தன் சொல்லாலே யாவற்றையும் சுட்டெரிக்க முடியும். ஆனால் அது இராமனின் வில்லாற்றலுக்குக் களங்கத்தை உண்டாக்கி விடும் என்று கூறிய சொல்லில் அவளுக்குத் தன் கற்பின் மீது இருந்த நம்பிக்கையும் கணவன் மீது இருந்த உயர்ந்த எண்ணத்தையும் காட்டும்.

சுந்தர காண்டத் தொடக்கத்தில் கடல் தாவு படலம் பகுதியில் அனுமன் கடலைத் தாண்டுவதற்காக வானத்தில் கிளம்பிய போது ஏற்பட்ட மாற்றங்கள் தற்காலத்தில் சந்திரன் போன்ற மண்டலங்களுக்கு ராக்கெட் கிளம்பிச் செல்லும் விஞ்ஞான அடிப்படை செய்திகள் பொதிந்து உள்ளன.

அனுமன் வானில் புறப்படும் போது மைந்நாக மலை, சுரசை, அங்காரதாரை போன்ற தடைகளையும் கடந்து செல்கின்ற பகுதி சில சாப உண்மைகளையும் தெளிவு படுத்துகிறது.

விண்ணில் புறப்படும் வரை அனுமனுக்குத் தனது ஆற்றல் புரியாமல் இருந்தது. சாம்பன் போன்ற முதியவர்களின் ஊக்கத்தால் அவன் தன் பலத்தை உணர்ந்தான்.

இலங்கைக்குள் சென்று கும்பகர்ணன், இந்திரஜித் - விபீடணன் - இராவணன் - மண்டோதரி ஆகியோர் அவர்கள் உறங்கிக் கொண்டிருக்கும் போது அவர்களின் பெருமையும் பின்னால் யுத்தத்தின் போது என்ன நிகழப் போகிறது என்ற அறிகுறிகளையும் அவனால் புலப்படுத்தப் படுகிறது. சுந்தர காண்டம் வரை அனுமனுக்கு இராமனது மானுடத் தன்மை மிகுதியும் தெரிந்தது. சீதையைக் கண்டதும் தான் அவள் திருமகள் என்றும் இராமன் திருமாலே என்ற உறுதிப்பாடும் ஏற்பட்டது.

ஒற்றனாக யாரும் அறியாமல் இலங்கைக்கு சென்ற அனுமன் பின்பு இராவணனை எப்படியும் நேரில் பார்த்து விட வேண்டும் என்ற முடிவில் சோலையை அழித்து அதனால் இந்திரஜித் மூலம் பிணிக்கப்பட்டு இராவணன் முன்பு இழுத்துச் செல்லப்படுகிறான். இங்குத் தண்டனை கொடுக்க வரும் தீர்மானத்தின் போது தூதரைக் கொல்வதைக் தடுத்த வீடணனின் உயர்ந்த பண்பை அனுமன் அறிய முடிகிறது.

பின்பு வாலில் நெருப்பை வைத்த போது அதைக் கொண்டே யுத்த காண்டத்தில் செய்ய வேண்டிய பல அழிவுக் காரியங்களை அனுமன் செய்து முடித்து விடுகிறான். இதன் மூலம் அரக்கர்களுக்கு இராமனது வீரத்தை அறிய முடிந்தது.

இராமன் தந்த மோதிரத்தைச் சீதைக்கு அளித்த போதும், சீதை அளித்த சூளாமணியை இராமனிடம் அளித்த போதும் பிரிந்து துன்பப்படும் இருவரது உள்ளத்திலும் மகிழ்ச்சி ஏற்படக் காரணமாயிருந்தவன் அனுமன்.

சுந்தர காண்டம் அனுமனின் பெரிய தொண்டு உள்ளத்தை விளக்குவது. உலகப் பொருள்களின் மீது ஆசை கொள்ளும் ஒரு ஆன்மா கடவுளை அடைய முடியாதவாறு துன்பப்படுவதற்கு ஒப்பாக ஆரண்யத்தில் மாய மானைக் கண்டு ஆசைப்பட்ட, சீதை என்னும் ஆன்மா ராமன் என்னும் இறைவனைப் பிரிந்தது.

இறைவனை மீண்டும் அடைய ஒரு குருவின் துணை அவசியமானது என்பதற்கு இணையாகப் பிரிந்த சீதையை, குரு வடிவாக அமைந்த அனுமன் பக்குவப் படுத்துவதன் மூலமாக மீண்டும் இராமன் ஆகிய பரம் பொருளை அடைந்தது என்பதைச் சுந்தர காண்டத்தில் வைணவத் தத்துவமாகக் கூறுவார்கள்.

சுந்தர காண்டத்தின் அடிப்படைச் சுருக்கமே அதில் அமைந்திருக்கும் படலங்களுக்குள் நுணுக்கமாக பொதிந்து இருக்கிறது. இதன் விளக்கமாகப் பார்த்தால் சுந்தர காண்டத்தின் தொடக்கப் படலம் கடல் தாவு படலம். இதன் கடைசிப் படலம் திருவடி தொழுத படலம். இதனுள் பொதிந்திருப்பது ஒரு ஆன்மா பிறவிக் கடலைத் தாண்டினால் முடிவில் இறைவன் திருவடியை அடைய முடியும் என்பதே. இதைத் தான் திருவள்ளுவரும், *“பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேரா தார்”* என்றார்.

❋❋❋

# மைந்நாகமலை, சுரசை, அங்காரதாரை

*முனைவர் கா. பாஸ்கரன்*

கம்பராமாயணம் தமிழரின் பண்பாட்டு அடையாளம். இக்காப்பியத்தில் இராமனின் தூதுவனாகப் படைக்கப்பட்டிருக்கும் அனுமன் வலிமை பொருந்தியவனாகப் படைக்கப்பட்டுள்ளான். சுந்தரகாண்டத்தில் அனுமனின் பண்பு, பலம், புத்திகூர்மை, சமயோசிதச்செயல், அன்புணர்ச்சி போன்ற பல கூறுகள் வெளிப்படுகின்றன. *சீதையைக்* காணாது தேடி அனுமன் இலங்கைக்குச் சென்றபோது மகேந்திரமலை உச்சியிலிருந்து கடல் வழியாக இலங்கை நோக்கிச் செல்கிறான். அப்போது அனுமனுக்குப் பல தடைகள் ஏற்பட்டுக் குழப்பம் தீர்கிறது. இங்கு மலையரசனான மருட்டும் மைந்நாக மாலை, தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க அனுமனின் வலிமையை உணர்த்த, தூய சிந்தையளாக விளங்கும் சுரசை, அனுமன் செல்லும் போது வான் வழியை அடைத்து நின்ற அங்காரதாரை, என்ற அரக்கி ஆகிய மூன்று பாத்திரங்களை இங்கு அனுமன் செயலோடு ஒப்பு நோக்கி ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

சுந்தர காண்டத்தில் காவிய நாயகன் இராமனது வேண்டுகோளுக்கிணங்க கடத்தற்கரியக் கடலைக் கடந்து பகைப்புலமாகிய இலங்கைக்குச் சென்று, செயற்கரிய பெருஞ்செயல் செய்து சீதையைக் கண்ட வரலாறு சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. தலையாய தூதுவனான அனுமனுடைய ஆற்றலும், அறிவும், முயற்சியும், ஊக்கமும், எண்ணித்துணியும் திறமும், உரையாடல் திறமும் விரித்து உரைக்கப்பட்டுள்ளது. இக்காண்டத்தில் 14 படலங்கள் உள்ளன.

கம்பராமாயணம், சுந்தரகாண்டத்தில் கடல்தாவுபடலம் அனுமனின் செயற்கரிய செயல் கூறுகிறது. இப் படலத்தில் மைந்நாகமலை சுரசை, அங்காரதாரை ஆகிய பாத்திரங்கள் இடம் பெற்றுள்ளன. இப் படலத்தில் அனுமன் கடல் தாவிய செய்தி 94 பாடல்களில் பேசப்படுகிறது. மகேந்திர மலையில் நின்ற அனுமன் தாவிக் கடக்கப்பட்டது. தென்கடல். இராமனுக்கும் சீதைக்கும் தடையாக இருப்பதும் தென்கடலே. இக் கடலை அனுமன் தாண்டிய போது தம் உருவத்தைப் பன்மடங்கு பெரியதாகவும் அணுவினும் சிறியதாகவும் மிக்க ஆற்றல் உள்ளவனாகவும் படைக்கப்பட்டிருக்கிறான். எனவே கடல்கடக்க முற்பட்ட அனுமனுக்கு முன்னே மைந்நாகமலை சுரசை, அங்காரதாரை ஆகியோரால் ஏற்பட்ட இடர்களுக்கு எல்லையில்லை. அவர்களைத் தன் மதியாலும், தளராத ஊக்கத்தாலும் கடந்து வெற்றியோடு மீண்ட சிறப்பு.

“ அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடக்கண் இடுக்கப்படும் ”

– என்ற குறளின் கருத்துக்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

மகேந்திர மலையில் நின்றபோது அனுமன் கொண்ட பேருரு, அவன் பாய்வதற்காகத் பாதங்களை அழுத்திய போது மலையில் ஏற்பட்ட காட்சிகள், தன் உறுப்புகளை அமைத்துக் கொண்ட முறைகள் ஆகியவை எதிரில் ஏற்பட்ட இடர்களை அவனால் எளிதில் வெல்ல முடிந்தது. அனுமனது பேருருவத்தை,

"இலங்கையின் அளவிற்று அன்றால் இவ்உரு எடுத்த தோற்றம்
விலங்கவும் உளது அன்று" என்று விண்ணவர் வியந்து நோக்க
அலங்கல் தாழ் மார்பன் முன் தாழ்ந்து, அடித்துணை அழுத்தலோடும்
பொலன் கெழு மலையும் தாளும் பூதலம் புக்கமாதோ!"

என்று அனுமனின் தலை பிரம்மலோகத்தை அடைந்ததாகக் கம்பர் குறிப்பிடுகிறார். கடலைக் கடத்தற்கு அனுமன் கொண்ட வேகம் எல்லையற்றது. இந்நிலையில் அவனுக்கு ஏற்பட்ட இடையூறுகளால் அவன் அளவு கடந்த விரைவாகச் செல்லும் தேரைப் போல வேகமாகச் சென்றான். இதனைக் கம்பர் முப்பத்தெட்டு பாடல்களில் கூறுகிறார்.

அனுமனுக்குக் கடல்வழியில் செல்லும் போது மூன்று இடையூறுகள் உண்டாயின. அனுமனைக் கடல் கடக்க விடாமல் அரணாக நின்ற மைந்நாக மலையாலும், அரக்கி உருவில் தோன்றிய சுரசை நாகமாதாவும், அங்காரதாரை என்ற அரக்கியாலும் நிகழ்ந்தவை. மைந்நாகமலை நட்பும் நன்றியறிவும் கொண்டு கடற்கடவுளின் தூண்டுதலால் அனுமனுக்கு உதவி செய்யத் தோன்றியது. அதன் உண்மையை அறிந்து அதனிடம் நன்மொழி கூறி அகன்றான். சுரசை தேவர்களால் அனுமனின் வலிமையை அறிவதற்காக அனுப்பப் பெற்றவள். அவள் அகத்தே நட்பும் புறத்தே பகைமையுங் கொண்டு தோன்றினாள். அவளுக்கு எவ்வித இடையூறும் செய்யாமல், தான் மேற்கொண்ட அறவினைக்கு ஏற்ப நடந்து கொண்டான். ஆனால் அங்காரதாரையோ அகமும் புறமும் பகைமையையே கொண்டவள். இறுதியில் அவளைக் கொன்றே அனுமன் கடலைக் கடந்தான். இப்படலத்தில் இம் மூன்று நிகழ்ச்சிகளும் அழகுற வருணிக்கப்பட்டுள்ளன. ஆசிரியர் தாம் கொண்ட கருத்தை புலப்படுத்த, இயற்கையை ஒட்டிய காட்சிகளை வருணிக்கின்றான். இப்படலம் கதையில்லாமல் அதி வருணனையைக் கொண்ட பகுதியாகும். கம்பர் புராணங்களில் கூறப்படும் வரலாறுகளையே உவமையாகக் கூறுகிறார். முத்தலைக்கு, புட்பகம், கயிலை, மேரு, வாயு, சூரியன், சந்திரன், கலுழன் ஆகியவை இலங்கையை நோக்கி செல்வது போல அனுமன் செயல் காணப்பட்டதாகக் கூறுகிறார்.

இக் கட்டுரையில் அனுமனுக்கு இடையூறாக நின்ற இம் மூன்றையும் தனித்தனியாக அதன் தோற்றம், வரலாறு, அனுமனோடு உரையாடிய செய்திகள் ஆகியவை பின்வருமாறு ஆராயப்படுகிறது. அவையாவன :

1. மைந்நாக மலையின் தோற்றம்
2. சுரசையின் வரலாறு
3. அங்கார தாரையின் பகைமை உணர்வு

## மைந்நாகமலையின் தோற்றம்

மைந்நாகத்தின் காட்சிக்கு ஐராவதம், மாயோன், கூர்மஅவதாரம், உவணத்தரசு, பிரமன், அண்டம், திங்கள், ஆகியவை உவமையாகக் கூறப்படும். மைந்நாக எழுச்சியின் வாயிலாக, இக் காப்பியத்தில் உலகத் தோற்றம் நன்கு கூறப்பட்டுள்ளது. மைந்நாகத்தின் பருமன், நிறம், வளம் ஆகியவை நம் கண்முன் தோன்றுமாறு அமைந்துள்ளன. அவை மங்களகரமாக அமைந்திருப்பதும் அறியத்தக்கது.

அனுமன் விண்ணுயரத் தோள்களை உயர்த்தி கடலைக் கடந்து வரும்போது முதலில் அவன் இடையூறாக உணர்ந்தது மைந்நாகமலை. இம் மலை வானைத் தொடுமாறு எழுந்தது. இம்மலையோடு சந்தித்து உரையாடிய காட்சி 20 பாடல்களில் கூறப்பட்டுள்ளன. செம்பொன் மயமாக 1000 சிகரங்கள் மின்னவும், பறவைகளின் அரசன் கருடன் கடலைக் கிழித்து அமுதம் கவர்ந்து மேல் எழுவது போல் விண்ணைத் தொடுமாறு காட்சியளித்தது. மைந்நாகமலையின் தோற்றத்தை,

"ஆன்று ஆழ்நெடு நீரிடை ஆதியோடு அந்தம் ஆகித்
தோன்றது நின்றான் அருள் தோன்றிட முந்து தோன்றி
மூன்று ஆம் உலகத்தொடும் முற்று உயிர் ஆய மற்றும்
ஈன்றானை ஈன்ற சுவணத் தனி அண்டம் என்ன"

- என்று பொன்மயமான அண்டம் போல காட்சியளித்ததாகக் கூறுகிறார். திருப்பாற் கடலை கடைந்த போது எழுந்த சந்திரனைப் போலவும், செம்பொன்மயமான சிகரங்களின் முற்றங்களில் சுறாமீன்கள் தன் துணைகளோடு உலாவரவும், நட்சத்திரங்களால் சூழப்பட்ட நிலாவின் பெருமையைக் குலைக்கவும் இம் மலை வானைத் தொடுமாறு எழுந்தது. அனுமனுக்கு உதவ வேண்டும் என்ற எண்ணத்தால் கடலிலிருந்து உயரே எழுந்தபோது பனைமீன், திமில் மீன் போன்றவை மலையினின்றும் நீங்காமல் சுனைகளில் தொடர்ந்து துள்ளிக் கொண்டிருப்பதாகக் கூறுகிறார். கடலில் மூழ்கி எல்லா மணிகளையும் வாரியெடுத்துக் கொண்டு மேலே எழுகின்ற முத்துக்குளிப்பவனைப் போல் விண்ணைத் தொடுமாறு எழுந்து நின்றது. நீருக்கடியில் கிடந்த நச்சரவங்கள் ஐயங்களை அகற்றிக் கொண்ட ஞானிகளைப் போல வருத்தம் நீங்கி நன்றாகச் சுவாசிக்க மைந்நாகமலை வானைத் தொடுமாறு காட்சியளித்தது.

## மைந்நாகம் அனுமன் உரையாடல்

எதற்கும் சலிக்காத அனுமான் விண்ணும் மண்ணுமாக எழுந்து, மேலும் கீழும் பறந்து நிமிர்ந்து நின்ற மலையைக் கண்டு வியப்படைந்தான். இதனைக் கடந்து செல்ல இயலாது என்று

உணர்ந்த அனுமான் அதனைப் புரட்டித் தள்ளிவிட்டு மேல் எழுந்தான். கடலுக்குள் ஒளிந்து கிடந்த இம்மலை வருந்தி தன் உயரத்தைக் குறைத்து உள்ளம் நொந்தது. அனுமன் மீது கொண்ட அன்பினால் மலை மானுடவடிவம் கொண்டு அனுமனிடம் தன் வரலாறு கூறியது.

இந்திரன் ஆணையால் தனது வச்சிராயுதத்தால் மலைகள் அனைத்திற்கும் சிறகுகளை வெட்டியதால், அப்போது வாயுதேவன் அவனிடத்தில் அன்பு செலுத்துமாறு கடலுக்குள் சேர்த்துக் காத்தான். அனுமன் வாயுதேவனின் புதல்வனாகையால் அன்பின் தூண்டுதலால் நான் உதவிபுரிய விரும்புகிறேன் என்று கூறியது, மைந்நாகமலை. என் பொன்மயமான சிகரத்தில் இளைப்பாறிச் சென்றால், உயர்வு கிடைக்கும் என்று அனுமனிடம் கூறியது. இராமனின் தூதுவனாக வரும் உனக்கு நான் இளைப்பாறிச் செல்ல இடம் அளிப்பதால் உலகில் பெறுதற்கறிய பேறு வேறு எனக்கில்லை கடல் என மைந்நாகமலை கூறுகிறது.

தாயைக் காட்டிலும் சிறந்தவன் அனுமன் இம்மலையில் தங்கி விருந்துண்டு செல்லுவதே சிறப்பு. நண்பர்செய்யும் கடமை இது எனக் கூறியது மைந்நாகம். இதைக் கேட்ட அனுமன் மைந்நாகத்தைப் பார்த்துப் புன்னகைத்து இவன் குற்றமற்றவன் என்பதை உணர்ந்தான்.

இராமனிடத்துக் கொண்ட அன்பாலும் இலட்சியம் நிறைவேறாமல் ஓய்வு, உணவு வேண்டாம் எனவும் அனுமன் பதில் கூறுகிறான். உலகில் அன்பால் எதையும் சாதிக்கலாம். உயிரின் குணங்களில் அன்பு மேலானது என்ற அனுமன் கூற்று இங்கு குறிப்பிடத்தக்கதாகும். இராமன் இட்ட பணி முடிந்ததும் உனது விருந்தை ஏற்று கொள்வேன் எனக் கூறி அனுமன் மைந்நாகத்திடமிருந்து காற்றைப் போல விரைந்து செல்வதாக ஆசிரியர் கூறுகிறார்.

மைந்நாகமலை வெளியே எழுந்த காலத்திலும், அதன் சுற்றுப்புறங்களில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் கம்பரின் இயற்கையை நுனித்துணரும் ஆற்றல் வெளிப்படுகிறது. மைந்நாகமலைக்கும் அனுமனுக்கும் நடந்த உரையாடல் அவ்விருவரின் பெருந்தன்மைகளையும், கடமைகளையும், அறத்தன்மையையும் விளக்குகிறது. மைந்நாகத்தின் நன்றியுணர்ச்சிக்கும் அனுமனின் கடமையுணர்ச்சிக்கும் அடையாளமாக மைந்நாகமலை திகழுவது குறிப்பிடத்தக்கது.

*சுரசையின் வரலாறு*

மைந்நாகமலையோடு உரையாடிக் கடலைக் கடக்க முற்பட்டபோது இரண்டாவது தடையாக வருவது சுரசை ஆகும். அரக்கி உருவில் தன்னை மாற்றிய சுரசை தேவர்க்ளின் வேண்டுகோளால் அனுமனின் வலிமையை சோதித்து அறிய உருவாக்கப்பட்ட பாத்திரமாகும். உள்ளத்தில் அனுமன் மீது அதிக அன்பு கொண்டவள். சோதிக்க வந்தவள். போலி வேடங் கொண்டவள். தாயினும் அன்பு தாழ்ந்தவள். சுரசையின் இடையீடு ஏழு செய்யுட்களில் காணப்படுகிறது.

### சுரசையின் தோற்றம்

சுரசை பிளவுபட்ட வாயை உடைய அரக்கியின் உருவம் கொண்டவள். ஆணவம் கொண்டு அனுமனை உண்ண தலைமுட்டும் படி வானத்தை நோக்கி நின்றாள். சுரசையின் தோற்றம் பற்றி கம்பன் கூறும் போது

"பேழ் வாய் ஓர் அரக்கி உருக் கொடு பெட்பின் ஓங்கி
கோள் வாய் அரியின் குலத்தாய்! கொடுங் கூற்றும் உட்க
வாழ்வாய் ! எனக்கு ஆமிடம் ஆய் வருவாய் கொல்? என்னா
நீள் வாய் விசும்பும் தனது உச்சி நெருக்க நின்றாள் !" எனக் கூறுகிறார்.

என் வாய்வழியாக உள்ளே செல்வதைத் தவிர வேறு வழியில்லை என்றாள். ஆனால் அனுமனோ, இராமன் இட்ட கட்டளை முடிந்ததும் என்னை உண்ணலாம் என அனுமன் நட்போடு கூறினான். அண்டங்கள் பல புகுந்தாலும் நிரம்பப் பெறாத தனது வாயை அகலத் திறந்தாள். அனுமனும் அவள் வாய் சிறிதாகுமாறு வானளாவ நீண்டு வளர்ந்தான். ஆனால் தீடிரென உடல் சுருங்கி அவள் உடம்பில் சென்று ஒரு முறை சுவாசிக்கும் முன்னர் வெளியில் வந்து விட்டான். அவளை கொல்லாமல் ஏமாற்றி வெல்கின்றான். தேவர்கள் அனுமன் செயலைக் கண்டு மலர்தூவி வாழ்த்தினார்கள்.

அனுமன் செயலைக் கண்ட சுரசை அரக்கி வடிவை நீக்கி சுய வடிவம் பெற்றாள். தாயினும் பேரன்பு கொண்டு அனுமனின் வீரத்தைப் புகழ்ந்தாள். சுரசையின் நல்லாசியைப் பெற்றுக் கொண்டு அவருக்கு எவ்வித இடையூறும் செய்யாமல் அகன்றாள்.

மேற்குரிய செயலால் தேவமகளிர், கின்னரர்கள் ஆடிப்பாடி மகிழ்ந்தனர். அனுமனின் பெருமையை அனைவரும் புகழ்ந்தோதிய செய்தி விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

### அங்கார தாரையின் பகைமை உணர்வு!

அனுமன் மைந்நாகமலை, சுரசை ஆகியோரைக் கடந்து கடலில் செல்லும் போது மூன்றாவது இடையூறாக படைக்கப்பட்டிருப்பது அங்காரதாரை என்ற அரக்கியாகும். உள்ளும் புறமும் பகைமை கொண்டவள். அனுமனைக் கொல்ல வந்தவள். இயற்கையில் அச்சம் தரும் உருக் கொண்டவள். அறத்தை அருளோடும் தின்றவள். "பெண்பாலெனக் கருது பெற்றியொழி உற்றால் விண்பாலவர்க்கும் உயிர் வீடுறுதல் மெய்யே" என அனுமன் முன்னால் முழங்குகிறாள்.

தன் காலில் உள்ள சிலம்பின் ஒலி கடல் ஒலி போல ஒலிக்க. பிறைமதி போன்ற கோரை பற்களுடன், யானையின் தோலை உரித்து அணிந்திருந்தாள். அகன்ற வாயை உடையவளாகக் காட்சியளித்தாள். இதனைக் கம்பர்,

"துண்டப் பிறைத் துணை எனச்சுடர் எயிற்றாள்
கண்டத் திடைக் கறையுடைக் கடவுள் கைம்மா
முண்டத்து உரித்த உரியால் முளரி வந்தான்
அண்டத்தினுக்கு உறை அமைத்தனைய வாயாள்"

என அரக்கியின் வாயைக் குறிப்பிடுகிறார். இவளைக் கண்ட அனுமான் இவள் அறத்தையும், அருளையும் விழுங்கியவள் என நொடியில் உணர்கிறான். பெரிய பூமியிலும் நீண்ட வானத்திலும் தப்பிச் செல்ல வழிகாணாத அனுமன் வருந்தினான். குகை போன்ற அவள் வயிற்றைப் பிளக்கக் கருதினான். என் அருகில் வந்தால் தேவர்களும் உயிர் இழத்தல் உறுதி. எமனே எனது ஆசையைப் போக்க முடியாது என்று கூறி அனுமனை விழுங்குகிறாள். அறக்கடவுளும், தேவர்களும் அனுமன் இறந்தான் என்று எண்ணும் வேளையில் நரசிங்கம் தூணிலிருந்து பிறந்தது போல அரக்கியின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியில் வந்தான். யாரும் எதிர்பாராத இச்செயலால் அங்காரதாரை கதற, அவள் வயிற்றுக் குடல்களைப் பற்றிக் கொண்டு வானத்தின் மேல் சென்றான். இச்செயலால் தேவர்கள் ஆரவாரம் செய்தனர். பிரமன் மலர்மாரி பொழிந்தான். அழிவற்ற சிவபெருமானும் வியப்போடு பார்த்தார்.

அங்காரதாரை இறந்ததும் மேருமலை தனக்குக் கீழிருக்கும்படி அனுமன் மேலே உயர்ந்தான் எனக் கம்பர் கூறுகிறார். இவ்வாறு அனுமன் மூன்று இடையூறுகளையும் அன்பாலும் - வஞ்சனயைாலும் - கொடுமையாலும் கடந்து பவள மலையில் இறங்குகிறான்.

அனுமனுடைய ஆற்றலை உணர்த்தும் இப்படலத்தில் அவனுடைய பணிவு, பக்தி, அன்பு, சாதுர்யம், வீரம், வேகம், மனஞ்சோராமை, அறிவுணர்ச்சி, அறவழியில் செயலாற்றல் போன்ற சிறந்த பண்புகள் புலனாகின்றன. தேவர் முனிவர் முதலியோர் அவனைக் காத்து வருவதும், இராம நாமத்தில் அவன் கொண்டிருந்த திடநம்பிக்கையும், அறத்தின் தூதனாக அவனின் செயல்பாடுகளும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன.

❋❋❋

# இலங்கா தேவி

*முனைவர் வெ. செல்வசுப்பிரமணியன்*

## *முன்னுரை :*

பவளமால் வரையில் தங்கிய அனுமன் இலங்கை வளங்களையெல்லாம் நோக்கி வியக்கின்றான். இலங்காதேவியைச் சந்திக்கின்றான். இலங்கா தேவி இந்நகருக்குள் நுழையாதே எனக் கூறினாள். அனுமனது மேல் மூவிலை வேலை எறிகிறாள். அனுமன் அந்த வேலை முறித்து இலங்காதேவியைக் கரத்தால் தாக்குகிறான். அவள் கீழே விழுகிறாள். அறம் வெல்லும் பாவம் தோற்கும் ! என்று சத்தியம் கூறி விண்ணுலகத்திற்குச் செல்கிறாள். அச் செய்திகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## *அனுமன் இராம நாமத்தை நினைத்தல் :*

கம்ப நாடனின் இராம அவதாரத்தில் ஐந்தாவதாக வைத்துப் போற்றப்படும் சுந்தர காண்டத்தில் அனுமன் தொண்டின் உறைவிடமாகவும், பக்திக்கு ஒரு முழு வடிவமாகவும் விளங்குகிறான். சீதையைத் தேடும் முயற்சியில் ஈடுபடும் போது மைந்நாகன், சுரசை, அங்கார தாரை போன்ற அரக்கர்களைச் சந்திக்கின்றான்.

பேருருக் கொண்டு அனுமன் கடல் கடந்து செல்லும் போது அவனுக்கு உதவி செய்வதற்காக மைந்நாகமலை கடலில் தோன்றி, அனுமனைத் தன்மீது தங்கி இளைப்பாறிச் செல்ல வேண்டுகிறது. அனுமன், இராமன் திருத் தொண்டு செய்யும் நான் ஓய்வை விரும்பேன். திரும்பி வரும் போது உன்னைக் காண்கிறேன் என் சொல்லிக் கடந்து செல்கிறான். கடல் கடந்து செல்கிற அனுமனைத் தேவர்கள் ஏவலால் சுரசை தடுக்கிறாள். எனக்குப் பசியாய் இருக்கிறது. உன்னை உண்பேன் என்று வாயைத் திறக்கிறாள். அனுமன் அவள் வாய்க்குள் புகுந்து வெளியே வருகிறான். அங்கார தாரையைச் சந்தித்த அனுமான் அவள் உடலைப் பிளந்து வெளிப்படுகிறான். அரக்கி இறக்கிறாள். அனுமனை தேவர்கள் வாழ்த்துகின்றனர். வருகின்ற இடையூறுகள் எல்லாம் நீங்க வேண்டும் என்று கருதி இராம நாமத்தைத் தியானிக்கின்றான்.

> *" தேறல் இல் அரக்கர் புரி தீமை அவை தீர,*
> *ஏறும் வகை எங்கு உளது ? இராம என எல்லாம்*
> *மாறும், அதின் மாறு பிறிது இல்என வலித்தான் "*

இவ்வரக்கர்களை வெல்லுமாறு செய்தது இந்த இராம நாமமே என எண்ணினான். மயேந்திர மலையில் சம்பாதி அனுமனிடம் இராம நாமத்தின் மகிமையைக் கூறுவதை நினைக்கிறான்.

" எல்லீரும் அவ் இராம நாமமே
சொல்வீர் ; சொல்ல, எனக்கு ஓர் சோர்வு இலா
நல் ஈரப் பயன் நண்ணும்"

இராம பிரானையே பரம் பொருளாகக் காண்கிறான் அனுமன்.

" அன்னது காண்டும் யாம் எனா,
நின்றார் நின்றுழி, நீல மேனியான்
நன்று ஆம் நாமம் நவின்று நல்கினார்,
வன் தோளான் சிறை வானம் தாயவே"

இராமனின் பெருமை எல்லையற்ற தென்றும் அவனுக்குத் தொண்டு செய்வதையே தன் பிறவிப் பெரும் பயன் என்றும் கருதி வந்தான். சம்பாதிக்கு நடந்த அற்புதத்தில் இராமன் இல்லை. அப்படியிருக்க அவனது நாமத்தை உள்ளன்போடு பலரும் கூறியதும் அற்புதம் நிகழ்ந்து விட்டது. அதைக் கண் கூடாகக் கண்ட அனுமன் கடலைத் தாண்டவும், அரக்கர் கோட்டையுள் புகவும் வென்று மீளவும் அந்த ராம நாமமே தனக்கு உறுதுணையாகும் என்று உறுதியுடன் தெளிந்து விட்டான்.

## இலங்கா தேவியின் தோற்றம் :

இலங்கை நகரத்தில் உள்ள இலங்கா தேவியை அனுமன் காண்கிறான். இலங்கை நகரின் ஆயுளையே தன் ஆயுளாகக் கொண்டவள். தூண்கள் போன்ற தோள்களைப் பெற்றவள். எட்டுத் தோள்களையும், நான்கு முகங்களையும் உடையவள். ஏழுலகங்களையும் தொட்டு மீண்டு வரும் பேரொளியே நிறமாகப் பெற்றவள். சுழலும் விழியை உடையவள். பகைத்து மோதினால் மூவுலகத்தவரையும் அடியோடு கட்டிச் சீறும் காவலுக்கேற்ற வலிமை பெற்றவள். பொறுமை அற்றவள்.

எட்டுத் திசைகளிலிருந்தும் இந்நகரத்துள் புகுவதற்கு யாரேனும் வருகின்றனரா என்று பார்ப்பவள். கருமேகங்களைப் போல முழுங்குகின்றவள். கேட்டவர்க்கு அச்சத்தினைத் தரும் சிலம்பினை அணிந்த கால்களையுடையவள். மின்னலைப் போல் ஒளிவிடும் அணிகலன்கள் அணிந்தவள். வியர்வை வழியும் மேனியைப் பெற்றவள். அதனை

" வேல், வாள், சூலம், வெங்கதை, பாசம் விளி சங்கம்
கோல், வாள், சாபம், கொண்ட கரத்தாள் வட குன்றம்
போல்வாள், திங்கள் – போழின் அயிற்றாள், புகை வாயில்
கால்வாள்; காணின் காலனும் உட்கும் கதம் மிக்காள்"
– என்று வர்ணிக்கிறான் கம்பன்.

பஞ்சவர்ண ஆடையை அணிந்து கொண்டும் பாம்புகள் அஞ்சத்தக்க கருடனைப் போன்ற வேகத்தினையும் பெற்றவள். கருணை என்னும் குணம் சிறிதும் அற்றவள். பொன்னாடையை மேலாடையாகப் பூண்டவள். கடலிலுள்ள அழகிய பெரிய நத்தைகள் ஈன்ற முத்துக்களால் செய்யப்பட்ட மாலையை அணிந்தவள். மணம் வீசும் சந்தனக் குழம்பைப் பெற்றவள். சிறந்த இசை நூலுக்கு ஏற்ப யாழில் மீட்டப்படும் தாரம் என்னும் இசைக்குச் சமமான சொற்களை உடையவள். ஒலிக்கும் வண்டுகள் காந்தாரம் என்னும் பண்ணைப் பாடிக் களிப்பதற்கு இடமான மந்தார மலர்களால் ஆன மாலை அசையும் மகுடத்தினைப் பெற்றவள். உயிர்கள் யாவும் அஞ்சுகின்ற இலங்கை என்னும் மூதூருக்கு நன்மையைச் செய்பவள். அவ்வூர் கண்ணின் கருமணிக்குள் தங்க அதற்கு உறையாகிக் காக்கும் கண்களை உடையவள்.

### *இலங்காதேவி அனுமனை அழைத்தல் :*

இலங்காதேவி அனுமானைக் கண்டு நில்லாய் ! நில்லாய் என்று அதட்டி அவன் முன் நினைவிலும் வேகமாகச் சென்று நின்றாள். பொங்கும் அனல் போன்ற புகையைக் கக்கும் கண்களை உடைய இலங்காதேவி "அறிவற்றவனே! தகுதியற்றதைச் செய்தாய். அதற்கு நீ அஞ்சவில்லை போலும். இலையும் வேரும் தின்று திரியும் வானரங்களிடம் பெருங்கோபம் கொள்ளுதல் தேவையில்லை. வலிமையும் வனப்பும் கொண்ட இந்தப் பொன்மதிலைத் தாவி என்னைப் பகைத்துக் கொள்ளாமல் விலகிப் போ" என்றாள்.

### *அனுமன் இலங்காதேவியிடம் உரையாடுதல் :*

இன்பம் தரும் செயல்களில் கருத்தைச் செலுத்தாத அனுமான், உள்ளத்தே எழுந்தே கோபம் வெளிப்படாமல் அடக்கி, நல்ல நீதியினது நலத்தினாலே தான் செய்ய வேண்டிய செயலை உணர்ந்தான். ஊரைக் காண வேண்டும் என்னும் ஆசையினால் வருகின்றேன். எளியவனாகிய நான் இவ்வூருக்குச் சென்றால் உனக்கு என்ன நஷ்டம் என்று கேட்டான். இலங்காதேவி அனுமானை நோக்கி "போ" என்றவுடன் போகாமல் பதில் பேசிக் கொண்டு நிற்கிறாயே ! நீ யாரடா? திரிபுரம் அழித்த சிவபெருமானைப் போன்றவர்களாய் இருந்தாலும், இந்நகரை அடைய அஞ்சுவார்கள். ஆசைப்பட்டவுடன் நீ சென்று பார்க்கத்தக்க எளிய ஊரோ இது? என்று கூறி எள்ளி நகைத்தாள்.

சிரித்த இலங்கா தேவியைக் கண்டு அனுமான் மனத்துக்குள் சிரித்தான். அதையும் உணர்ந்த இலங்காதேவி, "சிரித்தவனே நீ யார்? யார் ஏவலால் இங்கு வந்தாய். உன் உயிர் பிரிந்தால், அதனால் உனக்கு என்ன பயன்? இவ்வளவு சொல்லியும் ஓடாமல் நிற்கின்றாயே" என்று கூறினாள். புகழாளனான அனுமான் இவ்வூருக்குள் செல்லாமல் திரும்பிச் செல்ல மாட்டேன் என்று கூறினான்.

### இலங்காதேவியின் சிந்தனை :

அனுமனைப் பார்த்த இலங்காதேவி இவன் உண்மையில் வானரம் அல்லன். வஞ்சனையில் கொண்ட வடிவம் போல் உள்ளது. எமனே என்னைக் கண்டால் சோர்ந்து போவான். இவனோ! பாற்கடலில் தோன்றிய விடத்தைக் குடித்த சிவனைப் போலச் சிரிக்கின்றான் என்று நினைத்து யோசித்தாள்.

### அனுமனும் இலங்கா தேவியும் போர் செய்தல் :

இந்த வானர வீரனான அனுமானைக் கொல்லாவிடில் இந்த இலங்கை மாநகர் அழியும் என நினைத்தாள். வெல்லும் வல்லமை இருந்தால் என்னை வெல்க ! செல்லும் வல்லமை இருந்தால் மதிலின் வாயில் வழியே முறைப்படி செல்க என்று கூறி மூவிலைச் சூலத்தை அனுமன் மீது வீசினாள்.

நினைத்ததை முடிப்பவனான அனுமான் மின்னலைப் போலத் தன் எதிரிலே வந்த சூலத்தை, பாம்பை வாயில் கவ்வி மேலெழுந்து வானத்தில் துண்டுபடுத்தும் கருடன் போல, கையால் பிடித்து உடைத்தான். அதனால் தேவர்கள் மகிழ்ந்தார்கள். இலங்காதேவி தன்னிடமுள்ள தெய்வத்தன்மை பொருந்திய மற்றைய ஆயுதங்களைக் கொண்டு போரிட்டாள். பெண்ணைக் கொல்லுதல் பழி தரும் என்பதை உணர்ந்த அனுமான் அவள் மீது பாய்ந்து அவளிடமிருந்த ஆயுதங்கள் அனைத்தையும் ஒன்றுவிடாமல் தன் கைகளால் பறித்து விண்ணிலே வீசி எறிந்தான். ஆயுதங்கள் தன்னிடமில்லாத இலங்காதேவி மேகம் போல முழக்கம் செய்தாள். குன்றுகளைக் கழற்சிக் காய்களாகவும், பந்துகளாகவும் கொண்டு ஆடவல்ல தன் கரங்களை ஓங்கிச் செந்தீப் பொறி சிதற அனுமானை அடித்தாள்.

### கையினால் அனுமான் அறைதலும், இலங்காதேவி மண்ணில் வீழ்தலும் :

இலங்காதேவி அடிப்பதற்கு முன்பே அவளுடைய எட்டுக் கைகளையும் தன் ஒரு கையால் பிடித்துக் கொண்டான் அனுமான். இவள் பெண். இவளைக் கொல்லுதல் பாவம் என்று நினைத்தவன் அவளது மார்பில் ஓர் அறை அறைந்தான். அதனால் இடியால் தாக்குண்ட மலை போல உயிரோடு மண்ணில் விழுந்தாள்.

விழுந்த இலங்கா தேவி வருந்தினாள். செந்நிறத்துக் குருதி வெள்ளத்திலே அழுந்தினாள். பிரமனின் அருளுரையை மனத்தில் நினைத்து எழுந்தாள். எல்லா உலகத்திலும் உள்ள உயர்திணை, அஃறிணை உயிர்கள் யாவும் தொழுகின்ற திருவடி பெற்ற இராமனின் தூதனான அனுமானிடம் சில செய்திகளைக் கூறினாள்.

## இலங்காதேவி தன் வரலாறு உரைத்து அனுமானிடம் விடை பெற்று ஏகுதல் :

ஐயனே! கேள் ! உலகங்களைப் படைத்த பிரமனின் ஆணையினாலே இவ்வூருக்கு வந்து இதைக் காத்து வருகின்றேன். என் பெயர் இலங்கை மாதேவி. நான் செய்யும் தொழிலினால் தவறு செய்து மனம் மயங்கி உன்னிடம் போரிடும் சிறு தொழில் செய்தேன். உயிர் வாழ்க என்று எனக்கு அருள் செய்வாயானால் ஓர் உண்மையை உனக்குத் தெரிவிக்கிறேன் என்றாள்.

"எத்தனை காலம் காப்பேன் யான் இந்த மூதூர் ? என்று,
முத்தனை வினவி னேற்கு, முரண்வலிக் குரங்கு ஒன்று உன்னைக்
கைத்தலம் அதனால் தீண்டிக், காய்ந்த அன்று, என்னைக் காண்டி;
சித்திர நகரம், பின்னே சிதைவது திண்ணம் என்றான்."

இந்த இலங்கை நகரை எவ்வளவு காலம் காப்பேன் என்று பிரமனை வினவியதில் மிக்க வலிமை பெற்ற ஒரு குரங்கு கையினால் அழித்து உன்னை வருத்தும். அன்றே நீ இலங்கையை விட்டு வந்து என்னைக் காண்பாய். அதன் பின்பு இலங்கை அழிவது உறுதி என்று பிரமன் உரைத்தான்.

"அன்னதே முடிந்தது ஐய! அறம் வெல்லும் பாவம் தோற்கும்
என்னும் ஈது இயம்ப வேண்டும் தகையதோ ? இனி மற்று உன்னால்,
உன்னிய எல்லாம் முற்றும், உனக்கும் முற்றாதது உண்டோ?
பொன்நகர் புகுதி என்னாப் புகழ்ந்து அவள் இறைஞ்சிப் போனாள்"

ஐயனே! பிரமன் சொன்னபடியே நிகழ்ந்தது. அறம் வெல்லும் - பாவம் தோற்கும் என்பதை இன்னமும் சொல்ல வேண்டுமோ? இனிமேல் நீ நினைப்பன யாவும் நிறைவேறும். உன்னால் செய்து முடிக்க முடியாதது எதுவும் இல்லை. பொன்னகரான இந்நகருக்குள் செல்க என்று கூறிய இலங்காதேவி அனுமனைப் புகழ்ந்து வணங்கி விட்டு பிரம்மலோகத்துக்குப் போனாள்.

அனுமான் அவள் சொன்னதைக் கேட்டு மகிழ்ந்து, 'வாய்மையே வெல்லும் ' என்பதை நினைத்தான். இராமனின் திருவடிகளை மனத்திலே வணங்கி, இழிந்தவர் வாழும் இலங்கையின் பொன்மதிலைத் தாவிச் சிறந்த பாலிலே சிறிதளவு மோர் சிந்தினதைப் போல நகருக்குள் புகுந்தான்.

❋❋❋

# சுந்தர காண்டத்தில் அனுமன்

- பழ பழநியப்பன்

## சுந்தரமான காண்டம் :

"சுந்தர காண்டத்திற்கு இப்பெயரை வைத்தது வால்மீகியேயாயிருந்தாலும், வேறு யாராயிருந்தாலும், பெயர் வைத்தவன் மிகப் பொருத்தமாகவே வைத்திருக்கிறான். இதுவே காண்டங்கள் அனைத்திலும் பேரழகு வாய்ந்தது."

- வ. வே. சு. ஐயர்

"நாமியை (பகவானை) விட
நாமா (பகவந்நாமா) பெரியது"

என்ற அற்புதத்தை நிகழ்த்திக் காட்டுகிற காண்டத்தை "சுந்தர-காண்டம்" என்பதுதானே பொருத்தமாக இருக்கும் ?

பக்தனே பகவானாக ஆகிவிடும் அளப்பரிய விசுவரூபத்தைக் காட்டுகிற காண்டம்தானே சுந்தர காண்டமாக முடியும் ?

இந்த இரண்டு சுந்தரமான சுருதியை ( சுருதி=வேத வாக்யம்) சுந்தர காண்டம் மூலமாக நமக்கு புரிபட வைக்கிற சுந்தரம் தான் அனுமன்.

## நிகழ்விடப் பெயரும், நிகழ்வுப் பெயரும் :

சுந்தர காண்டத்திற்கு ஏன் அப்பெயர் இடப்பட்டது என்பதனை சிந்திக்க வேண்டும். இராமாயணத்தின் பிற காண்டப் பெயர்கள் பொருத்தத்தோடு பார்ப்பது நலம் பயக்கும். அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம். கிஷ்கிந்தா காண்டம் மூன்றும் நிகழ்விடங்களை அனுசரித்து இடப்பட்ட பெயர்கள்; பால காண்டம், யுத்த காண்டம் இரண்டும் நாயகன் வாழ்வு நிகழ்வுகளை ஒட்டி இடப்பட்ட பெயர்கள். அப்படியாயின் சுந்தர காண்டம் எதை ஒட்டி அல்லது எதை அனுசரித்து அல்லது எதை விளக்கும் காண்டம்? நிகழ்விடப் பெயருமன்று; நிகழ்த்துபவன் பெயரும் அன்று.

நிகழ்விடப் பெயராக இக் காண்டத்திற்கு சூட்டியிருந்தால் இலங்கைக் காண்டம் என்பதே பொருந்தும். ஆனால் அடுத்த காண்டமாம் யுத்த காண்டமும் இலங்கையில் தான் முழுக்க முழுக்க நிகழ்வுகளைக் காட்டி, நிறைவில் அயோத்திக்கு இராமன் திரும்பிவந்து முடிசூடுவதை மட்டும் காட்டுவதால், இக் காண்டமும் நிகழ்விட முறையில் பெயர் சூட்டப் பெறின், இலங்கைக் காண்டங்கள் இரண்டாகி விடுமே! எனவே நிகழ்வின் அடிப்படையில் யுத்த காண்டம் எனச் சூட்டியது சரியே. இறுதிக் காண்டத்தை நிகழ்விடம் ஒட்டாது, நிகழ்வை ஒட்டிவிட்டதால், சுந்தர காண்டத்திற்கு நிகழ்விடத்தை ஒட்டி இலங்கைக் காண்டம் என்று பெயரிட்டிருக்கலாமே என்ற வினா எழுவது நியாயமே.

இலங்கைக் காண்டம் என்று பெயரிட்டு, இராவண ஏகாதிபத்தியத்தால் ஏற்றம் பெற்ற இலங்கையில் பெயரைச் சூட்ட வால்மீகி விரும்பியிருக்கமாட்டார் என்று ஆன்றோர்களும், வியாக்யானகர்த்தாக்களும் சொல்லும் காரணம் ஒப்புக் கொள்ளக் கூடியதாகவே இருக்கிறது.

எனவே நிகழ்வை ஒட்டிய பெயராக வேண்டுமானால், இக் காண்டத்தில் முக்கியமாக நிகழ்வு அனுமன் சீதையை அல்லது அவள் இருக்குமிடத்தைக் கண்டதேயாகும். அப்படிப் பார்த்தால் காட்சிக் காண்டம் என்பதே பொருந்தும். இக் காண்டத்தில் இம் முக்கிய நிகழ்வு நிகழும் படலத்தை காட்சிப் படலம் என்றுதானே கம்பன் பெயரிட்டுள்ளான்.

## *சுந்தரமா? சௌந்தர்யமா?*

தர்க்க ரீதியான இவற்றை ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு, ஆன்றோர்கள் சிலர் ஊக அடிப்படையில் இப்படித்தான் கருதி வால்மீகி பெயரிட்டிருக்கலாம் என்று சொல்லி, இன்று அதுவே புழக்கத்தில் இருந்து வரும் காரண ஊகங்களைப் பார்ப்போம்.

இராமபிரானின் சௌந்தர வடிவை விளக்கும் பகுதியை இடையிலே கொண்டிருப்பதால் அப் பெயர் பெற்றது என்று கொள்வதே ஏற்புடையது என்றும், பிராட்டியின் மனப்பண்பின் அழகை வடித்து இக் காண்டம் காட்டுவதால் இப்பெயர் பெற்றது என்றும் உ.வே.சா. நூலகப் பதிப்புக் குறிப்பு கூறுவது பலராலும் ஒப்புக் கொள்ளப் பெற்றுள்ளது. நாயகனின் புற அழகும், நாயகியின் அக அழகும் படம் பிடித்துக் காட்டப் பெறுவதால் சுந்தர காண்டம் என்று வியாக்யான பண்டிதர்கள் பலரும் சொல்லி வருகின்றனர். ~~இதை நாம் ஏற்க இயலாமையை மிகப் பணிவோடு காட்ட விரும்புகிறோம்.~~

## *வால்மீகி தமிழறிந்தவரா?*

சுந்தரம் என்பது தமிழ்ச் சொல் என்று கொள்வோர் உளர். அப்படிக் கொண்டால் ஆதி காவ்யம் வடமொழியில் எழுதப் பெற்றிருக்க, வால்மீகி தமிழ்ச் சொல்லால் வடமொழிக் காவ்யத்தில் பெயர் சூட்டியிருக்கக் கூடும் என்பது அறிவின் பாற்பட்டதாகப் படவில்லை. சுந்தரம் என்ற சொல் தேவார காலத்திலேயே பயிலப்படுகிறதே எனச் சிலர் வினவலாம். வால்மீகி எழுதிய காலம் அதற்கு மிக மிக மிக முந்தியது.

இந்த வாதம் கீழ் வரும் காரணத்தாலும் அடிபட்டு விடுகிறது. நாரணன் விளையாட்டு என்ற அருமையான இராமாயண அனுபூதி நூலை எழுதிய மாசி மாணிக்கவாசகம் எழுதுகிறார் :

மதுரைத் தமிழ்ச் சங்க கலாசாலைத் தலைமை ஆசிரியர் உ.வே. திருநாராயணய்யங்கார் கருதுகிறார்.



''சுந்தரம் என்பது வடசொல். இது தமிழில் வந்து வழங்குகிறது. வடமொழியாளர் குணிப் பொருள் அல்லது அழகு என்னும் குணப் பொருள் கொள்வதில்லை என்பது உண்மையே. தமிழில் புலவர்கள் அழகின் பரியாயமாகிய சௌந்தர்யம் என்னும் வடசொற் பொருளையும் சுந்தரம் என்ற சொல்லால் வழங்குவர்.

தமிழ்ப்புலவர்கள் வடமொழிக் குணிப் பெயர்களையும் பெரும்பாலும் குணப் பெயராலேயே வழங்குவர். இதனைத் தரித்திரம் என்னும் குணிப் பெயரால் தாரித்திரியம் ( வறுமை) என்னும் குணத்தையும், கவி (புலவன்) என்னும் குணிப் பெயரால் அக் கவியின் செயலாகிய கவிதை என்னும் பண்பையும், வீரம் என்னும் குணிப் பெயரால் வீரியம் என்னும் பண்பையும் வழங்குதல் காணலாம். ''வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்கான்'' என்பது போலப் பலவிடங்களில் கம்பர் வழங்குவார்.

இவ்வாறே சுந்தரம் என்ற குணிப் பொருளின் பெயர் (தர்மி வாசகம்) சௌந்தர்யம் (அழகு) என்ற குணப் பொருளின் பெயராக (தர்ம வாசகமாக) வழங்குதல் தமிழ்ப் புலமை பற்றிய வழக்கென்று தெளிவாக அறியலாம். வடமொழிப் புலமையுடையவராகிய வால்மீகி தாம் எழுதிய வடமொழிக் காவியத்துள் வடமொழி வழக்கிற்கு மாறாக சௌந்தரிய காண்டமென்று பெயரிடாது, தமிழ் வழக்குப் பற்றி சுந்தர காண்டம் என்று பெயரிடுவானேன் ?''

ஆகவே, வால்மீகி சுந்தர காண்டம் என்று பெயரிட்டது அழகை ஒட்டியதாக இருக்க முடியாது. இதற்கு மாணிக்கவாசகம் தாமே சிந்தித்த ஒரு புதுக் காரணம் சொல்கிறார்.

''பாம்பின் கால் பாம்பறியும்'' என்ற தமிழ்ப் பழமொழியை அவர் வடமொழியில் கையாண்டிருப்பதைச் சுட்டிக் காட்டி, வால்மீகி தமிழ் வழக்கு அறிந்தவர்; எனவே தமிழ் வழக்கை ஒட்டி சுந்தர காண்டம் என்று இட்டிருக்கலாம். வால்மீகி தமிழ் அறிந்தவர் என்பதற்கு ஆதாரம் காட்ட புறநானூற்றில் ''பருதி சூழ்ந்த இப்பயங்கெழு மாநிலம்'' என்று தொடங்கும் பாடலை எழுதியவர் பெயர் வால்மீகையார், வான்மீகியார் என்பது அப்படி எழுதப்பட்டிருக்கலாம். எனவே வால்மீகி தமிழ் அறிந்தவராயிருக்கலாம் என்று மாசி கருதுகிறார். இக்கருத்து மிக ஆழமான கால வரலாற்று ஆய்வுக்கும், தமிழ் வழக்குகளின் மூலம் பற்றிய ஆராய்ச்சிக்கும் உரியது.

## சுந்தரன் அனுமனா ?

இன்னுமொரு சாரர் சுந்தரன் என்று அனுமனுக்கு அவன் அன்னை அஞ்சனா தேவி இட்ட செல்லப் பெயராம் என்றும் இக்காண்டம் முழுமையும் செயலாற்றும் அனுமனின் முக்கியத்துவத்தைக் காட்டுவதே சுந்தர காண்டம் என்றும் கூறுவர். அப்படியாயின் சுந்தரம் காண்டம் என்றல்லவோ இடம் பெற்றிருக்க வேண்டும். மேலும் அனுமனுக்கு இப்பெயர் இருந்தது என்பது பௌராணிகக் கருத்தே தவிர சான்றேதும் கிடையாது— ஆதி காவ்யம் உத்தர காண்டம் உள்பட.

# சுந்தர காண்டத்தில் இந்திரசித்து

- முனைவர் க. இந்திரசித்து

கம்பன் காவியத்தில் காண்டங்களின் அமைப்பையும், அழகையும் ஆராய்வது மிகவும் அவசியமானதாகும். ஏனென்றால் காண்டங்களே காப்பிய மாளிகையின் தூண்களாகும். பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறு காண்டங்களில் சுந்தர காண்டம் மட்டுமே தனிச்சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றது. இந்தக் காண்டத்தின் அமைப்பும் அழகும் காப்பியப் பண்பும் பாத்திரப்படைப்பும் பிற காண்டங்களை விட விஞ்சி நிற்கின்றது என்றே கூறலாம். எல்லாவற்றையும் விட இக்காண்டத்தை மட்டுமே மனனம் செய்வோரும், இக்காண்டத்தை வீட்டில் வைத்திருந்தால் நன்மை பயக்கும் என்று கருதுவோரும், இக்காண்டத்தைத் தொடர்ந்து படித்து வந்தால் துன்பங்கள் தீரும் என்று எண்ணுவோரும் அதிகமாக உள்ளனர்.

மக்களின் ஆழ்மனதில் சுந்தர காண்டம் நம்பிக்கையின் குறியீடாகப் (Symbol) படிந்துள்ளது. சுந்தர காண்டத்தில் ஏராளமான நிகழ்ச்சிகளும், ஏராளமான கதாபாத்திரங்களும் வந்து வந்து போகின்றன. ஒவ்வொரு நிகழ்வும்(Incident) ஒவ்வொரு பாத்திரமும் (Character) அதனதன் அளவில் காண்டத்தின் வளர்ச்சிக்குப் பேருதவியாய் அமைந்துள்ளன. சுந்தர காண்டத்தின் அவைத் தலைவன் (Hero) அனுமன் என்றால் எதிர்நிலைத் தலைவன் (Anti Hero)இந்திரசித்து ஆவான். ஒரு பாத்திரத்தின் பண்பை ஆராய்வதற்கு அப்பாத்திரத்தின் எண்ணம் (Thoughts), சொல் (Word), செயல் (Action) ஆகியவைகளை ஆராய்தல் வேண்டும்.

### செயல்பாடுகள் :

அனுமன் இலங்கை மாநகருக்குச் சென்று இந்திரசித்தைக் கண்டு வியப்பது முதல் (சுந்தர. 235) அனுமனைச் சிறைப்பிடித்து இராவணன் அவைக்குக் கொண்டு செல்வது வரை (சுந்தர. 1081) சுந்தர காண்டத்தில் இந்திரசித்தின் செயல்பாடுகள் அமைந்துள்ளன. முதல் பார்வையிலேயே சொல்லின் செல்வன் அனுமன் இந்திரசித்தின் வீரத்தை உய்த்துணர்ந்து விடுகின்றான். அஃதன்றியும் அவன் உறங்கிய சூழலை குறிப்பால் உணர்த்துவதன் வாயிலாக அவனுடைய புலனின்ப நாட்டத்தையும் கம்பன் உணர்த்தி விடுகிறான். அனுமன் முதன்முதலாகப் பார்த்த போது இந்திரசித்து இருந்த நிலையை,

"முக்கண் நோக்கினன் முதல்மகன் அறுவகை முகமும்
திக்கு நோக்கிய புயங்களும் சில கரந்தனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானைப்
புக்கு நோக்கினன் புகை புகா வாயிலும் புகுவான்."

(சுந்தர. 234)

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. இதில் வரும் "ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானை" என்னும் வரி இந்திரசித்தின் இயல்பை விளக்கி நிற்கிறது. பல பெண்களுக்கிடையே உறங்கும் தன்மையை காரணம் கருதியே கம்பர் படைத்திருக்க வேண்டும். மனிதர்களுக்குரிய ஒழுக்க முறைமையை அவன் பின்பற்றவில்லை. மனைவியோடு மட்டும் அவன் வாழவில்லை. மற்ற பெண்களோடும் அவன் வாழ்கின்றான். அவன் புலனின்ப வேட்கை மிகுந்தவன். அவன் அழகுடையவன். அவனது அழகிற்கேற்ப அழகிகளின் மத்தியில் உறங்கிக் கொண்டிருந்தான் என்று திரு. பூவண்ணன் உரை வரைந்துள்ளார். ( பூவண்ணன் , கம்ப ராமாயணம், சுந்தர காண்டம், மூலமும் தெளிவுரையும் 101) படைப்பாசிரியரே பாத்திரப் பண்பை விளக்குதல், பாத்திரமே தனது சொல், செயல், முதலியவற்றால் தன்னை வெளிப்படுத்துதல் என இருநிலைகளில் பாத்திரப் படைப்புகள் அமைந்துள்ளன. இவ்விரண்டு நிலைகளிலுமே கம்ப ராமாயணத்திலுள்ள கதாபாத்திரங்களின் பண்புக் கூறுகள் கட்டமைக்கப்பட்டுள்ளன. தமிழில் பாத்திரப் படைப்பு விரிவாகவும், முழுமையாகவும் தனித்தன்மை பொருந்தியதாகவும் அமைந்துள்ள ஒரே காப்பியம் கம்ப ராமாயணம் தான் என்று மு. அருணாசலம் , ( முதற் காப்பியங்கள், தமிழ் இலக்கியக் கொள்கை, பகுதி 1. ப. 110) மனிதர், தேவர், வானரர், முனிவர், அரக்கர், கழுகு, கரடி, பறவை முதலான நூற்று அறுபத்து ஏழு பாத்திரங்கள் கம்ப இராமாயணத்தில் உள்ளன. (கா. அரங்கசாமி, கம்ப இராமாயணத்தில் நாடகக் கூறுகள் ப. 27) இதில் அரக்கர் இனத்தைச் சேர்ந்த பாத்திரப் படைப்பான இந்திரசித்து நன்மை, தீமை என்னும் இரண்டு பண்புகளும் நிறைந்தவனாகப் படைக்கப்பட்டுள்ளான். சுந்தர காண்டத்தில் இவனுடைய செயல்பாடுகளை ஆராய்ந்தால் 1. வீரம் 2. பாசம் என்னும் இரு இயல்புகள் இருப்பது புலப்படும்.

### *உரையாடல்கள் :*

மனிதன் பிறரோடு உரையாடும் போது வெளிப்படும் வார்த்தைகள் அவனுடைய எண்ணத்தை வெளிப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தவைகள் என்று உளவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். சொற்கள் மனித உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டும் கண்ணாடியாக விளங்குகின்றன. ஒரு படைப்பில் கீழ்க்கண்ட பன்னிரண்டு வகையான உரையாடல்கள் காணப்படுகின்றன என்று கூறுவர்.

1. செய்தி உரை
2. உறுதி உரை
3. ஓவிய உரை
4. எடுத்துக்காட்டு உரை
5. ஏளன உரை
6. தருக்க உரை
7. மயக்க உரை
8. மௌன உரை
9. வினா உரை
10. வேண்டுதல் உரை
11. தனி உரை
12. தனித்த உரை

போர்க்களத்தில் இந்திரசித்து அனுமனோடு பேசும் உரை ஏளன உரையாக உள்ளது. அவனுடைய உள்ளத்தில் கொழுந்து விட்டு எரியும் சினத்தை அவன் பேசும் வார்த்தைகள் வெளிப்படுத்துகின்றன. நீ மிகவும் சிறந்தவன்; இவ்வுலகத்தில் உனக்கு இணையானவர்கள் இல்லை. நீ எவருடனும் போரிட வல்லவன். நீ பெற்றுள்ள ஆயுளுக்கு இன்றே இறுதி நாள் என்பது உறுதி என்று ஏளனத்தோடு இந்திரசித்து அனுமனை நோக்கிக் கூறினான். இதனை,

> *"நல்லை நல்லை இஞ்ஞாலத்துள் நின்ஒக்க நல்லார்*
> *இல்லை இல்லையால் எறுழ்வலிக்கு யாரோடும் இகல*
> *வல்லை வல்லை இன்று ஆரும் நீ படைத்துள வாழ்நாட்கு*
> *எல்லை எல்லை என்று இந்திரசித்துவும் இசைத்தான்."* (சுந்தர. 1019)

என்னும் கம்பராமாயணப் பாடல் எடுத்துரைக்கின்றது. இவ் ஏளன உரை மூலம் இந்திரசித்தின் உள்ளத்தில் உள்ள சினத்தின் வெம்மையும் எதிரியாகிய அனுமன் மீது கொண்டிருந்த வெறுப்பும் வெளிப்படுகின்றன.

## *தனித்தன்மைகள் :*

சுந்தரகாண்டத்தில் படைக்கப்பட்டுள்ள இந்திரசித்தின் பாத்திரப் படைப்பில் காணப்படும் தனித்தன்மைகளைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்திக் கூறலாம்.

1. அனுமனின் போர் ஆற்றலை உணர்ந்து போர் செய்கின்றான் (சுந்தர. 1025, 1028)
2. எதிரியாகிய அனுமனை உயர்வாக மதித்துப் போற்றுகின்றான். (சுந்தர. 111)
3. போர் ஆற்றல் மிகுந்தவனாக அனுமனைப் புகழ்ந்து கூறுதல். (சுந்தர. 1019)
4. தம்பி மீது பாசம் கொண்டவனாகப் படைக்கப்பட்டுள்ளான். (சுந்தர. 1001, 1002, 1003, 1004)
5. தந்தைமீது மிகுந்த பாசம் கொண்டவனாக இருத்தல் (சுந்தர. 994, 1081)

தந்தை மீது இவன் கொண்டிருந்த அளவு கடந்த பாசமே இவனை, தீமை புரிவோர் பக்கம் சார்ந்திருக்கச் செய்தது. இந்திரசித்தின் பண்பு நலன்களை,

"தந்தை சொல்மிக்க மந்திரமில்லை - இதுதான் இந்திரசித்தன் கைக் கொண்ட வாழ்க்கை வேதம். தந்தையிடம் அவனுக்கிருந்த எல்லையற்ற பாசமும் பக்தியும் இராவணனுடைய எந்தச் செயலையும் ஆராய்ந்து பார்க்க அவனை அனுமதிக்கவில்லை . . . . பண்பு நலன்களை ஒப்பிடும் பொழுது இராமனுக்கு நேர் எதிரானவன் இந்திரசித்தன். ஆனாலும் தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்ற தத்துவத்தில் இந்திரசித்தன் இராமனுக்கு இணையாக வந்து நிற்கின்றான். இது கசப்பான உண்மை. ஆனாலும் யாராலும் மறுக்க முடியாத உண்மை." என்னும் பகுதியில் விளக்கிக் கூறுவர். (தமிழருவி மணியன், கம்பர் காட்டும் இந்திரசித்தன், ப - 16)

எனவே, சமதக்கின முனிவரிடம் பரசுராமன் கொண்டிருந்த பாசத்தையும், தசரதனிடம் இராமன் கொண்டிருந்த அன்பையும், இராவணன் மீது இந்திரசித்து கொண்டிருந்த பேரன்பையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்திரசித்தின் தனித்தன்மை புலப்படும். மற்றவர்களின் தந்தையர்கள் அறம் சார்ந்து நின்றார்கள். அதனால் அவர்களைச் சார்ந்து நின்ற பரசுராமனும், இராமனும் போற்றப்படுகின்றனர். ஆனால் அறம் சாராமல் நின்ற இராவணனைச் சார்ந்து நின்ற காரணத்தால் இந்திரசித்து ஒரு படி தாழ்ந்து நிற்கின்றான், இரத்தப் பாசத்திற்கு முதலிடம் கொடுத்து, அறத்தைப் புறக்கணித்துப் பகைவர்களுக்கு தன் மாயத்தால் தாங்க முடியாத பல தொல்லைகளைக் கொடுத்தவன் இந்திரசித்து என்று ஆய்வாளர்கள் இவனைப் பற்றி மதிப்பீடு செய்கின்றனர். (தி. வே. கோபாலையர், இராமாயணத்தில் தலைமைப் பாத்திரங்கள் , ப. 175)

*பாசம்:*

இந்திரசித்து அனுமனோடு போரிடச் சென்ற பொழுது இறந்து கிடந்த தன் தம்பி அக்ககுமாரனைக் கண்டு, கண்ணீர் சிந்தி, வருந்தினான். கோபத்தினால் சிவந்த கண்களை இறந்து கிடந்த தம்பியின் மீது சூழ்ந்து நோக்கினான். (சுந்தர. 1001, 1002, 1003, 1004). இதன்மூலம் இந்திரசித்து தன் தம்பியின் மீது கொண்டிருந்த அளவில்லாத பாசம் வெளிப்படுகின்றது. அதே போலவே தந்தையின் மீதும் மிகுந்த பாசம் கொண்டவனாக இந்திரசித்தன் படைக்கப்பட்டுள்ளான். அனுமனின் வலிமையை அறிந்த பிறகும் அவனைக் கொல்லப் படையை அனுப்பியது, எதிரியின் வலிமையை அறியாமல் படை எடுத்தது போன்ற தவறுகளை இராவணன் செய்த போதும் கூட இராவணன் மீது கொண்டிருந்த பாசத்தால் தான் போருக்குச் சென்று அனுமனை அழித்து வருவேன் என்று இந்திரசித்து உறுதி கூறினான். இதனை, "ஆயினும் ஐய" (சுந்தர. 994) என்ற பாடல் உணர்த்துகின்றது. அஃதன்றியும் அனுமனை பிரமன் கணையினாலே சிறைப்படுத்தி இராவணனிடம் கொண்டு சேர்ப்பித்தான். பெருமைக் குணம் கொண்ட அனுமனைக் கட்டி, போரிலே புகழ் பெற்ற இந்திரசித்து உலகம் மூன்றையும் தவத்தின் பயனாய் அரசாண்டு வரும் இராவணன் அவைக்கு அழைத்துச் சென்றான். (சுந்தர. 1081)

*வீரம் :*

சுந்தர காண்டத்தில் இந்திரசித்தன் வீரம் அனுமனோடு போரிட்ட பொழுது வெளிப்படுகின்றது. அரக்கர் படைகளை அழித்து, தம்பி அக்ககுமாரனை கொன்ற அனுமனோடு போரிடுவதற்காக இந்திரசித்தன் போர்க்களத்திற்கு வந்தான். அனுமனோடு இந்திரசித்தன் போர் புரிந்த நிகழ்ச்சியை கம்பன் சுந்தர காண்டத்தில் ஏறத்தாழ இருபத்தெட்டு பாடல்களில் விவரித்துள்ளான். ஊழிக்காற்றைப் போல் வேகமாகச் செல்லும் குதிரைகள் பூட்டிய வண்டியில் வந்து இந்திரசித்தன் அனுமன் மீது அம்பு செலுத்தினான்.

"ஊழிக் காற்று அன்ன ஒரு பரித்தேர் அவண் உதவ
பாழித் தோளவன் அத்தடந்தேர் மிசை பாய்ந்தான்
ஆழிப் பல் படை அனையன அளப்ப அருஞ்சரத்தால்
வாழிப் போர் வலி மாருதி மேனியை மறைத்தான்" (சுந்தர . 1025)

"நூறு நூறு போர் வாளி தொடைக் கொடு நொய்தின்
மாறில் வெஞ்சினத்து இராவணன் மகன் சிலை வலித்தான்.
ஊறுதன் நெடுமேனியில் பல பட ஓங்கி
ஏறு சேவகன் தூதனும் சிறிதுபோது இருந்தான்" (சுந்தர - 1028)

என்பன போன்ற பாடல்களில் இந்திரசித்தன் அனுமனோடு போரிட்ட திறத்தை கம்பன் வருணிக்கின்றான். தீமையின் பக்கம் இந்திரசித்தன் சார்ந்து நின்றாலும் அவனுடைய வீரம் போற்றுதலுக்குரியதாகும். இறுதியல் இந்திரசித்து எய்திய அயன் படையை மதித்து அனுமன் சிறைப்பட்டான்.

## *சுந்தர காண்ட வளர்ச்சியில் இந்திரசித்தன் பங்கு:*

சுந்தர காண்டத்தில் அனுமன், இலங்காதேவி, கும்பகருணன், வீடணன், சீதை, இராவணன், திரிசடை, சம்புமாலி, அக்க குமாரன் போன்ற பாத்திரங்கள் படைக்கப்பட்டிருந்தாலும் இந்திரசித்தே காண்டத்தின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்கின்றான். நன்மை, தீமை என்னும் இரண்டு குணங்களின் ஈர்ப்பால் படிப்பவர் மனநிலையிலும் காப்பிய நிலையிலும் மாபெரும் திருப்பங்களை ஏற்படுத்தியவன். சுந்தர காண்டத்தில் நான்கு இடங்களில் நான்கு இயல்புகளோடு இவன் படைக்கப்பட்டுள்ளது காப்பிய வளர்ச்சிக்கு அரண் செய்துள்ளது. அனுமன் முதன்முதலாக இந்திரசித்தை பார்த்த உடனேயே அவனுடைய முகப்பொலிவைக் கண்டு வியப்படைகின்றான். சிவபெருமானுடைய மகன் முருகன் ஆறு முகங்களையும் பன்னிரு கைகளையும் மறைத்து ஒரு முகத்தையும் இரண்டு கைகளையும் கொண்டு பிறந்ததைப் போல இந்திரசித்து உள்ளான். சிங்கம் போன்ற இவன் அரக்கன் மகனோ? அல்லது சிவனின் மகனோ? அல்லது வேறு எவனோ? என்று எண்ணி வியப்பதோடு இராமனும் இலக்குவனும் இவனோடு பல நாள் போர் செய்ய வேண்டி வரும் என்று அனுமன் நினைத்தான். இவனைத் துணைவனாகப் பெற்ற இராவணன் மூன்று உலகங்களையும் வென்றது ஓர் எளிய செயலே ஆகும் என்பன போன்ற கருத்துக்கள் அனுமன் உள்ளத்தில் தோன்றியது. ( சுந்தர 234, 235, 236) கிங்கரரும், சம்புமாலியும், அக்க குமாரனும் இறந்தனர் என்று கேள்விப்பட்ட உடனேயே இந்திரசித்து இராவணனைச் சென்று சந்திக்கின்றான். அப்போது தந்தையிடம் அவன் பேசும் பேச்சு அவன் பாசத்தை உணர்த்துகின்றது.

"ஆயினும் ஐய நொய்தின் ஆண் தொழில் குரங்கை யானே
ஏயெனும் அளவில் பற்றித் தருவேன் இடரென்று ஒன்றும்
நீயினி உழக்கற்பாலை அல்லை நீடுயிருத்தி என்னா
போயினன் அமரர் கோவைப் புகழொடு கொண்டு போந்தான்" (சுந்தர 994)

என்ற பாடல் ஆண் தொழில் புரியும் குரங்கை "ஏய்" என்னும் நேரத்தில் எளிதாகப் பிடித்து வருவேன் என்று இந்திரசித்தன் தன் தந்தையிடம் உறுதி கூறுகின்றான்.

சுந்தர காண்டத்தில் 1. கடல்தாவு படலம், 2. ஊர்தேடு படலம், 3. காட்சி படலம், 4. நிந்தனைப் படலம், 5. உருக்காட்டுப் படலம், 6. சூளாமணிப்படலம், 7. பொழில் இறுத்தப் படலம், 8. கிங்காரர் வதைப்படலம், 9. சம்புமாலி வதைப் படலம், 10. பஞ்ச சேனாபதிகள் வதைப்படலம், 11. அக்க குமாரன் வதைப்படலம், 12. பாசப்படலம், 13. பிணி வீட்டு படலம், 14. இலங்கை எரியூட்டுப் படலம், 15. திருவடி தொழுதபடலம் என்னும் பதினைந்து படலங்கள் இடம் பெற்றுள்ளன. ஏறத்தாழ 1298 பாடல்கள் இக் காண்டத்தில் அமைந்துள்ளன. ஊர் தேடு படலம், காட்சி படலம், நிந்தனைப்படலம் என்னும் மூன்று படலங்களில் இந்திரசித்து தந்தை மற்றும் தம்பி மீது கொண்ட பாசம் இப் படலத்தில் வெளிப்படுகின்றது. அனுனோடு இந்திரசித்து நிகழ்த்திய போரின் மூலம் அவனுடைய வீரம் சுட்டிக்காட்டப் படுகின்றது. அனுமனைச் சிறைப்படுத்தி இராவணனிடம் ஒப்படைக்கின்ற போது அனுமனுக்கு இராவணனைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படுகின்றது. அதன் மூலம் அனுமனுக்கு தன் வீரத்தை உணர்த்திக் காட்டும் சந்தர்ப்பத்தை இந்திரசித்து வழங்குகின்றான். சுந்தர காண்டத்தின் தொடக்க நிலை வளர்ச்சிக்கு இந்திரசித்தின் பாத்திரப் படைப்பு பெரிதும் துணை புரிகின்றது. சுந்தர காண்டத்தின் கதாநாயகன் அனுமன் (Hero) என்றால் எதிர்நிலை நாயகன் (Anti Hero) இந்திரசித்து ஆவான். தந்தை தசரதனின் சொல் கேட்டு நடந்த இராமனைப் போல் தந்தை இராவணனின் சொல் கேட்டு நடந்த இந்திரசித்து தனிச்சிறப்பு வாய்ந்தவன் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

❋❋❋

## விடணன் – திரிசடை

*புலவர் நா. அரங்கநாதன்*

<u>வீடணன்</u> : சுந்தரகாண்டத்தில் வீடணன் பங்கு சிறிதளவே எனினும் அப்பெருமகனை முதன் முதலில் காண்பது இங்குதான். கடல் கடந்து இலங்கைக்கு வந்த அனுமான், எங்கும் சீதாபிராட்டியைத் தேடி செல்கிறான். இராவணன், இந்திரஜித்தன், கும்பகர்ணன் ஆகியோர் மாளிகைகளை எல்லாம் பார்த்து விட்டு வீடணன் மாளிகைக்கு வருகிறான். வீடணனைப் பார்க்கிறான். வீடணன் மாளிகையுள் புகுந்தான் என்பதைக் கம்பன் கூறும் பாடல்:

*"வேந்தர், வேதியர், மேலுளோர், கீழ் உளோர் விரும்பும்*
*போந்த புண்ணியன் கண் அகன் கோயிலுள் புக்கான்"*

வீடணன் எனப் பெயர் குறிப்பிடாமல், அரசர், அந்தணர், மேலோர், கீழோர் எல்லோரும் விரும்புமாறு வந்து பிறந்த புண்ணியமே வடிவானவன் என வீடணனை அறிமுகப்படுத்தும் கம்பனைப் போற்றத் தோன்றுகிறதல்லவா?

*" கரு நிறத்தோர்பால், வெளித்து வைகுதல் அரிதென அவர் உருமேவி,*
*ஒளித்து வாழ்கின்ற தருமன் அன்னான் தனை உற்றான்"*

என்பதும் கம்பன் வீடணனைப் பற்றிக் கவி கூற்றாகக் கூறுவதே. தருமத்தின் நிறம் வெண்மை என்பது மரபு. கருமை நிறம் கொண்ட அரக்கர்களுக்கு மத்தியிலே வெண்மை நிறம் கொண்ட அறம் எப்படி வாழ முடியும்? கருமைப் பின்னணியிலே அறம் பளிச்சென்று தெரியுமே? என்பதால் அந்த அரக்கர்களுடைய கரிய நிறத்தைப் பெற்று அறம் ஒளித்து வாழ்வதைப் போல வாழும் வீடணனை அனுமன் பார்த்தனாம். தருமத்தின் தனிமை தீர்த்தவன், ஒளித்து வாழ் தருமம் அன்னானை உற்றான் என்பது எத்தனை பொருத்தம்! தருமத்தை தருமம் இனம் கண்டு கொள்வது சுலபம் தானே ! அதனால்தான் "அவன் உணர்வினைத் தன் உணர்வினால் உணர்ந்தான்" என்று கம்பன் உய்த்துணர்ந்து கூறுவதைப் பார்க்கின்றோம். ஒத்த உணர்வு கொண்டவர்கள் தாம் பேசிப் பழகுவதற்கு முன்பு, அவர்களது மனங்கள் கண்டு, உணர்ந்து பழகத் தொடங்கி விடுகின்றன. தன் உணர்வினால் வீடணனை உணர்ந்த அனுமன் மேலும் கூறுகிறான். "குற்றம் இல்லதோர் குணத்தினன் இவன்" எந்தக் குற்றமும் இல்லாத நற்குண நம்பி இவன் என்பது அனுமன் கருத்தாகும். முதன்முதல் வீடணனை நமக்கு அறிமுகப்படுத்தும் கம்பன் கவியுளத்தைப் போற்றத் தோன்றுகிறதல்லவா?

பிறகு, பிராட்டியைப் பார்த்துப் பேசி, அசோக வனத்தை அழித்துத் தன்னைப் பிடிக்க வந்த அரக்கர்கள் அனைவரையும் கொன்று, இந்திரஜித்தனது பிரம்மாத்திரத்தால் கட்டுண்டு, இராவணனுக்கு எதிரில் நின்ற அனுமன் பேசியதைக் கேட்ட இராவணன், கோபம் மிக்கவனாய், வீரர்களை நோக்கி இவனைக் கொல்லுங்கள் என்று கட்டளையிட்டான்.

"கொல்மின் என்றனன் கொல்லியர் சேர்தலும்
நில்மின் என்றனன் வீடணன் நீதியான்"

இராவணனது உத்திரவைக் கேட்ட உடனே கொலையாளிகள் அனுமனைச் சூழந்து கொண்டு, கொல்வதற்கு நெருங்கினர். அதைக் கண்ட வீடணன் நில்லுங்கள் என்று அவர்களைத் தடுத்தான். கொலையாளிகளும் விலகி நின்றனர். வீடணன் எழுந்து நின்று, தனது நீண்ட கைகளால் இராவணனை வணங்கி விட்டு "நீதியாய், மூண்ட கோபம் முறையது அன்றாகும்" என்றான். நீதியாவும் தெரிந்த அண்ணலே! அனுமன் மீது கொண்ட கோபம் முறையல்ல என்று கூறி மேலும் பேசலானான். வீடணனை நீதியான் என்றது கருதத் தக்கது.

"அந்தணன், உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல்
தந்தவன் அன்புக்கு ஆன்ற தவநெறி உணர்ந்தக் தக்கோய்!
இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ இயம்பு தூது
வந்தனென் என்ற பின்னும் கோறியோ மறைகள் வல்லோய்"

பிரமனைக் குறித்துத் தவம் செய்து, அவன் தந்த வரபலத்தால் மூன்று உலகங்களையும் ஆட்சி புரியும் தகுதி படைத்தவனே! தவநெறியை உணர்ந்து, இந்திரனைப் போன்ற செல்வாக்குடன் வாழும் நீ வேதங்கள் அனைத்தையும் கற்றுணர்ந்தவன் அல்லவா? "தூதனாக வந்தேன்" என்று அனுமன் கூறியதைக் கேட்ட பின்னும் அவனைக் கொல்ல எண்ணுதல் நல்லதோ?

"பூதலப் பரப்பின், அண்டப் பொருண்டினுள், புறத்துள் பொய்தீர்
வேதம் உற்று இயங்கு வைப்பின் வேறுவேறு இடத்து வேந்தர்
மாதரைக் கொலை செய்தார்கள் உணர் எனவரினும் வந்த
தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்?"

இந்தப்பூ மண்டலத்திலும், வேறு அண்டங்களிலும், குற்றமற்ற வேதங்களைக் கற்றறிந்தவர்களான வேறு வேறு வேந்தர்கள் வாழும் இடங்களிலும் பெண் கொலை செய்தவர்கள் உண்டு எனப் பேசப் பட்டாலும் வந்த தூதுவர்களைக் கொன்றவர்கள் எவர் இருக்கின்றனர்?

"பகைப்புலன் நணுகி உய்த்தார் பகர்ந்து, பற்றார்
மிகைப்புலன் அடக்கி, மெய்ம்மை விளம்பு நல் விரதம் பூண்ட
தகைப்புலக் கருமத்தோரைக் கோறலின் தக்கார் யார்க்கும்
நகைப்புலன் பிரிதுண்டாமோ? நம் குலம் நவை யுண்டாமே?"

பகைவர் நாட்டை அடைந்து, தம்மை அனுப்பிய தனது தலைவன் கூறியவைகளைக் கூறி, பகைவர்களும் கேட்டு தெளிவடையுமாறு, உண்மையை உரைப்பதனையே விரதமாகக் கொண்டு, திசைக் கருமம் திருத்தும் தூதுவர்களைக் கொல்வது தகுதியுடைய நல்லோர் யாருக்கும் சிரிப்பையுண்டாக்குமே! (ஏளனச் சிரிப்பு) தவிர நமது குலத்துக்கும் பழியையல்லவா உண்டாக்கும். வேறென்ன நன்மை!

> "முத்தலை எஃகன், மற்றை முராந்தகன், முனிவன், முன்னா
> அத்தலை நம்மை நோனா அமரர்க்கும், நகையிற்றாமால்
> எத்தலை உலகும் காக்கும் வேந்த! நீ வேற்றோர் ஏவ
> இத்தலை எய்தினானைக் கொல்லுதல் இழுக்காம் இன்னும்"

சூலபாணியான சிவன், முரனை அழித்த திருமால், பிரமன் மற்றும் நம்மை வெறுத்து வாழும் தேவர்களும் ஏளனமாகச் சிரிப்பார்களே! மூவுலகையும் ஆளும் அரசே! அந்நியர்கள் அனுப்ப வந்த தூதனைக் கொல்லுதல் குற்றமல்லவா?

> "இளையவள் தன்னைக் கொல்லாது, இரு செவி மூக்கோடீர்த்து
> விளைவு உரை என்று விட்டார் வீரராய் மெய்ம்மை ஓர்வார்
> களைதியேல் ஆவி நம் பால் இவன் வந்து கண்ணின் கண்ட
> அளவுரையாமல் செய் தியாதி என்று அமையச் சொன்னான்."

நமது தங்கையான சூர்ப்பனகையைக் கொல்லாமல், காது, மூக்குகளை அறுத்து, இங்கு நடந்ததை உன் அண்ணனுக்குச் சொல் என்று கூறி அனுப்பி வைத்து இராம, இலக்குவர்கள் உண்மையை உணர்ந்த மெய்வீரர்களல்லவா? தூதுவந்த அனுமனைக் கொல்லுவாயானல், இங்கு வந்து தான் கண்டவைகளை அவர்களுக்குச் சொல்ல இயலாமல் போகுமல்லவா! எனவே இவனைக் கொல்வது சரியல்ல என்ற பலவகை நியாயங்களை வீடணன் எடுத்துக் கூறினான். வீடணனை பார்த்தவுடன் இவன் குற்றமில்லாத குணத்தினான் எனவும் நீதியான் எனவும் கூறியதற்கேற்ப இராவணனுக்கு நியாயத்தை எடுத்துக் கூறிதான் நீதியைக் கடைப் பிடித்த வீடணனைப் பார்த்தோம். "நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லால், சாதியால் வந்த சிறு நெறியறியான்" எனப் பின்பு கும்பகருணன் கூறுவதைக் கேட்போம். அனுமனைக் கொல்லத் தொடங்கிய இராவணனும் மனம் திருந்துமாறு பேசிய வீடணனை அறிவு மிக்கவன் எனக் கருதும்படி அவனுடைய சொல்லாற்றல் இருப்பதைப் பார்க்கிறோம்.

### *திரிசடை :*

இப்படிப்பட்ட நல்லவன் மகள்தான் திரிசடை. சுந்தர காண்டத்தில் இங்குதான் திரிசடையைக் காண்கிறோம். "இன்சொலின் திருந்தினாள்" என்றும் அன்பினால்தாயினும் இனியவள் என்றும் கம்பன் சிறப்பித்துக் கூறுவதைக் காண்கிறோம்.

"தூய நீ கேட்டி என் துணைவியாம்" என்று சீதா பிராட்டி கூறுவதால், பிராட்டிக்குத் துணையாக அவ்வப்போது ஆறுதல் கூறித் தெளிவிக்கும். திரிசடை அரக்கமாதர்களுக்குள், தெய்வப்பிறவி எனத் திகழ்கிறாள். சீதைக்குத் துணையாக என்றும் விட்டு நீங்காதவளாக விளங்குகிறாள். விரிந்தாய கூந்தலார் என அரக்க மாதர்களைக் கூறும் கம்பன், இப்பெருமகள் பெயரைக் காரணப் பெயராக திரிசடை என்று கூறுவது, பிற அரக்கப் பெண்களைப் போல விரிந்தாய கூந்தலை உடையவளாக இல்லாமல், கூந்தலை மூன்று கால்களாகப் பிரித்து அழகான சடையாக பின்னிவிட்டுக் கொண்டு விளங்குகிறாள் என்று கருதலாம். (திரி- மூன்று)

இராவணனால் அசோக வனத்தில் சிறை வைக்கப்பட்ட சீதை, திரிசடையிடம் எனது இடது தோளும், இடது கண்ணும் துடிக்கிறது. இதன் பலன் என்ன ஆய்ந்து, கூறுவாயாக எனக் கேட்கிறாள். கேட்ட திரிசடை மகிழ்ச்சி பொங்க "இயைந்த சோபனம் நன்று இது நன்று உன் துணைக் கணவனை உறுதல் உண்மையால் என்று கூறுகிறாள். இடது தோளும், இடது கண்ணும் துடிப்பது நல்ல அறிகுறி. உனக்கு நல்லது நடக்கும். உன் நாயகனை அடைவாய் என்று கூறியதோடு மேலும் கூறுகிறாள்.

*"உன் நிறம் பசப்புஅற, உயிர் உயிர்ப்புற*
*இன் நிறத் தேன் இசை இனிய நண்பினால்*
*மின் நிற மருங்குலாய்! செவியில் மெல்லென*
*பொன் நிறத் தும்பி வந்து ஊதிப் போயதால்"*

மின்னலைப் போன்ற மெல்லிய இடையுடைய தேவியே ! உனது பசப்பு நிறம் நீங்கி அழகிய மானம் எய்தவும், உனது உயிர் தழைத் தோங்கவும், உனது காதில் பொன் நிறமுடைய அழகிய தும்பி ஒன்று, இனிய தேன் போன்ற இசையைப் பாடிக் கொண்டுவந்து, ஊதிவிட்டுச் சென்றது. இது நல்ல சகுனம். உனது நாயகனிடமிருந்து தூதுவன் வருவான் என்பதை உணர்த்தும் நல்ல சகுனமிது.

*"ஆயது தேரின் உன் ஆவி நாயகன்*
*ஏயது தூது வந்து எதிரும் என்னுமால்*
*தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம், என்*
*வாயது கேள் என மறித்தும் கூறுவாள்"*

தீயவர்கள் தீமை எய்துவது திண்ணம் என்று கூறிய திரிசடை மேலும் கூறுவாள். காட்சிப்படலம் 3 முதல் 53 ஆம் பாடல் வரை 17 பாடல்களில் திரிசடை கூறியவைகளை கம்பன் பலபடி விரித்துக் கூறுவதைப் பார்க்கிறோம்.

"பயில்வன பழுதில் பழுது இந்நாடுதான்' வெயிலினும் மெய்யன விளம்பக் கேட்டியால்" என்று தான் கண்ட கனவுக்காட்சிகளை கூறுகிறாள் திரிசடை.

"எண்ணெய் பொன் முடிதோறும் இழுகி ஈறிலாத்
திண்நெடும் கழுதை பேய் பூண்ட தேரின் மேல்
அண்ணல் அவ்விராவணன், அரத்த ஆடையன்
நண்ணினன் தென்புலம் நவையில் கற்பினாய் !"

இராவணன் தலையில் தேய்த்த எண்ணெய் உடல் முழுவதும் ஒழுகி நனைக்க, கழுதைகளும், பேய்களும் பூண்ட இரதத்தின் மீது அமர்ந்து, சிவந்த ஆடையை அணிந்து கொண்டு தென்திசை நோக்கிச் செல்லக் கண்டேன். அவனது மக்களும், சுற்றமும் அவனைத் தொடர்ந்து தென் திசை சென்றனர். யாரும் திரும்பி வரவில்லை. மணிவிளக்குகள் ஒளிரும் இராவணன் மாளிகை பிளவுண்டது கண்டேன். இடியோசை முழங்கியது. வானத்திலிருந்து விண் மீன்கள் உதிர்ந்தன. இலங்கை மாநகரும், மதில்களும் தாமே சிதைந்து உடைந்தன. வீரர்கள் அணிந்திருந்த கற்பக மலர் மாலைகள் புலால் நாற்றம் கமழ்ந்தது. மங்கல கலசங்கள் சிந்தின. விளக்குகளை மிகுந்த இருள் விழுங்கியது. வேத மந்திரம் கூறி நிறைத்து வைத்து பூரண கும்பங்கள் மதுவைப் பொழிந்தன. அரக்க மாதர் அணிந்திருந்த மங்கல நாண் வாங்குவார் இல்லாமலே தாமே அறுந்து வீழ்ந்தன. மண்டோதரியின் கூந்தல் கருகி கறு நாற்றம் வீசிற்று. இந்த அறிகுறிகள் எல்லாம் இராவணனது அழிவை உணர்த்துவனவாகும்.

இப்போது நான் கண்ட ஒரு கனவு. அதைக் கூறுகிறேன் கேள் என்று மீண்டும் திரிசடை கூறுகிறாள். இரண்டு ஆண் சிங்கங்கள், மலைகளில் வாழும் புலிக் கூட்டத்துடன் வந்தன. மத யானைகள் வாழும் காட்டை முற்றுகையிட்டு எல்லா யானைகளையும் கொன்று குவித்தன. இங்கிருந்து ஒரு அழகிய மயில் வெளியேறியது. திருமகள் ஆயிரம் விளக்குகளை ஏந்திக் கொண்டு, ஒயிலாக நடந்து இராவணன் மாளிகையிலிருந்து வீடணன் மாளிகை வந்தாள். இந்த சமயத்தில் என்னை எழுப்பினாய். நான் விழித்த, கனவு நின்றது என்று கூறிய திரிசடையைப் பார்த்து சீதை இன்னமும் தூங்கி, மீதிக் கனவைக் கண்டு கூறுவாயாக என்றாள்.

அன்னைக்கு பின்வர இருப்பதை உணர்த்திய தோழியாக திரிசடை திகழ்கிறாள். செவியின் பொன்னிறத்தும்பி வந்து ஊதிப் போயது என்பது, ராம பிரானிடம் இருந்து தூதுவனாக அனுமன் வருவான் என்பதை உணர்த்தும். எண்ணெய் ஒழுகும் உடலுடன், சிவந்த ஆடை அணிந்தவனாக இராவணன் சென்றது, அவன் தென்திசையில் எமபுரிக்குச்

செல்வான் என்பதையும், அவனுடன் பின் தொடர்ந்து சென்ற உறவினர் யாரும் திரும்பவில்லை என்பது அரக்கர் அனைவரின் அழிவையும் காட்டும். பிற அபசகுனங்கள் இலங்கையின் அழிவினை உணர்த்தும். ராவணன் மாளிகையிலிருந்த திருமகள் ஆயிரம் விளக்குகளை ஏந்திக் கொண்டு வீடணன் மாளிகை சென்றாள் என்பது இராஜ்ய லட்சுமி வீடணனை அடைவாள் என்பதையும் காட்டி நின்றது. இரண்டு சிங்கங்கள் ராம, இலக்குவர்களையும், புலிக் கூட்டம் வானர வீரர்களையும் உணர்த்தும். அசோகவனத்திலிருந்து ஒரு அழகிய மயில் வெளியேறிச் சென்றது என்பது சீதாபிராட்டி விடுதலை பெற்றுச் செல்வதை உணர்த்தும். திரிசடை கண்டு கூறிய கனவு பிராட்டிக்கு நேரவிருக்கும் நன்மையைத் தெரிவித்ததாக அமைந்துள்ளது.

வேறு இலக்கியங்களிலும் இப்படிப்பட்ட கனவுகளும், சகுனங்களும் பேசப்பட்டிருப்பதை பார்க்கலாம்.

சுந்தர காண்டத்தில் இடம் பெற்றுள்ள, வீடணனும், அவனது மகளான திரிசடையும் சிறந்த பாத்திரங்களாக விளங்குவதைக் காண்கிறோம். சிறிய அளவிலே காட்சி தரும் பாத்திரங்கள் என்றாலும், முழுமையான பாத்திரங்களாக கம்பன் கைவண்ணத்தால் உருவாக்கப்பட்ட உன்னதமான பாத்திரங்களாகத் திகழ்கின்றன எனலாம். வீடணனை குற்றமில்லாத நற் குணத்தினன் என அனுமனும், திரிசடையைத் தாயினும் இனியள் என சீதாப் பிராட்டியும் சிறப்பித்துக் கூறுவதைக் கேட்கிறோம். அனுமனும், பிராட்டியும் கூறும் நற்சான்றைப் பெற்ற வீடணனும், திரிசடையும் காவியத்தில் இடம் பெற்ற ஒப்பற்ற பாத்திரங்களாக விளங்குவதைப் பார்க்கிறோம்.

❋❋❋

# வாராது ஒழியான்

-குளித்தலை கோ. ராமதாஸ் பாரதி

### *ஆசை படபட ஆய்வரும் துன்பம்*

காவிரிக் கரையில் ஒருவன் போய்க் கொண்டு இருந்தான். அவன் கண் எதிரே ஓர் மாமரம் தெரிந்தது. காய்கள் கொத்து கொத்தாகக் காய்த்திருந்தது.மனம் அவனது ஆசையை தூண்ட, கல்லை எடுத்து அடிக்க கைகள் துடித்தன. ஆனால் அவன் உள்ளே ஒரு குரல் ஒலித்தது. ''அடிக்காதே! தோட்டக்காரன் இருப்பான்'' என்று மனசாட்சியின் தர்மம் கூறியது.

இச்சா சக்தியால் தூண்டப்பட்ட ஒருவன் கிரியா சக்தியை பிரயோகிக்கும் முன் தன் ஞான சக்தியை பயன்படுத்தினால் துன்பத்துக்கு ஆளாக மாட்டான்.

இந்தக் கருத்துக்குப் பெரும்பாலும் இடம் கிடைப்பதில்லை. இதன் தொடர் நாடகம் தான் சுந்தர காண்டம். இராமன் கானகம் போகிறான் என்றவுடன் இராமன் இருக்கும் இடம்தான் அயோத்தி என்று ஞானம் பேசி ராஜபோகத்தைச் துறந்தவள் சீதை.

ஒருநாள் தன் குடில் முன் தோன்றிய மானைப் பார்க்கிறாள். அதன் அழகைக் கண்டு ஆசை கொண்டு இராமனை பார்த்து பிடித்துகொடு என்று கூறுகிறாள்.

அருகே இருந்த இலக்குவன் மன சாட்சியாக நின்று ''இது மாயமான்'' ஆசையை விடுங்கள் என்று வேண்டுகிறான். ஆசை என்ற போதையேறிய சீதையோ மனசாட்சியை உதறித்தள்ளி கணவனை உரிமையுடன் தூண்டுகிறாள்.

### *முடிவு என்ன?*

மானை விரும்பிய சீதையும் விருப்பத்தை நிறைவேற்ற முனைந்த இராமனும் ''பிரிவினை'' என்ற துன்பத்துக்கு ஆளானார்கள். துன்பம் வரும் போது ஞானமும் முந்துகிறது. வழக்கம் போல் சீதை இறைவனை நோக்கித் தவம் தொடங்குகிறாள். கம்பனது பாடலை பார்க்கலாம்.

*''வாராது ஒழியான் எனும் வண்மையினால்*
*ஓராயிரம் கோடி துயருக்கு உடையேன்*
*தீராய் ஒரு நாள் வலி சேவகனே*
*நாராயணனே ! தனி நாயகனே''*

இந்தப் பாடலை சீதையின் வாயிலாக நமக்குத் தான் வழங்கியிருக்கிறான்.

இறைவனை எப்படி வேண்டுவது என்ற கேள்விக்கு விடை வழங்குவது போல் கருணை உள்ளம் கொண்ட கள்வன் ஜீவர்களை ரட்சிக்க கண்டிப்பாக வருவான் என்பதை சுட்டிக்காட்ட 'வாராது ஒழியான்' என்று உறுதி கூறுகிறான்.

ஆனால் ஜீவாத்மா வைராக்கியத்தோடு அவனை நாட வேண்டும் என்பதைக் காட்ட ‘எனும் வண்மையினால்’ சகல இடர்களையும் பொறுத்துக் கொள்ளத் தயாராக இருக்கச் சொல்கிறான். காரணம் என்ன? நமது உறுதி நிலையானது என்பதை இறைவன் சோதிக்கத்தான் செய்வான். உறுதி தளரக் கூடாது. ஆனால் சீதையின் உறுதி தடுமாறுகிறது. இனி வாழ்வதில் பயன் இல்லை, அவள் வர மாட்டான் என தவறான முடிவு எடுத்து உயிரை போக்க முனையும் போது காப்பது என் கடமை என்ற கருத்துக்கு ஏற்ப இராம நாமத்தை கேட்கச் செய்கிறான். உணர்வு பெற்ற சீதை உற்று நோக்கினாள். சிறந்த முடிவு ஏற்பட்டது. இராமன் என்ற ஆன்மாவின் மோதிரமும் சீதை என்ற ஆன்மாவின் சூடாமணியும் சந்திக்க நேர்ந்தது. பிரிந்தது கிடந்த சக்கரத்தையும் தேரையும் ஒன்று படுத்தி வெற்றி கண்டான் அனுமன்.

அதன் காரணமாகவே இந்தப் பகுதிக்கு சுந்தர காண்டம் என பெயரிட்டதாக கூறுவதும் உண்டு.

❋❋❋

## சுந்தர காண்டத்தில் சீதை

பேராசிரியை ஆ.ரா. இந்திரா

"வசிட்டருக்கும், இராமருக்கும், பின் ஒரு
வள்ளுவர்க்கும், முன் வாய்த்திட்ட மாதர்போல்
பசித்து, ஓர் ஆயிரம் ஆண்டு தவம் செய்து
பார்க்கினும் பெறல் சால அரிது காண்"

– பாரதி, சுயசரிதை, பாடல் 31.

"பாஸதேனா ஷேக்ஸ்பியர் கழகம்" என்றும் ஓர் அமைப்பு. அமெரிக்காவில், கலிஃபோர்னியாவில், இயங்கிய அமைப்பு அது. அதில், 1900- ம் ஆண்டு ஜனவரி 31-ம் நாள், சுவாமி விவேகானந்தர், "தியானங்கள் பற்றி, ஒரு சொற்பொழிவு ஆற்றினார். அச்சொற்பொழிவில், கேட்போர் உள்ளத்தை மிக, மிக உருக்கிய, ஒரு சில வாக்கியங்கள் இதோ:

"......... பொறுமைக்கு எல்லையாக, துயரத்தின் உருவாக, தூய்மையின் இருப்பிடமாக, கற்புக்கு அரசியாக, மாசில்லா இல்லற மங்கையாக, எல்லாத் துன்பங்களையும் சகித்தவளாக, சீதை காட்சியளிக்கின்றாள். . ."

"மக்கள் இனத்திற்கு, "துன்பச் சகிப்பு" என்னும் லட்சியத்தின் வடிவம் சீதையே , . .

"ஒரு நாடு முழுவதும் ஊடுருவிப் பாய்ந்து, மக்கள் வாழ்க்கையில் புகுந்து, மக்களினத்தின் இரத்தத்துளி ஒவ்வொன்றிலும் நுழைந்து, கிளர்ச்சியூட்டும் சீதையின் லட்சியத்தை, வேறு எந்தப் புராணக் கதையும் சித்தரிக்கவில்லை . . . . ."

"புனித மயமான, இந்தச் சொற்களின் சத்தியத்தில் மனம் தோய்ந்து நிற்கும்போது, இன்னொரு எண்ணம் தலை தூக்குகின்றது. நம் தெய்வத்திருநாட்டின் "பண்பாட்டுக் கருவூலமாய்" , வாழ்ந்து , நம்மை வாழவைத்த சுவாமிஜி அவர்களுக்கு, "வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும்" நம் அருமைத் தமிழ் இலக்கியங்களுடன், நெருங்கிய நேரடி உறவு இருந்திருக்குமானால், கம்பனின் "இராமஅவதாரப் பேர் தோமறுமாக்கதையில்" அவருடைய லட்சிய உள்ளம் ஈடுபட்டிருக்குமே! "சோகத்தாளாய நங்கையின் " துயரில் ஆழ்ந்து, துயரத்தின் நடுவில், சுடச்சுடப் பொன்போல் ஒளிவீசும், அவள் "லட்சிய மாண்பினை"க் கண்டு மலைத்து நின்று, அதனாலேயே பெண்மையின் ஏற்றத்தை அறிந்து, உணர்ந்து, வழிபட்டு, அதன் விளைவாக, இர்ாமாயணத்தின் உத்திரகாண்டத்தைப் பாடாமல் விட்டு விட்ட, கம்பனின் மேதாவிலாசமும், மானுட நேயமும், "பெண்மைக்காக நல் அறத்தின் மாண்பெல்லாம்" என்று ஓதி, ஓதி, அர்ச்சனை செய்த பக்திப் பரவசமும், "ஸ்ரீ சுவாமிஜியின் குரலாய் ஒலித்திருக்குமே! இப்படி ஓர் "ஆசை வாய்ப்பட்ட சிந்தை!"

''எதனாலேயோ, ஸ்ரீமத் வால்மீகி இராமாயணத்திற்கு க்ரிஃபித் கிடைத்ததைப் போல, கம்பராமாயணத்திற்கு ஒருவர் கிடைக்கவில்லை. க்ரிஃபித், வால்மீகி இராமாயணம் முழுவதையும், ஆங்கில மொழியில், கவிதை வடிவில் படைத்துள்ளார். ஒப்பற்ற மொழி பெயர்ப்பு அது. ''கம்பராமாயணத்திற்கு, அப்படி ஒருவர் அமையவில்லையே ! அப்படி அமைந்திருந்தால், இந்த உலகின் ஐந்து கண்டங்களிலும் உள்ள எத்தனையோ இலக்கிய உபாஸகர்களுக்கு, ஓர் ஒப்பில்லாத காவியக் கோயிலின் கோபுர தரிசனம்! கிடைத்திருக்கும்! மஹரிஷி வவே.சு. அய்யர் அவர்கள் தாமே ஆயிரக்கணக்கான கம்பராமாயணப் பாடல்களை ஆங்கிலத்தில், அற்புதமாக,( Free Verse) வடித்திருந்தாலும், ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூர் போன்ற கவிதா விற்பன்னர்களின் எழுதுகோல், இந்தக் கைங்கர்யத்தைச் செய்தால், எப்படி இருக்கும்! என்று அங்கலாய்க்கிறார். இவ்வளவு விளக்கமும் எதற்கு என்றால் கம்பராமாயணத்தைத் துய்ப்பதிலும், முக்கியமாக, ''சுந்தரமாய்'' ச் சுடர்வீசும் சுந்தரகாண்டத்தைப் படித்து அனுபவிக்கும் பரவச உணர்விலும் மனம் ஒன்று படும்போது, ''அடடா, இந்தக் கம்பன் கைவண்ணத்தையும், இந்தச் சீதையின் சுந்தரத்தையும், லோகங்களிலும் உள்ள எத்தனையோ பேர் கண்டு, கண்டு இன்பம் அடைய மாட்டார்களா'' ''என்னும் சிந்தனை கிளர்ந்து எழுகின்றது! ''தாம் இன்புறுவதை, உலகு இன்புறக் கண்டு, களிப்பதுதானே'' வள்ளுவப் பெருந்தகை பாராட்டும் சிறந்த நெறி!

இப்படி நினைக்கும் அளவுக்கு, மனித சிந்தனையை உயர்த்தும் மாண்பினைப் பெற்றது கம்பன் வடித்துள்ள சுந்தரகாண்டம். ''தொட்ட, தொட்ட இடந்தொறும் பரந்துளன்'' என்று பரம்பொருளை வருணிக்கும் கம்பன் தொடரையே பயன்படுத்தி, காப்பியம் நெடுகிலும், ''தொட்ட, தொட்ட இடந்தொறும் பரந்துள்ளது'' அவனது ராம பக்தியும், காவிய சக்தியும் என்று போற்றுவது பொருத்தம்தான். ஆனாலும், சுந்தர காண்டத்தின் பெருமையே தனி. இதன் பேரழகில் ஈடுபடும், வ.வே.சு. அய்யர் அவர்கள், ''கவி தன் அருமையை எல்லாம் தன் சக்தியை எல்லாம், தான் சிறையில் இருந்து கொண்டு, உலகை விடுவிக்க வந்த எம் பெருமாட்டியான சீதா பிராட்டியின் பெருமைகளை வர்ணிக்கும், இந்தச் சுந்தர காண்டத்திலேயே வரையாமற் செலவு செய்திருக்கிறான். ''சிறையிருந்தாளின் ஏற்றம்'' கூறுகின்றது தான் ராமாயணம் என்று ஸ்ரீ பிள்ளைலோகாச்சாரியார் சொல்லியதும், ''ஸீதாயாச் சரிதம் மகத்'' என்னும் வால்மீகி ராமாயணப் பாயிரத்தின் சூத்திரத்திற்கு இலக்கியமாக விளங்கும் சுந்தர காண்டத்தையும் கருதியே ஆகும்'' என்று பெருமிதத்துடன் கூறுகின்றார். மேலும் தொடர்ந்து, ''ஒரு உத்சிருஷ்டமான கவிக்குப் பிறகு, இன்னொரு கவி, அதே கதையைப் பாடினால், முதல் கவியின் போக்கும், வாக்கும், பின்னவன் காலைச் சுற்றி நிற்கும் ஈயத்தனைப்போல் ஆகி விடுகின்றன. ஆனால் கம்பன், பூமண்டலத்தை ஒரு தலையால் தாங்கும் ஆயிரந்தலை ஆதிசேஷன் போல, வான்மீகியின் கனத்தை அலட்சியமாய் தாங்கி நடப்பதோடு, அவனது

கதையையும், தனக்குக் குற்றேவல் செய்து தன் உத்பிரேக்ஷை அலங்காரிக்கும் மணிப் பூண்களாகச் செய்து விடுகின்றான். ......'' என்று மெய்மறந்து பேசுகின்றனர். ஏறத்தாழ பதினான்கு மொழிகளுக்கு மேல் பயின்று, அவைகளின் மாண்பு உடைய இலக்கியங்களையும் கசடறக் கற்றிருந்த வ.வே.சு. அய்யர் அவர்களின் கருத்துக்கு ஒரு தனி மதிப்பு உண்டு. கம்பனைப் பற்றிய அவருடைய கருத்துக்கள் ''உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை''.

கம்பனின் சுந்தரகாண்டம், மற்ற காண்டங்களை விட, சிறப்பாக, இக்கருத்தினை மெய்ப்பிக்கின்றது. இக்காண்டத்தில், ''சிறையிருந்தாள் ஏற்றத்தை'' படிப்படியாக, ஆரோகண கதியில், நம் கண்முன் கொணர்ந்து நிறுத்தும் பாங்கிலேயே, இக் கருத்தின் பொலிவு பளிச்சிடுகின்றது. வடமொழி, தமிழ் இரண்டிலும், தனக்கு முன் தோன்றிய இலக்கியங்களை, அளப்பரிய ''பாரம்பரியச் சொத்தாகப் பெற்றவன் கம்பன்; அதன் அருமை உணர்ந்து போற்றியவன்; அதே சமயம் தனது தனித் தன்மையினால், தனி அனுபவத்தினால், அந்தப் பாரம்பரியத்திற்குப் பெருமை சேர்த்தவன். மூல நூலை அப்படியே பின்பற்றாமல், தனது சிந்தனை சட்டத்திற்கும், இலக்கிய வளமைக்கும், பண்பாட்டுப் பின்னணிக்கும் ஏற்ற வகையில், மாற்றங்களைச் செய்து, மூலநூலைப் புதுப்பிக்கின்றவன். அவன் செய்யும் ஒவ்வொரு மாற்றமும், ஆழம் நிறைந்த அவன் சிந்தனையின் விளைவே ஆகும். சுந்தர காண்டத்தில் சீதையின் பாத்திரப் படைப்பிலும், ஊற்றாய்ப் பொங்கியெழும் கம்பன் தனித்தன்மை வெளிப்படுகின்றது.

ஒவ்வொரு பகுதியிலும், ஸ்ரீமத் வால்மீகி இராமாயணத்துடனோ, அல்லது அத்யாத்ம இராமாயணத்துடனோ அல்லது துளசி இராமாயணத்துடனோ ஒப்பிடுவது, ஒரு விரிவான ஆராய்ச்சியாக அமையும். அந்தப் பெரிய முயற்சியில் ஈடுபடாமல், காலமும், இடமும் கருதி, ஒரு சில இடங்களில் மட்டும், அவ்வப்போது ஒப்பிடலாம்.

கம்பனின் சுந்தர காண்டத்தில் ''கடல் தாவு படலம்'' முதலாக, ''திருவடி தொழுந்த படலம்'' ஈறாகப் பதினான்கு படலங்கள் அமைந்துள்ளன. படலங்களின் எண்ணிக்கை, பெயர், பாடல்களின் அமைப்பு ஆகியவை, அந்தந்த பிரதேசப் பிரதிகளில், சில இடங்களில் வேறுபட்டிருக்கும். சான்றாக, வை. மு.கோ அவர்களின், ''நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டும்'' பதிப்பில், ''காட்சிப்படலம்''- ''காட்சிப் படலம்'' ''நிந்தனைப் படலம்'' என்று இரண்டு படலங்களாகப் பகுக்கப் பட்டிருக்கும். ''கற்றறிந்தார் ஏத்தும்'' ஆழ்வார் திருநகரிப் பதிப்பில் ''நிந்தனைப் படலம்'' ''வந்தனைப்படலம்'' என்னும் பெயரில் இடம் பெற்றிருக்கும். பொதுவாகத், தற்காலத்தில் பலராலும் பயன்படுத்தப்படும் பதிப்புக்களில், 14 படலங்கள் சுந்தர காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. இந்தக் கட்டுரையில் பின்பற்றப்படுவது, புகழ்பெற்ற ''மர்ரே பதிப்பு''.

பதினான்கு படலங்களில், காட்சிப்படலம், உருக்காட்டுப்படலம், சூடாமணிப்படலம் ஆகிய மூன்றிலும், முழுக்க, முழுக்க சீதா பிராட்டியின் வைபவம்தான். பின்னரும், சீதையை அவ்வப்போது காண்கின்றோம். கடைசி படலமான திருவடி தொழுத படலத்தில், பேசுவது அனுமன், கேட்பது இராமன், ஆனால், நாம் அகக்கண்களால் காண்பதோ சீதையைத் தான்! காண்டத்தில், பாத்திரங்கள் ஒருவரை ஒருவர் சந்திப்பது, ஒருவரோடு ஒருவர் உரையாடுவது, ஒருவரைப் பற்றி இன்னொருவர் பேசுவது, பேசும் இடம், காலம், சூழ்நிலை, பாத்திரங்களின் புறத்தோற்றத்தைப் பற்றியும், அக உணர்வு பற்றியும், கவிஞன் தானாகவே வருணிப்பது போன்றவை, பாத்திரங்களின் பண்புகளை உணர்வதற்குத் துணை செய்கின்றன. இந்தச் செயற்கை கோட்பாடுகளுக்கு எல்லாம், செயற்கைச் சிந்தனைகளுக்கு எல்லாம், இடம் தராமல், அன்றலர்ந்த மலர்களாய் புத்துணர்ச்சியுடன் பொலிந்து, நம்மை ஈர்க்கின்றன சுந்தர காண்டப் பாடல்கள். அதிலும், மேலே குறிப்பிட்ட மூன்று படலங்களில், ஒவ்வொரு பாடலைப் பற்றியும் ஒரு நூலே எழுதலாம். எதைத் தொடுவது, எதை விடுவது என்று தெரியாமல் திகைத்து நிற்கும் ஆனந்த நிலை, கவிதைகளை படிப்பவர்க்கு ஏற்படும். இந்தக் கட்டுரையில், அத்தகைய திகைப்புத் தான் ஓங்கி நிற்குமோ, என்னவோ!

மாறி ,மாறி, மேலும், கீழும் பறவை ஒன்று; சிட்டுக்குருவி என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். சிறிது நேரம் தரையில் அமர்ந்து, அப்படியும், இப்படியும் நடந்து, எதையோ கொத்தி எடுக்கின்றது; சிறிது நேரம் தன்னைப் போன்ற இன்னொரு பறவையுடன், தன்னுடைய பாஷையில் ஏதோ பேசுகின்றது. பிறகு வீட்டு ஜன்னலில் வந்து உட்காருகின்றது. சிறிது நேரத்தில் பறந்து போய், உயரே ஒரு மரக்கிளையில் அமர்கின்றது; ‘‘கீ’’,‘‘கீ’’,‘‘கீ’’என்று ஒலி எழுப்புகின்றது. பிறகு இன்னும் சற்று உயரே உள்ள கிளைக்குச் செல்கின்றது. மறுபடியும் கீழே தரைக்கு வருகின்றது; மீண்டும் மேலே போகின்றது. திடீரென்று, முழு வேகத்துடன் வானவெளியை நோக்கிப் பறந்து, மேலே, மேலே, போய், காற்றிலே மிதந்து, பறந்து கண்ணுக்குத் தெரியாமல் மறைகின்றது. பல மணிநேரங்களுக்குப் பிறகு, மீண்டும் ஜன்னலுக்கு வருகின்றது. மீண்டும்.. மீண்டும் . . மாறி, மாறி, மேலே . . . கீழே . . . மேலே. .. கீழே .... இப்படி நிகழ்கின்றது அதன் சுழற்சி. மனித உள்ளமும் அப்படித்தான். ஒரு நிலையில் இராது. சமதளத்தில், சில சமயம், தானாகச் சுற்றிவரும்; சில சமயம் உயர்ந்த லட்சியத்தை நாடி, மேலே பறந்து சென்று, பறவை மரக்கிளையில் அமர்வது போல், உயர்ந்த லட்சியத்தோடு ஒட்டி நிற்கும்; மீண்டும் சாதாரண நிலைக்கு வரும்; மறுபடியும் மிக வேகமாய், கருட வீச்சில் பறந்து, மேலே, மேலே, போய், வாழ்க்கையின் சிகரத்தைத் தொட்டுவிடுவது போல், வானோடு வானாய் கலந்து நிற்கும். சாதாரண மனிதர்களின் மனம் மட்டும் அன்று; மகாகவி ஒருவன் படம் பிடித்துக் காட்டும் மாமனிதர்களின் உள்ளமும் இப்படித்தான், பல நிலைகளில் இயங்கும். பிராட்டியின் நிலையைக் கம்பன் இப்படிப் பல வகைகளில் காட்டுகின்றான். இப்படிச்

சொல்வதை விட, பிராட்டி, இப்படிப் பல நிலைகளில் கம்பனுக்குத் தரிசனம் தருகின்றாள்; கம்பனின் நன்கொடையாய் நமக்கும் காட்சி தருகின்றாள். மானுடப் பெண்மை, லட்சியப் பெண்மை, தெய்விகப் பெண்மை என்னும் மூன்று நிலையையும், பிராட்டியிடம் கண்டு, கரம் குவிக்கின்றோம்.

காப்பியக் கதையைத் தெரிந்தவர்கள், காப்பியத்தைப் படிக்கின்றபோது, ஏற்படும் உணர்ச்சிச் சுழிப்பு ஏற்படுமா என்பது ஐயத்திற்கு உரிய விஷயம் தான். சகுந்தலையைத் துஷ்யந்தன் நிராகரிக்கின்றான் என்றால், நமக்கு அதிர்ச்சி ஏற்படுவதில்லை; காரணம், மரிசி ஆசிரமத்தில், சகுந்தலையும், துஷ்யந்தனும் இணைந்து விடுவார்கள் என்ற முடிவு நமக்குத் தெரியும். தமயந்தியை நடுக்காட்டில் விட்டுவிட்டு, நளன் பிரிந்து சென்றான் என்றால், நாம் பதட்டம் அடைவதில்லை. காரணம், நளனும், தமயந்தியும் ஒருங்கு இணைவார்கள் என்றும் கதை முடிவு நமக்குத் தெரியும். அதைபோல் தான், சீதை அசோகவனத்தில் சிறை இருக்கின்றாள் என்றால், நமக்கு எந்த அளவு துயரம் ஏற்படுகின்றது? அனுமன் வருகை, இராமன் தந்த அடையாளக் கணையாழி, சீதையின் சூடாமணி, இலங்கை எரியுண்ணல், இராம - இராவண யுத்தம், இராம பட்டாபிஷேகம் இவை அடுக்கடுக்காக நிகழ இருக்கின்றன என்பது தெரியும். ஆதலால், அவைகளை எதிர்கொள்ளத் தயாராகிறோம். கதா பாத்திரங்களின் துயரம், மகிழ்ச்சி, சிந்தனை ஆகியவைகளின் தாக்கம் எந்த அளவுக்கு, நம் உணர்ச்சிகளைத் தூண்டவேண்டுமோ, அந்த அளவுக்குத் தூண்டுவதில்லை. ஆனால், மகாகவி ஒருவன், காப்பியமாக, ஒரு கதையைத் தீட்டும் போது - அவனுக்கும் கதையின் நிறைவு தெரியும்; அந்தந்த நிகழ்ச்சிகளோடு தானும் ஒட்டி நிற்கிறான். எந்தப் பாத்திரத்தைப் படைத்தாலும்,அதன் இயல்புகளோடு சுக துக்கங்களோடும் ஒட்டி உலர்கின்றான். அதனால் அவன் தரும் சொல்லோவியம், உணர்ச்சி வயப்படத் தெரியாத நம் உள்ளத்தையும் உருக்குகின்றது. சீதையைப் பற்றிக் கம்பன் படைத்துள்ள கவிதைகளைப் படிப்பவர்கள் யார்தான் மனம் உருகாமல் இருக்க முடியும்?

இராமன்,சீதை இவர்களுக்குக் கானகத்தில் ஏற்பட்ட பிரிவு எவ்வளவு விபரீதமானது! இராம-இராவண யுத்தம் ஏற்படுவதற்கு நேரடியான காரணமாய், சீதை இராவணனால் அபகரிக்கப்படுவது, சீதையின் வாழ்க்கையில் எப்படிப்பட்ட பயங்கரமான திருப்பம்! சீதை ஏங்குகிறாள் என்பதைப் பற்றித் தெரியாமல், கானகத்தில் அலைந்த இராம-இலக்குவர்! '' என் நிலை அவருக்குத் தெரியுமா? அவர் வருவாரா? சிறையில் இருந்து என்னை மீட்பாரா?''. . . இப்படித் துடித்து, திக்குத் தெரியாத, இருள் சூழ்ந்த காட்டில், பச்சிளம் குழந்தை தனியாகத் தேம்பி அழுவது போன்ற நிலை சீதைக்கு. அவளைத் தேடிக் காண்பதற்கு, கடல் கடந்து வந்த அனுமனே, ''தேவியைக் காணவில்லையே! என்னிடமிருந்து, புண்ணியம் என்னும் பொருள் போய் விட்டதோ'' என்று குமுறுகின்றான்.

இந்த நிலையில்தான், சீதையை அசோகவனத்தில் காட்டுகின்றான் கம்பன். கல்லுக்கு இடையே, எப்படியோ துளிர்த்து, ஒரு துளி மழைநீரும் பெய்யாததால், வாடிச் சுருங்கும் சஞ்சீவி மூலிகைகளைப் போன்றும், வெயிலில் எரியும் விளக்கு ஒளியற்றதாய் இருப்பது போலவும், உள்ள பிராட்டி, புலிக் கூட்டத்திற்கு இடையே உள்ள மானாகத் துடிக்கின்றாள். நீண்ட இடைவெளிக்குப் பிறகு நமக்கு காட்சி தரும் சீதை விழுகின்றாள்; விம்முகின்றாள். இராமனை எண்ணித் தொழுகின்றாள். துயர் உற்று உயிர்க்கின்றாள். அவளுடைய கண்கள் நாலாபுறமும் சுழன்று, சுழன்று, திசைகளை அளந்து, எதையோ தேடுகின்றன. " உயிரைப் போக்கிக் கொள்ளலாமா? .... ஐயோ அது மிகவும் அரிதாயிற்றே! விதியின் வலிமையை யார் கடக்க முடியும்? " இதுதான், பிராட்டியின் முதல் நினைவு''. சூரிய குலத்தின் மேன்மையையும், தன் மனைவியைப் பிறன் ஒருவன் அபகரித்தான் என்றப் பழியையும் எண்ணி, அப்பழியைப் போக்குவதற்கு சுருதிநாயகன், என் தலைவன் வருவான், வருவான்''என்று துணிந்து, ''அவன் வரும் போது, அவன் மீட்பதற்கு நான் உயிருடன் இருக்க வேண்டுமே! என்று எண்ணி அதனால் உயிரைத் துறக்க பயந்து, எந்தத் திசையில் அவன் வருவானோ என்று அவன் வருகையை எதிர்பார்த்து. நாலாபக்கமும் திரும்பித் திரும்பிப் பார்க்கின்றாள்; அவள் கண்கள் நாலு திசைகளையும் அளக்கின்றன.

*''அரிது - போகவோ, விதி வலி கடத்தல் என்று அஞ்சி*
*பரிதி வானவன் குலத்தையும், பழியையும், பாரா,*
*சுருதி நாயகன், வரும், வரும் என்பது ஓர் துணிவால்*
*கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்''*
*(காட்சிப்படலம் - 9)*

இராமனையே மூச்சாக, சுருதி நாயகனாக அவன் வருகையையே எதிர்பார்த்து, ஊணும், உறக்கமும் துறந்து, ஒற்றைத் துகிலுடன், மாசு படிந்த மணியைப் போல், மன்மதன் அமிர்தத்தால் எழுதிய அமர ஓவியம் புகை படிந்தது போல் காட்சி தரும் பிராட்டியின் தவக் கோலம் உள்ளத்தை உருக்குகின்றது. ''மணிமலர்ச் சோலையினுள்ளே தேடி, தேவியைக் காண்பன்'' என்று அசோகவனத்தின் உள்ளே நுழைந்த அனுமன், பிராட்டியைக் காண்பதற்கு முன்னரேயே கம்பன் சீதையைத் தரிசித்து, நமக்கு அக் காட்சியை வழங்குகின்றான். புறத் தோற்றத்தைக் காட்டிய கம்பன், சீதையின் அக உணர்வுகளில், கரைந்து, கொல்லாது கொல்லும் நினைவுகளை, மானுடப் பெண்மையின் குரலாய் ஒலிக்கும்படி செய்கின்றான். அவன் முதல் நினைவு: ''ஐயோ, இளையவன், சுருதி நாயகனை பார்க்கவே இல்லையோ!

*''கண்டிலன் கொலாம் இளவலும்''*

“கடல் நடுவே, இலங்கை என்னும் தீவு உண்டு என்பது தெரியுமோ, தெரியாதோ? இராவணன் என்னை அபகரித்தான் என்பதும் தெரியாதோ . . . . கழுகின் வேந்தன் மாண்டு போய்விட்டான் . . . என் நிலையை எடுத்துரைப்பவர்கள் யாரும் இல்லையே . . .!! என்று விம்மி, “இந்தப் பிறவியில் நாங்கள் ஒருவரை ஒருவர் காணவே முடியாதா? . . .”என்று கலங்குகின்றது அவள் உள்ளம்.

பிரிவுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை பிராட்டி அசைபோடும் போது, தீடீரென்று, அவள் சிந்தனை நடு நடுங்குகின்றது. “ஐயோ . . . கொஞ்சமும் அறிவில்லாமல், புத்தி மழுங்கி, சிந்திக்காமல், எத்தகைய வார்த்தையால், இளவலை இகழ்ந்து விட்டேன்! ... தவறு . . . தவறு. . . பெரும் தவறு . .. அதைக் கேட்ட நாயகன், “ இவள் எவ்வளவு அறிவில்லாதவள்! ”என்று வெறுத்து என்னை ஒதுக்கி விட்டானா? என்று, மனத்திற்குள் எண்ணி, எண்ணிப், புழுங்கி பதைக்கிறாளாம் பிராட்டி.

*“என்னை, நாயகன், இளவலை எண்ணலா வினையேன்*
*சொன்ன வார்த்தைகேட்டு, அறிவிலள் எனத்துறந்தானோ*
*முன்னை ஊழ்வினை முடிந்ததோ . . .”*

பிரிவால் ஏற்படும் துயரில், வாடிச் சாம்புவது மனித இயற்கைதான். ஆனால், அத்தகைய சூழ்நிலையில், ஒரு பெண் “தற்சோதனை”ஈடுபட்டு, தன் குற்றம் - குறைகளைக் காண்கிறாள் என்றால், அது அவள் நேர்மை உணர்வின் வெளிப்பாடு அல்லவா?

இந்த நிலைக்கு, உயர்வைத் தொடும், பெண்மை, மீண்டும் வேறொரு உணர்ச்சி நிலைக்குத் திரும்புகின்றது. “என் துயரம் இருக்கட்டும், அவர் எவ்வளவு கஷ்டப்படுகிறாரோ! நான் எடுத்துப் பரிமாறாமல், இலையினுள் அமுது செய்யக்கூட, அவருக்குத் தெரியாதே! இப்போது, எப்படி உணவு கொள்வார்? விருந்தினர்கள் வந்து விட்டால், கிருஹிணி இல்லாமல், எப்படி உபசரிப்பார்? திகைத்து நிற்பாரே! ...”என்று மயங்குகிறாள். “இன்னும் அவர் வரவில்லையே . . . “அரக்கர்கள் இன்னமுமா என் தேவியை விட்டு வைப்பார்கள்? கொன்று தின்றிருப்பார்கள்”என்று முடிவு கட்டி, என்னைத் தேடும் பணியில் ஈடுபடவில்லையோ! அல்லது அயோத்தியில் இருந்து, தாயாரும், தம்பியரும் வந்து, வெற்றித் திருநகருக்கு அழைத்துச் சென்று விட்டார்களோ . . . இல்லை . . . இல்லை . . . வனவாச காலம் முடியாமல் ஒரு நாளும் அயோத்திக்குத் திரும்பியிருக்க மாட்டார் . . . ஐயோ ஒரு வேளை . .. வஞ்சனை அரக்கர்களால் அவருக்கே ஏதாவது ஆபத்து நேர்ந்து விட்டதோ! ”என்று துடிக்கின்றது. இராமன் துயரத்தை எண்ணிக் கலங்குகின்ற சீதையின் உள்ளத்தில் அப்போது கடந்த கால நிகழ்ச்சிகள் எல்லாம் வரிசை, வரிசையாக நினைவுக்கு வருகின்றன. சிவ தனுசை வளைத்துத் தன்னைக் கைப்பிடித்த

நாளிலிருந்து, காகமுற்றும் ஓர் கண்ணிலவாக்கிய நாள்வரை, நடந்த நிகழ்ச்சிகளும், அவைகளின் உள்ளிடாயத் துவங்கிய இராமன் பண்பாடுகளும், தோன்றித்,தோன்றி மறைந்து, மறைந்து சீதையின் உணர்வினைத் தேய்க்கின்றன; அவள் உடல் தேம்புகின்றது.

சிறை வீடு பெறுதற்குரிய தவமும், தன் வாழ்வின் உயிர்நாடியாக விளங்கும் இராமத் தியானமும் 'பெண்மை 'இயல்புடன் இரண்டறக் கலந்து மிளிரும் இந்த நிலை சுந்தர காண்ட சீதா பிராட்டியின் முதல் வடிவம். இந்த வருணனையை அடுத்து, சீதை - திரிசடை உரையாடல் - அனுமன், அரக்கியர் நடுவே சீதையைக் காண்பது - இராவணன் வருகை - சீதை - ராவணன் சந்திப்பு - மனம் தளர்ந்த சீதையின் தனிமொழி - அனுமன் - சீதை சந்திப்பு - உரையாடல் - கணையாழி அளித்தல் - சூளாமணி அளித்தல் முதலான நிகழ்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாக அடுத்து, அடுத்து இடம் பெறுகின்றன. ஒவ்வொன்றிலும் சிறை இருந்தாளின் ஏற்றம், பல கோணங்களில் பளிச்சிடுகின்றது. இப்பகுதிகளில், கவிச் சக்கரவர்த்தியின் பெருமை, ஒவ்வொரு கவிதையிலும் தன் முத்திரையைப் பதித்துள்ளது. எல்லாவற்றையும் பார்க்க இல்லாவிட்டாலும், அங்கங்கே ஒரு சிலவற்றையாவது கண்டு, பிராட்டியின் வைபவத்தில் திளைப்பதற்கு, முயற்சி, செய்யலாமா?

நள்ளிரவு வந்துவிட்டது. பிராட்டிக்குக் காவலாக இருந்த அரக்கியர், மெய்மறந்து, துயில்வதையும், அவர்களுள் 'திருந்தியவளான'திரிசடை என்றும் நல்லாள் மட்டும், விழித்திருப்பதையும் சீதை பார்க்கிறாள். திரிசடை, வேறு துணை இல்லாத சீதைக்குத் துணையாக இருப்பவள். தாயினும் இனியவள். அவளை நோக்கிச் சீதை, தனக்கு ஏற்பட்ட நல் நிமித்தத்தைக் கூறுகின்றாள். "புருவம், கண் முதலியன, இடம் துடிக்கின்றன. என்ன விளைவு ஏற்படுமோ தெரியவில்லை. இராமன் முனிவனுடன் மிதிலைக்கு வந்த நாள், இடம் துடித்தன; வனத்திற்கும் புறப்பட்ட அன்றும், வஞ்சனை மான் வந்த அன்றும், வலம் துடித்தன. இன்று இடம் துடிப்பதற்குக் காரணம் என்னவோ!"என்று கூற, திரிசடை, "இயைந்த சோபனம்; உன் கணவனை நீ அடைதல் கூட உண்மை; இந்த நிமித்தம் நல்ல சகுனம்"என்று கூறி, பொன் வண்டு ஒன்று உன் செவியில் ஊதிப் போயிற்று; எனவே, தூதுவன் ஒருவன் வருவது திண்ணம்; கவலைப்படாதே" என்று சீதையைத் தேற்றுகிறாள். தொடர்ந்து, திரிசடை தான் கண்ட நற்கனவைக் கூற முற்படுகின்றாள். இராவணன் குலத்தோடு நாசமடைவதைக் குறிப்பிடும் கனவு, அதற்குரிய வேகம், இலங்கையில் தோன்றிய உற்பாதங்கள் இவைகளை வருணித்து, மீண்டும் ஒரு கனவினைக் குறிப்பிடுகின்றாள்:

"வலிமை பொருந்திய இரண்டு ஆண் சிங்கங்கள், புலிக் கூட்டத்தைத் துணைக்கு அழைத்துக் கொண்டு, மதமுடைய யானைகள் நிறைந்த வனத்தைச் சூழ்ந்து, முற்றுகையிட்டன; யானைகளைக் கொன்று குவித்து,வாகை சூடிய சிங்கங்கள் தம் நகருக்குத் திரும்பிய போது, அந்த வனத்தில் இருந்த ஒரு மயிலும், சிங்கங்களுடன் சென்றது."இந்த உருவகக் கனவினை கேட்டவுடன், சீதையின் ஆற்றாமை சற்று குறைகின்றது. தொடர்ந்து பேசும் திரிசடை, "இன்னும் கேள்; சிவந்த நிறமுடைய ஒருத்தி, இராவணன் அரண்மனையில் இருந்து, விபீஷணன் அரண்மனைக்குள் புகுந்தாள். அச்சமயத்தில், தாயே, நீ என்னை எழுப்பி விட்டாய்" கனவு இன்னும் முடியவில்லை . . ." என்று கூறியவுடன், உடனே சீதை, ஒரு குழந்தையைப் போன்ற ஆர்வத்துடன், "அப்படியா, அம்மா, அந்த கனவின் குறையையும் கண்டு விடேன்; மீண்டும் தூங்கு அம்மா" என்று கரம் குவிக்கிறாள்.

*"என்னை நீ உணர்த்தினை ; முடிந்தது இல் என,*
*அன்னையே அதன் குறை காண் என்று ஆயிழை*
*இன்னமும் துயில்க என இருகை கூப்பினாள்".*

"மனித உள்ளத்தின் பாங்கைத்தான், கம்பன் எவ்வளவு நன்றாக உணர்ந்திருக்கிறான்! "உருவகக் கனவு, தொடர்ந்து காணப்படும் போது, உண்மைக் கனவாக மாறிவிடாதா என்னும் துடிப்பு, சீதையின் பண்புக்கு, இயற்கையான அழகினைச் சேர்க்கின்றதே!

வான்மீகத்தில் 'திரிசடை கனவு' இராவணன் வருகைக்குப் பிறகே பேசப்படுகின்றது. அதுவும், திரிசடைக்கும், சீதைக்கும் இடையே நடைபெறும் உரையாடலாக அமையவில்லை. இராவணன் ஆணைக்குக் கட்டுப்பட்டு அரக்கியர் சீதையை அச்சுறுத்தி, துன்புறுத்த முற்பட்டபோது, அந்த அரக்கியரை அதட்டி, அவர்களிடம் திரிசடை தன் கனவினை வருணிக்கிறாள். சீதைக்கு ஏற்பட்ட நன்நிமித்தங்களையும் கூறுகின்றாள். அரக்கியரின், அச்சுறுத்தும் போக்கினை இது மாற்றுகின்றது. அவ்வளவுதான். ஆனால் அந்தக் கருத்தை ஏற்றுக்கொண்ட கம்பனே, இராவணன் வருகைக்கு முன்னாலேயே, கனவுப் பகுதியை சீதையிடம் கூறுவதாக அமைத்து, சீதையின் ஆற்றாமையைக் குறைக்கின்றான். அதனால். சீதையின் மனோதிடம் வளர்கின்றது; வாழ்க்கையில் அவளுக்கு நம்பிக்கையும், பிடிப்பும் துளிர்ப்பதற்குக் கருவியாகவும் அது அமையலாம். கம்பன் அப்படி அமைக்கவில்லை என்றால்,

"இன்னமும் துயில்க என இருகை கூப்பினாள்"என்றும் அற்புதமான கவிதைவரி, கிடைப்பதற்கு வழி உண்டா?

சீதையும், திரிசடையும் ஒருவரோடு ஒருவர், மனம் திறந்து, பேசி முடிக்கும் தருவாயில், அரக்கியர் துயில் உளர்ந்து எழுந்து விடுகின்றனர். அச்சமயத்தில் அனுமனும் அந்த இடத்திற்கு வந்து சேர்கிறான். துயில் உளர்ந்த அரக்கியர், ''தூக்கம் நம்மைக் கெடுத்ததே''என்று அலுத்துக் கொண்டு, வேல், சூலம், மழு முதலிய ஆயுதங்களை ஏந்தியவராய் சீதையைச் சூழ்ந்து கொண்டார்கள். அழகன் தேவி, அரக்கியர் முகத்தைப் பார்க்கிறாள். ஒன்றும் பேசத் தெரியாமல், தேம்பித், தேம்பி விசும்புகின்றாள்.

அந்தக் குறிப்பிட்ட மரத்தருகே வந்த அனுமன், ''என்னை, இங்கே, பல அரக்கியர் வேல் முதலிய ஆயுதங்களை ஏந்தி, கூடியிருக்கின்றனர்! என்ன காரணம்''என்று சட்டெனப் பார்க்கின்றாள். மேகக் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு ஒளிவீசும் மின்னலைப் போல் செல்வன் தேவி தென்பட்டாள். ''அரவின் நீங்கிய தேவனே அவன்; இவள் கமலச் செல்வியே'' என்று இறும்பூது அடையும் அனுமன், சீதையின் பெருமையை - தூய்மையை, கற்பினை, கண்டு, உணர்ந்து, போற்றும் பத்து பாடல்கள், ''சிறை இருந்தாள் ஏற்றத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்றன; அவள் பண்பின் சிறப்பினை நாம் உணரும்படி செய்கின்றன. ''தருமமும் சாகவில்லை; நானும் வீழ்ச்சி அடையவில்லை'' என்று தேவியின் மாண்பில் ஒன்றி ஆடினன்; பாடினன்; அங்கும், இங்கும் ஓடினன்; உலாவினன்; ''இவள் கற்பும், காதலும் ஏசுண்டதில்லை; தர்மத்திற்கு அழிவு ஏது? என்று நினைத்து, ''இந்தக் கற்பு நெறியைக் காத்ததற்கு, எதைப் போற்றுவேன்.

''புனைகழல் இராகவனின் வீரத்தையா? வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையா? சனகர் குலத்தையா? தீயில் மூழ்கி, நீரில் மேவி, ஊண் துறந்து தவம் செய்பவர் எங்குளர்? அவர் தவத்தினும் மேம்பட்ட மங்கையர் மனத்தலம் நவிலற் பாலதோ? இவள் இருந்த தவநிலையைக் காண நோற்றில அவன் கமலக் கண்களே;'' என்று இரங்கி,

''தனிமையும் பெண்மையும் தவமும் இன்னதே
வனிதையர்க்காக நல் அறத்தின் மாண்பெலாம்''

என்று மெய்மறந்து வாழ்த்துகின்றாள்.

''தருமமே காத்ததோ, சனகன் நல்வினைக்
கருமமே காத்ததோ, கற்பின் காவலோ
அருமையே, அருமையே, யார் இது ஆற்றுவார்''

என்று வியந்து, ஒரு பொன் மயமான மரத்தின் இலைசெறிந்த பகுதியில் நின்றான்.

அப்போது சோலைக்குள் இராவணன் வருகைவரத் தொடங்கினான். கம்பீரத் தோற்றத்துடன், இராவணன்,

*"உருப்பசி உடைவாள் எடுத்தனள் தொடர*
*மேனகை வெள்ளடை உதவ,*
*செருப்பினைத் தாங்கி திலோத்தமை செல்ல*
*அரம்பையர் குழாம் புடை சுற்ற"*

பவனியாக வரும் காட்சியை, பத்தொன்பது பாடல்களில் வருணிக்கின்றான் கம்பன். இந்த ஆடம்பர வருணனை, பகைப்புலமாக நின்று, சீதையின் மனத்தவத்தையம், எளிய தோற்றத்தையும் உயர்த்திக் காட்டுகின்றது.

பரிவாரங்களும், காவல் அரக்கியரும் அயலே நிற்க, பெண்ணின் விளக்கு இருந்த இடத்தை நெருங்குகின்றான் இராவணன்.

அவன் தனித்து வருவதைக் கண்டு நடுநடுங்கி தத்தளிக்கிறாள் பிராட்டி; காம மயக்கத்தால், உயிரின் கட்டுமானம் தளர்ந்து, தவிக்கின்றான் இராவணன். இருவர் தடுமாற்றத்தினைக் கண்டு, "சீதையின் நிலை என்னவாயிற்றோ!" என்று ஊசலாடிய அனுமன் உள்ளத்தில், அச்சம் நீங்குகின்றது. கற்பும், அறமும் பழுதுபடாத மேன்மையை உணர்ந்து, வாழ்த்துகிறான்.

*"கூசி ஆவி குலைவுறுவாளையும்*
*ஆசியால் உயிர் ஆசு அழிவானையும்*
*காசில் கண்இணைச் சான்று எனக் கண்டனன்*
*ஊசல் ஆடி உளையும் உளத்தினான் . . . "*

"வாழி சானகி, வாழி இராகவன்
வாழி நான்மறை வாழி யந்தணர்
வாழி நல்லறம் என்று உற வாழ்த்தினான்
..........................."

இராவணனும் பிராட்டியும் பேசத் தொடங்குகின்றனர். மிகவும் நயமான முறையில் தான் அவன் பேச்சு அமைந்துள்ளது. பன்னிரெண்டு பாடல்களில் கம்பன் இதை அமைத்துள்ளான். "என்றைக்கு எனக்கு அருள் தருவீர், இன்று இறந்தன; நாளை இறந்தன" என்று தொடங்கும் அவன் உரையில், அவன் செல்வச்சிறப்பு, மூவுலகின் குடியாண்மை, அவன் தனிப்பட்ட பெருமை இவையெல்லாம் மட்டும் அல்லாமல் பழி மிகுந்த தன் இழிவான போக்கினை நியாயப்படுத்தும் தீய உணர்வும் தலைதூக்கி நிற்கின்றது. "இளமை மீண்டும் வருமா?" "உன் அருள் என் பால் திரும்பவில்லை என்றால், என் ஆவி பிரியும். பிறகு என்னைப் போல் ஒரு தலைவன் உனக்குக் கிடைப்பானா? ...." மாயும்

போது, அலறி வீழ்ந்த இராமன் குரலைக் கேட்ட பிறகும், அவனைக் காண முடியும் என்று நினைக்கின்றாயா? . . .'' இப்படி, ஆசையும், நாணமும் உள்ளத்தைப் பிய்ச்சிட, நயந்து பேசும் அவன்,

''தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தாஇல் மூவுலகின் தனி நாயகம்
மேவுகின்றது நுண்க, விலக்கினை
ஏவர் ஏழையர் நின்னின்? . . .''

என்று கரங்குவித்து, தரையில் வீழ்ந்து, சீதையை வணங்கினான்!

பழுக்கக் காய்ச்சின நாராசம் போல் இச்சொற்கள் சீதையின் செவியில் பாய்கின்றன. சீதையின் கற்புத்திண்மை வீறு கொண்டு எழுகின்றது. கண்கள் சிவக்கின்றன; கரங்கள் செவியை மூடுகின்றன. ''பெண்மையின் மென்மை எங்கே! '' என்று திகைக்கும் வண்ணம் முழங்கத் தொடங்குகின்றாள். ''இராவணன் தன்னைக் கொல்வானே?'' என்னும் அச்சமே இல்லாமல், இல்லற மகளிர்க்கு பொருந்துமா உன் பிதற்றல்? கற்பின் உறுதியை நீ எப்படி அறிவாய்'' என்று ஏளனம் செய்கிறாள். இருபது கவிகளாக உருவாகும் அவள் வீர கர்ஜனை, அவளுடைய வாழ்வின் லட்சியக் குரலாய், நல் பெண்மையின் லட்சிய ஒலியாய் - கற்பெனும் சொல்லுக்கு மகாபாஷ்யமாய், இராமனுடைய வில்லின் பெருமையும், அதை உணர்ந்து கரையும் சீதையின் நம்பிக்கையும், கரைகாணாக் காதல், மனித வாழ்வின் கவசமாய் அமையும் அற்புதமும், பதவிக்கும், பொருளுக்கும், இச்சைக்கும் மயங்காத, மயக்க முடியாத மேன்மையும், ''வழியில்லா வழிமேற் செல்லும் இராவணன் சிறுமையும், மாறி, மாறி வெளிப்படுகின்றன.

''மேருவை உருவ வேண்டின், விண் பிளந்து ஏக வேண்டின்
ஈர் ஏழு புவனம் யாவும் முற்று வித்திடுதல் வேண்டின்,
ஆரியன் பகழி வல்லது; அறிந்து இருந்து – அறிவு இலாதாய்
சீரிய அல்ல சொல்லி தலைபத்தும் சிந்துவாயோ? ''

என்று, எதிரில் உள்ள துரும்பையே இராவணனாக்கி, சிறுமைப் படுத்துக்கின்றாள். ''பேசகூடாத, சீரிய அல்லாத சொற்களைக் கூறி பத்துத் தலைகளையும் சிந்துவாயோ! இராமன் வீரத்தை எதிர்கொள்ள முடியாமல், வஞ்சனையால் மானை அனுப்பி, மாய வேடத்தில் வந்தாய் . . . நீ ஒளித்து உறையும் இடம் தெரிந்து, என் தலைவன் வரும்போது, அவன் வீரத் திருவிளையாடலுக்கு ஏற்ற தோற்றம்தான் உன்னுடையது.

"பத்துள தலையும் தோளும் பல பல பகழி தூவி
வித்தக வில்லினார்க்கு திருவிளையாடற் கேற்ற
சித்திர இலக்காகும் . . . . " என்று சாடுகிறாள்.

திருவிளையாடல் என்னும் சொல்லில் தான் எத்தனை உணர்வு!

". . . . . ஒரு பறவையின் வீரத்தையே உன்பால் எதிர் கொள்ள முடியவில்லையே! . . . "தோற்றனை பறவைக்கு அன்று" . . .சடாயுவை வீழ்த்தியது சிவன் தந்த வாளால் அல்லவா!" என்று வெறுக்கின்றாள்.

"யாவர் ஏழையர் நின்னின்" என்று கேட்ட, இராவணனை நோக்கி, "ஏழை" என்று விளிக்கின்றாள். நீ ஒளித்துறை இன்னது என்று தெரிந்து, என் கோமகன் வரும்போது, அந்த வள்ளலின் சீற்றத்தால், இலங்கை என்ன . . . இவ்வுலகு எலாம் எஞ்சும் . . . எஞ்சும் . . . அந்தப் பொழிவை எண்ணித் தான் நான் அஞ்சுகின்றேன்.

" ஏழை, நீ ஒளித்துறை இன்னது ஆம் என,
வாழி எம் கோமகன் அறிய வந்த நாள்
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமோ,. . . . . .
ஊழியும் திரியும்; உன் உயிரோடு ஓயுமோ?"

" எஞ்சல் இல் உலகு எலாம் எஞ்சும், எஞ்சும் என்று
அஞ்சுகின்றேன், இதற்கு அறனும் சான்று அரோ!

என்று உறுதிப்படு த்துகின்றாள்.

கம்பராமாயண சுந்தர காண்டத்தில் ஆழங்கால் பட்டு நிற்கும் கற்றறிந்த வாசகர்கள், இந்த கட்டத்தில் வரும் பாடல்களை நன்கு அறிவர். விம்மிப், பொருமி, அழுது, "எப்போது விடிவு?" என்று துடியாய்த் துடிக்கும் மென்மையான பெண்ணுள்ளம், இப்போது வன்மையான உரம் பெற்று, தன் கற்பின் திண்மை, சொல் வடிவாய் எதிரொலி செய்ய, மானுடப் பெண்மை "லட்சியப் பெண்மையாய்" விசுவரூபம் எடுக்கின்றது.

வெகுண்ட குரலில், இராவணனை ஏசிய பிராட்டி, தன் குரலை மாற்றி, இங்கிதத்துடன் சில கருத்துக்களைக் கூறுகின்றாள். "என்னிடம் நீ கொண்டுள்ள வீண் ஆசையை விட்டு விட்டு, தருமத்தை நோக்கி, உன் நாட்டத்தைச் செலுத்தக் கூடாதா?" தருமத்தைக் காப்பாயோ?" - உலகம் - மூவுலகம் உனக்கு ஏவல் செய்ய, குன்றாச் செல்வம் உனக்கு அமைந்தது. நீ செய்த பாவத்தாலா? அல்லது தருமத்தாலா? எண்ணிப் பார் . . . . தண்ட

காரண்யத்தில், எம்பிரானைச் சரண் அடைந்த, தென் தமிழ் உரைத்த அகத்தியர் முதலான முனிவர்கள், தம் வேண்டுகோளுடன், "இராமா, அறத்தைப் பாவம் வெல்லாது; உன்னால் அரக்கர் அழிவது திண்ணம்" என்று வாழ்த்தியதை என் காதால் கேட்டேன்; எனவே, இராமனை வென்று வாழ்வோம் என்று மனப்பால் குடிக்காதே . . . உன் தங்கையின் மூக்கும், தம்பியர் தோளும், தாளும் சின்னாபின்னமானதைச் சிந்தித்துப் பார்; என்று கூறி, மேலும் தொடர்ந்து, "பாவம் நீ என்ன செய்வாய்" கடித்துக் கொல்லும் விஷப்பாம்பு கூட மந்திரச் சொற்களுக்குக் கட்டுப்பட்டு அடங்கும். ஆனால், மந்திரம் ஓதுவதற்கு உனக்கு யாரும் இல்லையோ?" "இது செய்யத்தகும்; இது செய்யத்தகாது என்ற காரணத்துடன் விளக்கி, இடித்துக் கூறி உன்னைத் திருத்துபவர் உனக்கு இல்லையே! உன் உடன் இருப்பவர்கள் நீ எண்ணியதையே தாங்களும் எண்ணி, உன்னை அழிப்பவர்கள் தான்! அதனால் உனக்கு அழிவினைத் தவிர, வேறு உய்கதி ஏது?" என்று தெளிவு படுத்துகின்றார்.

*"கடிக்கும் வல் அரவும் கேட்கும் மந்திரம்; களிக்கின்றாயை*
*அடுக்கும், ஈது அடாது" என்று, ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி*
*இடிக்குநர் இல்லாய்; உள்ளார் எண்ணியது, எண்ணி, உன்னை*
*முடிக்குநர் என்ற போது முடிவு அன்றி முடிவது உண்டோ?"*

இந்த தரும உபதேசம், இராவணன் சினத்தைக் கொந்தளிக்கச் செய்கின்றது. பூமி அதிர நடந்து, "இவளைக் கொன்று தின்பேன்" என்று முழங்கி , உடனே, அடங்குகின்றான். காதலும், சீற்றமும் ஒன்றோடு ஒன்று மோதுகின்றன! "மீண்டும் நயமாகவும் பேசி, பின்னர் அச்சுறுத்தி, "மானிடரைக் கொல்வேன்; இங்கு கொணர்ந்து ஏவல் கொள்வேன்; இது மட்டுமா? அயோத்திக்குச் சென்று பரதன் முதலானோரையும், உயிர் குடித்து, மிதிலையோரையும் வேரறுத்து, பிறகு, உன் உயிரையும் குடிப்பேன்" என்று அதட்டி, சீதாப்பிராட்டியையும், தன் கையில் உள்ள வாளையும் மாறி மாறிப் பார்த்து, "இன்னும் இரண்டு மாதங்கள் . . . அதற்குள் உனக்கு நேர இருப்பதை எண்ணிப்பார்; அதற்குள் உன் எண்ணம் மாறவில்லை என்றால், நீ வாளுக்கு இரை"என்று உறுமினான். காவல் இருக்கும் அரக்கிமாரைப் பார்த்து, அச்சுறுத்தியோ, நயந்து பேசியோ, நீங்கள் சீதையை வசப்படுத்துவதில்லை என்றால், உங்களையும் கொல்வேன்" என்று ஆணையிட்டுச் செல்கின்றான்!

அவ்வளவுதான்! அரக்கியர்கள் தத்தமக்குத் தோன்றியவாறு சீதையைக் கடிந்து கொள்கின்றனர். "இவளைக் கொல்லுங்கள்; கொல்லுங்கள்; கொன்று தின்னுங்கள் என்று ஒருவரை ஒருவர் ஏவுகின்றனர். உன்னிடம் மெய்யன்பு கொண்டவனிடம் என்ன குறை" என்கின்றார்; "உன் சுற்றத்தார் அனைவர் அழிவிற்கும் காரணமாகின்றாய், உன்னைவிட தீய பெண்கள் உலகில் ஏது?" என்கின்றனர். வெந்த புண்ணில் வேல் பாய்வது போன்ற நிலை.

இராவணன் ஆணையையும், அரக்கியர் கூவலையும் எண்ணிப் பார்க்கின்றாள் சீதை! கண்களில் நீர் பெருகுகின்றது! வாயில் முறுவல் நெளிகின்றது! இந்தச் சிரிப்புக்கு என்ன பொருள்? சீதையின் துயரத்திற்கு எல்லைக் கோடு தகர்ந்து விட்டது! சிரிப்பு வெடிக்கின்றது. சிரிப்பில் அலறும் துயரத்தைப் புரிந்து கொள்ளும் திரிசடை, சீதையை நோக்கி " அம்மா, நான் கண்ட கனவின் முடிவை மறந்து விட்டீர்களா? ஏன் கலங்குகிறீர்கள்?'' என்று ஆறுதல் கூறுகிறாள். அரக்கியரிடத்தும் கனவைச் சொல்லி அவர்களை அடக்குகிறாள்.

அப்போது, அங்கு ஓர் அமைதி; சண்டமாருதப் புயலுக்கு பின், ஓர் அமைதி; போலி அமைதி; மயான அமைதி; அரக்கியர் அயர்கின்றார். "அரக்கன் அகன்று சென்றான்; இது தான் பிராட்டியைச் சந்திப்பதற்கு உரிய காலம்'' என்ற எண்ணி, மாய வித்தையால், விஞ்சையால் திரிசடை உட்பட காவலில் அமர்ந்துள்ள அனைவரும் உறங்கும்படி செய்கின்றான் அனுமன். இந்த விஞ்சை மந்திரம் வால்மீகத்தில் இடம் பெறாத ஒன்று.

இராவண்ன் முன் செய்த வீர முழக்கம், ஒதுங்கி, இன்னொரு லட்சிய வீச்சினை அவள் உள்ளம் பயிராக்குகின்றது. சீதையின் சூழலில் ஒரு செயற்கை அமைதி உருவாகி இருந்தாலும், அவள் உள்ளத்திற்குள்ளே ஒரு பெரும் புயல்! துயராற்றாமல் , சீதை புலம்பலாக, இங்கு கம்பன் தீட்டும் தனிமொழி போன்று உலக இலக்கியங்கள் வேறு எதிலாவது இடம் பெற்றுள்ள கவிதை உண்டா என்ற பிரமிப்பு நமக்கு ஏற்படும்.

சுந்தர காண்ட சீதையின் "இதய ஒலி''யாய் அமைந்திருப்பது இந்தத் தனிமொழிதான். பெண்மையின் துயரத்தை மட்டும் அல்லாமல், பெண்மைக்கு நேரும் "சிக்கல்களையும், துருவித் துருவி, துடிக்கின்றது இத் தனிமொழி! பிராட்டியின் எண்ணங்களும், உணர்வுகளும் அலை, அலையாய் விம்மி எழுகின்றன. இராமனிடம் கொண்ட காதலும், கற்பில் நின்ற அசையாப் பெருமையும், அவளுடைய தனிப்பட்ட துயரத்தின் அளவில்லாத ஆழமும், ஒன்றோடு ஒன்று பிணைந்து, ஒலிக்கின்றன.

"இராமன் வந்து, என்னைக் காப்பாற்றுவாரா? . . . . இடிபோல் முழங்கும், அவன் வில்லின் நாணொலியை எப்போது கேட்பேன்? விதியே, அவன் நாணொலி வருமா? கொஞ்சம் சொல்லேன் . . . . .

"எவ்வளவு துயரங்கள்! எவ்வளவு துயரங்கள்! ஓராயிரம் கோடி இடர்கள் ! இந்தச் சிறை வைப்பின் அவலம் எத்தனை! எதற்கும் மனம் சளைக்கவில்லை. காரணம்? எப்படியும் அவன் வராமல் இருக்க மாட்டான்! என்னும் நம்பிக்கையால் தான்.

*"வாராது ஒழியான் என்னும் வண்மையினால்*
*ஓராயிரம் கோடி இடர்க்குடையேன்*
*நாராயணனே, தனி நாயகனே"*

என்று விம்முகிறாள் சீதை. வருவதற்கு உரிய அடையாளம் தெரியவே இல்லையே!

இப்படி உருகுகின்ற சீதையின் உள்ளம், தன்னை நடுங்கச் செய்யும் தற்சோதனையில் ஈடுபடுகின்றது.

"நான் உயிரோடு இருக்கும் வரையில், என் துயரம் விலகாது. நான் இறந்தால்தான், பழி நீங்கி, புகழ் விளையும் . . . ."

"இந்த அரக்கர் நகரில், ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகமாக நகர்கின்ற வேதனையில், போகின்ற உயிரைப், "போகாதே" என்று கெஞ்சி இழுத்து, பிடித்து, பொறுமையாகக் காத்தேன். எதற்கு? எதற்கு? அந்த வெற்றி வீரனை கண்ணால் காண வேண்டும் என்னும் ஆசையால் தான் . . .

*" பொறை இருந்து ஆற்றி என் உயிரும் போற்றினேன்*
*அறை யிரும் கழலவன் காணும் ஆசையால்"*

"எனக்குக் கொள்ளை ஆசைதான் . . . . ஆனால், ஆனால் நிலைமை எப்படி மாறுமோ? அவன் மீதுள்ள ஆறாத காதலால், எனக்கு ஏற்பட்டுவிட்ட தீராக் குறையை நான் எண்ணாமல் இருக்கலாமா? அன்புடைமை, அற உணர்வு, கற்பின் திண்மை, காதலின் தூய்மை இவை அனைத்தும் இருந்தாலும், நான் அபகரிக்கப்பட்டு, சிறைப்படுத்தப்பட்டவள் தானே? இந்தக் களங்கத்தை மாற்ற முடியுமா? மறைக்க முடியுமா? இராமன் புனிதத் தன்மையோடு, என்னுடைய களங்கம் இணைய முடியுமா? வந்து இராவணனை வென்று, என்னைச் சிறைமீட்கும் வரையில் எங்கள் வாழ்க்கையில் துயரம். இராமன் வெற்றி வீரனாய் என்னைச் சிறை மீட்ட பிறகு, துயரம் முடியும் இடத்தில், "வாழ்கையின் சிக்கல் -பிரச்சனை" தொடங்குகின்றது! எத்தனையோ நாட்களாய், மாதங்களாய், அரக்கர்களுடைய பட்டணத்தில் சிறையிருந்தவளை, இராமன் அங்கீகரிக்க முடியுமா?

*" நிறைஇரும் பல் பகல் நிருதர் நீள் நகர்*
*சிறை இருந்தேனை அப் புனிதன் தீண்டுமோ?"*

"தற்சோதனையில், எப்படிப்பட்ட வாய்மை ததும்பும் கணிப்பு! "நயந்து சிறைசெய்த" பாவம், இராவணனுக்கு உரியது; ஆனால் அதன் விளைவான பழியும், இக்கட்டும் சீதா

ராமர்களை அல்லவா பாதிக்கின்றது! இப்படியும் ஓர் எதிர் மறை விளைவா? காவிய இறுதியில் இடம்பெற இருக்கும் "அக்னிப்பிரவேசம்" என்னும் சோக கீதத்துக்குச், பிராட்டியே இங்கு சுருதி கூட்டத் தொடங்க விட்டாளோ?

சீதை தொடர்ந்து நினைக்கிறாள், "ஆமாம்", நான் எப்படி இவ்வளவு நாள் உயிரோடு இருந்தேன். மற்ற ஆடவர் - பரபுருஷர் - அந்நியர் - என்னைக் காம உணர்வுடன் நினைக்கிறார்கள் என்று தெரிந்தும், என்னை அணுகி, மனம் நினைத்ததையெல்லாம் மீண்டும், மீண்டும் பிதற்றும் அவர் சொற்கள், காதில் விழுந்தும், நான் பலகாலம் உயிருடன் இருந்து விட்டேனே! எத்தகைய கல் மனம் எனக்கு? என்னைவிட இரக்கம் இல்லாத அரக்கியர் எங்கிருக்கிறார்கள்?

*"உன்னினர் பிறர் என உணர்ந்தும், அவர்*
*சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்*
*மன் உயிர் காத்து இருங் காலம் வைகினேன்*
*என்னின் வேறு அரக்கியர் யாண்டையார் கொலோ"*

காலம், காலமாய் சொல்லப்படக்கூடிய பழி இது. புராணக் கதைகளில் வரும் கற்புடை மகளிரில், என்னைப்போல் கணவரைப் பிரிந்து, வாழ்ந்தவர் உண்டா?

*"பிறர் மனை எய்திய பெண்ணைப் பேணுதல்*
*திறன் அலது என்று உயிர்க்கு இறைவன் தீர்ந்தனன்"*

*"எப்பொழுது இப்பெரும் பழியின் எய்தினேன்*
*அப்பொழுதே உயிர் துறக்கும் ஆணையேன்"*

"ஆனால் உயிர் துறக்கவில்லை. அதனால் ஏதாவது பயன் உண்டா? நான் உயிரோடு இருந்தால் தானே, இராமன் என்னை மீட்க முடியும்? நான் இறந்துவிட்டால், எப்படி என்னை மீட்க முடியும்? "க்ஷத்திரிய குலத்தில் பிறந்து மாற்றன் ஒருவன் கவர்ந்து சிறை வைத்த மனைவியை மீட்கும் வலிமை கூட இவர்களுக்கு இல்லையே! அவள் சிறையிலேயே மாய்ந்து விட்டாளாம்" என்னும் பழி, என்னை மீட்கா விட்டால் இராமனை வந்து அடையும் . . . ."

இப்படி எண்ணும் சீதை, சிந்திக்கவும் இயலாதவளாய்த் துவண்டு, "எப்படியோ போகட்டும்! என்னை ஏற்கட்டும், ஏற்காமல் போகட்டும், கண்ணால் காண வேண்டும் என்னும் துடிப்புக் கூட இருக்காதா? அந்த பதைப்பு- பாசம்- அன்பு - அது அழிந்து விட்டது என்றால், அவர்கள் பழியைச் சுமந்து விட்டுப் போகட்டுமே! என் பழியை யார் துடைக்கப் போகிறார்கள்?" என்று விம்முகிறாள்.

''அவர்கள் பழியைப் பற்றி நான் ஏன் எண்ண வேண்டும். ''இல்லறத்திற்கு உரிய அறம், என் வாழ்வில் சிதைந்த பிறகு, என்னுடைய பழி அவர்களைச் சுற்றுமா?

''இராமன் வந்து, இராவணனை வீழ்த்தி, என்னைச் சிறைமீட்டு அயோத்திக்கு அழைத்துச் செல்கின்றான் என்றாலும், அங்கு, எத்தகைய பேச்சினைக் கேட்பேனோ? ''கவரி மான் அனைய, கற்பு மடந்தையர், என்னைச் சுட்டிக்காட்டி, ''இதோ இவள் நம் சீதை என்று சொல்ல மாட்டார்களே! கரு முகிலான இராமனைப் பிரிந்து, தன்னைக் கவர்ந்து சென்ற கள்வன் ஊரில் இருந்தவள் இவள்'' என்றல்லவா ஏசுவார்கள்?''என்று தேம்புகிறாள்.

''அவள்'' என்று சீதை குறிப்பிடப்படவில்லை. ''இவள்'' என்று குறிப்பிடுகின்றாள். ''அயோத்தியில் நெருங்கி வந்து, அருகில் நின்றும், பேசுவார்களே! என்னும், பெரும் அச்சம் சீதையை உலுக்குகின்றது.

மற்றவர்கள் இருக்கட்டும். இராமனே என்ன சொல்வானோ? இப்படி ''திகில்'' அடையும் நிலையிலும், இராமனைக் கசந்த சொற்களால் சீதை குறிப்பிடவில்லை. ''இராமனின் வடிவழகிலும், பண்பின் பெருமைகளிலும் ஈடுபட்டு நிற்கும் சீதை, அவனை ''அற்புதன்''என்றே குறிக்கின்றாள்.

''அற்புதன், அரக்கர்கள் வர்க்கமே வேரோடு அழியும்படி, போர் செய்து,வெற்றி கொண்டு, என்னைச் சிறை மீட்ட பின், அயோத்திக்கு அழைத்துச் சென்று, ''நீ நாட்டிற்கு வரலாம்; தவறில்லை. ஆனால் . . . ஆனால் . . . நீ வீட்டிற்குள் நுழையும் தகுதி சிதைந்து விட்டதே! என்றால், என்ன செய்வேன் . . . என்ன செய்வேன் . . . என்னுடைய உடைமை. . . . . ஒரே பொக்கிஷம் . . . என்னுடைய கற்பு . . . அதை எப்படிக் காட்டுவேன்! எப்படிக் காட்டுவேன். . .'' என்று நிலை கலங்குகின்றாள்.

சுந்தர சீதையின் இதய ஒலி இதுதான். மனித வாழ்க்கையில் நீதியும், நியாயமும், '' சாட்சிக்கு''உட்பட்டவை; ''நிருபணத்திற்கு'' கட்டுப்பட்டவை; ஆனாலும் சத்தியமும், தருமமும் ''சாட்சியைக் கடந்து நிற்பவை; ''நிருபணத்திற்கு'' அப்பாற்பட்டவை. விண்டு காட்ட முடியாதவை; விதந்து பேச இயலாதவை. எனவே, சீதை, ''என் சத்தியமான தூய்மையை ஒரு சிறிதும் பிறழாத கற்பு என்னும் என் அறத்தை, எப்படி காட்டுவேன், எப்படி நிருபிப்பேன்'' என்று துடிக்கும் பொழுது, அவளுக்கு ஏற்பட்ட மிகப்பெரிய துயரத்தை உணர முடிகின்றது; அவள் இதய ஒலியைக் கேட்க முடிகின்றது.

*'' அற்புதன் அரக்கர் தம் வருக்கம் ஆசு ஆற*
*வில் பணி கொண்டு, அருஞ் சிறையின் மீட்ட நாள்*
*இல் புகத் தக்கலை என்னில், யானுடைக்*
*கற்பினை, எப் பரிசு இழைத்துக் காட்டுகேன்''*

பெண்மைக்கு ஏற்பட்ட, இந்தப் பெரிய சோதனை வெள்ளத்தில் நீந்திக் கரையேற வழி தெரியாத ஒரு புனித நெஞ்சம், ''எது அறம் இல்லையோ'' அதைச் செய்யத் துணிகின்றது; ''அறம் அல்லாததைத் தான் அறம்'' என்று சாதிக்கவும் முயற்சி செய்கின்றது. ஓராயிரம் கோடி இடர்க்கு உடையாத நெஞ்சம் தான்; ''இராமனைக்'' காணலாம், இன்னும் என்னும் காதலால்'' இருந்த நெஞ்சம் தான் ; ''தோற்றனை பறவைக் கன்று; இடிக்குநர் இல்லாய்'' என்று தீரத்துடன் இராவணனைச் சாடிய நெஞ்சம் தான்; திரிசடையிடம், ''இன்னமும் துயில்க'' என இருகை கூப்பி, உருவகக் கனவை உண்மைக் கனவாக, கேட்க விரும்பிய நெஞ்சம் தான்; ''இராமன் வந்து, தன்னை மீட்க வேண்டும்'' என்பதற்காகவே, போகத் துடிக்கும் உயிரைப் பிடித்து நிறுத்தி, வாழவேண்டிய லட்சியத்தை ஓயாமல் மனனம் செய்த நெஞ்சம் தான்; அதே நெஞ்சம் தான், கடுமையான ''தற்சோதனை''யின் விளைவாக, என்னுடையவரே என்னிடம், ''இல்புகத் தக்கலை'' என்றால், வாழ்க்கைக்குப் பொருள் ஏது? என்று கலங்கி பின்னர் தெளிகின்றது.

''ஆதலால், இறப்பது தான், தர்மம் எனக்குக் காட்டும் வழி. 'தற்கொலை முயற்சி பெரும் பாவம்' என்பது தான். காலம்,காலமாய் ஒப்புக் கொள்ளப்பட்ட விதி; என் வாழ்க்கை நிலை, விதியைக் கடந்து, ''விதி விலக்கினை'' நாடுகின்றது. ''தற்கொலை முயற்சி, தருமப் பாதையாய் என் கண்முன் விரிந்து அழைக்கின்றது. நல்ல வேளையாக, சாகாமல் என்னைக் காக்கும் பணியில் ஈடுபட்டவர்களும், உறங் குகின்றனர். இதோ, இந்த இடம் தான் சரி'' என்று கலங்கி, அருகில் ஒரு மாதவிப் பொதும்பரை நாடி விரைகின்றாள் சீதை.

ஊசலாடும் உள்ளத்தின், உணர்ச்சி வெள்ளத்தினை அப்படியே சொல் ஓவியமாய் படம் பிடித்துக் காட்டி, ''தற்சோதனையின் மூலம், சீதையின் பண்பாட்டுப் பரிமாணத்தை உச்ச நிலைக்குக் கொண்டுசெல்லும், இத்தகைய ''தனிமொழி'' வான்மீகத்தில் அமையவில்லை. ''இராவணனுக்கும், அரக்கியருக்கும் உணவாவதற்குப் பதிலாக, தானே உயிரை மாய்த்துக் கொள்ளுதல் நல்லது'' என்று, புலம்பித் தவிக்கும் சீதை, உயிரை விட்டுவிட முடிவு செய்வதாக வால்மீகி கூறுகின்றார். கம்பன் காட்டும், சீதையின் அக உணர்வு, ''சிறை இருந்தாள்'' ஏற்றத்தைப் புலப்படுத்துவது.

*''ஆதலால், இறத்தலே அறத்தின் ஆறு'' எனா,*
*சாதல் காப்பவரும் என் தவத்தின் சாம்பினார்;*
*ஈது அலாது இடமும் வேறு இல்லையென்று, ஒரு*
*போது உலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள்''*

''காண்டற்கொத்த காலமும் ஈதே''என்று மரக்கிளையில் அமர்ந்து, சீதையை நேரே எதிரில் சென்று காண முற்படும் அனுமன், சீதை பொதும்பரை நோக்கிச் செல்வதைக்

காண்கிறான். துணுக்கம் அடைகின்றான். ''நான் இராமதூதன்'' என்று சொல்லியபடி சீதையைத் தொழுத வண்ணம், அவள் எதிரே தோன்றுகின்றான். கம்பன் இங்கு கையாளும் சந்தம், பாத்திரங்களின் உணர்ச்சி பாவத்தின் எதிரொலியாய்த் திகழ்கின்றது. இத்தகைய நாடகப் பாணி வான்மீகத்தில் இல்லை.

ஆனால், அசோகவன வர்ணனையும், சந்தியா காலை வந்தனைக்கு'' தெளிந்த நீரோடைப் பக்கம் சீதை வருவாள் என்ற எதிர்பார்ப்பும், சீதையின் விபரீத உணர்வுகளைப் புரிந்து கொண்டு, அனுமன் சொல்லும் சிந்தனையும், அவன் இராமன் சரித்திரத்தைச் சொல்வதும், சீதை, மரக்கிளையில் நிமிர்ந்து பார்ப்பதும் . . . இவை எல்லாம் ஆற்றொழுக்காய், இசையழகுடன், எளிய சொற்களில் இடம் பெறும் வால்மீகி ஸ்லோகங்களுக்கு ஈடு இணை இல்லை. பொருள் முழுவதும் விளங்காவிட்டால் கூட, அந்த ஓசை இன்பம் வாசகரைச் கிரங்கச் செய்யும். கம்பன் இந்த முறையைக் கையாளாமல், பாத்திரங்களின் உள்ளத் துடிப்புக்கு, முக்கியத்துவம் தந்து, நாடகப்பாணியில், இவர்கள் சந்திப்பினை அமைக்கின்றான்.

இராமாயண காப்பியத்தில் - அது எந்த மொழியில் அமைந்த இராமாயணமானாலும் - சுந்தர காண்டத்தில், ''சீதை - அனுமன் சந்திப்பு''காப்பியத்தின் இதயமாகவே கருதப்படுவது ஆகும். காப்பியத்தை நேரடியாகப் படிக்காதவர்கள் கூட, கேள்வி ஞானத்தால், இந்தச் சந்திப்பின் பெருமையை உணர்ந்து, ''கணையாழி தரும்'' ஆக்க பூர்வ உணர்வுகளைப் போற்றுவர். கம்பன் காப்பியத்திலும், இச் சந்திப்பு தனித்தன்மை வாய்ந்தது.

*''கண்டனன் அனுமனும்; கருத்துமம் உன்னினான்*
*கொண்டனன் துணுக்கம்; மெய் தீண்டக் கூசுவான்*
*அண்டர் நாயகன் அருள் தூதன் யான் எனத்*
*தொண்டை வாய் மயிலினைத் தொழுது தோன்றினான்''*

பிறகு, வெகு வேகமாகச் சொற்களைக் கொட்டுகின்றான்.

''இராமன் ஆணையால் வந்தேன், அம்மா! நீ இங்கு இருப்பது ஆண்தகைக்குத் தெரியாது'' தெரிந்திருந்தால், அரக்கர்கள் அழியாமல் இருப்பார்களா? . . . என்னை ஐயுறல்; அண்ணல் தந்த அடையாளம் உள்ளது; அவன் சொல்லியனுப்பிய செய்தியும் உள்ளது'' என்று கூறி வணங்கி நின்றான்.

குருக்கத்திப் பொதும்பரை நோக்கி நடந்து வந்த சீதையின், குமுறல் மாறுகின்றது. முதலில் சினமும், பிறகு இரக்கமும் மாறி, மாறித் தோன்றுகின்றது. இவைகளை விஞ்சி, ''எம் பிரான் நாமம் கேட்ட'' இன்பம் வளர்கின்றது.

''அரக்கனோ, அமரனோ குரங்கோ . . . . யாரானுலும், எம்பிரான் நாமம் சொல்லி உள்ளத்தை உருக்கினான்; உயிரைத் தந்தான்; இதைவிட உதவி உண்டா? கொடுமையோ, இரக்கமோ, எதுவானாலும், உயிரைத் தந்த உதவியாயிற்றே'' என நிமிர்ந்து, இராஜ மஹிஷி என்னும் பெருமிதத்திற்கு ஏற்ப, ''வீர, நீ யார்'' என்று கம்பீரமாகக் கேட்கின்றாள். ''தனிமொழி'' புலம்பலின் சாயல் அவள் உரையில் இல்லை.

கதைப்போக்கும், இந்த கட்டத்தின் உரையாடலின் பெரும் பகுதியும், பலரும் அறிந்தவை என்பதனால், இக் கட்டுரையில் விரிவாகக் கூறவில்லை.

சீதையைப் பிரிந்த பின் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் கூறி, அங்கதன் அனுப்ப இலங்கை மூதூர் தான் வந்ததாகத் தெரிவித்து, இராமன் துயரத்தை விவரித்து, சீதை குன்றில் வீசிய அணிகலன்களை இராமனுக்குக் காட்டியதை விளக்கி,

*'' இற்றை நாள் அளவும், அன்னுய், அன்று நீ இழித்து நீத்த*
*மற்றை நல் அணிகள் காண் உன் மங்கலம் காத்த மன்னோ''*

என்று உள்ளம் உருகுகின்றான். இராமனின் மாறா அன்பினால், மெய் மறந்து ''எனக்கும் நல்ல காலம் வந்துவிட்டதா, உய்தல் வந்து உற்றதோ'' என்று சீதை விம்முகின்றாள். ''அது சரி, இராமன் எப்படி இருப்பான் கொஞ்சம் சொல்லேன்; அவன் மேனி எப்படி அறிதி,'' என்று கேட்கிறாள். இராமன் வடிவழகை, அடி முதல் முடி வரை, அனுமன் வருணிக்கக் கேட்ட சீதை, தீயில் இட்ட மெழுகு போல அயர்ந்தாள். அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாள்? அனுமன் தொடர்ந்து, இராமன் சொன்ன அடையாளச் செய்திகளைக் குறிப்பிடுகின்றான்.''வனவாசத்திற்கு புறப்படும் முன் தாயார்க்குப் பணிவிடை செய்து இவண் இருத்தி' என்ற போது , ''உடுத்த துகிலுடன், உயிர் உக்க உடலொடும்'', பொங்கி எழும் சினத்துடன், சீதை ராமன் பக்கலில் வந்து நின்ற நிலை, அயோத்தியின் வாயிலை நெருங்குவதற்குள் ''காடு எங்கே இருக்கின்றது என்று கேட்ட, பேதமை, சுமந்திரனிடம், ''ஊர்மிளை முதலானோரிடம், என் கிளிகளையும், நாகணவாய்ப் பறவைகளையும் நன்றாகப் பார்த்துக் கொள்ளச் சொல்லுங்கள்'' என்னும் கபடற்ற நிலை இவைகளை இராமன் கூறியதாக, அனுமன் மொழிகின்றான்.

''இன்னும் செய்தி வேண்டுவதில்லை. என் மெய்ப் பெயர் பொறித்ததும், அற்புதமான சித்திர வேலைப் பாடுடையதுமான இந்த மோதிரத்தை சீதையிடம் நீட்டு'' என்று இராமன் கொடுத்தான் என்று சொல்லி, அக் கணையாழியை அனுமன் காட்டினான்; சீதை கண்டாள். ''கணையாழியைக் கண்டவுடன், சீதை அடைந்த நிலையை என்னென்பது'' என்று கம்பன் மலைக்கின்றான்!

*"இறந்தவர் பிறந்த பயன் எய்தினர் கொல் என்கோ*
*மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர் கொல் என்கோ*
*துறந்த உயிர் மீண்டு வந்து தொடர்ந்தது கொல் என்கோ?"*

.... என்று, எதிர்பார்க்க முடியாத இன்பத் திருப்பத்தை, வாழ்க்கையில் பெற்றால், உள்ளம் எப்படி கிளு கிளுக்கும் என்று உணர்த்தும் கம்பன் பாடலுக்கு பொருளே சொல்லத் தேவை இல்லை. அவைக்கு அவையே பொருள்.

இழந்த மாணிக்கத்தைத் திரும்பப் பெற்ற நாகத்தைப் போலானாள்; தாங்கள் இழந்துவிட்ட பூர்வீக சொத்தினை மீண்டும் அடைந்தவர் போலானாள்; அருமைக் குழந்தையைப் பெற்றெடுத்த மலடி போல் ஆனாள்; இழந்த கண்களை மீண்டும் பெற்றவரைப் போலானாள். கணையாழியைக் கண்டவுடன் சீதை அடைந்த நிலை இத்தகையது.

கணையாழியை அனுமன் நேரடியாகக் கொடுத்தது போல் கம்பன் காட்டவில்லை. வான்மீகத்தில் இருந்து இங்கும் மாறுபடுகின்றான் கம்பன். தெய்வத்திற்கு முன், நிவேதனப் பொருளை, பக்தன் இரு கரங்களில் ஏந்திக் காட்டுவது போல், அனுமன் கணையாழியைத் தன் இரு கைகளிலும் வைத்துக் காட்டுகின்றான். கணையாழி தரிசனமே, பிராட்டிக்கு அளவில்லாத, எதிர்பாராத, குதூகலத்தைத் தருகின்றது. உணர்ச்சிச் சுழிப்பில் இருந்து, தன்னை விடுவித்துக் கொள்ளாமலேயே, அனுமன் கரங்களுக்கு மேலே, தன் கைகளைக் கொணர்ந்து, அக் கணையாழியை எடுத்துக் கொள்கின்றாள் சீதை. எவ்வளவு ஆனந்தம்; எத்தகைய காதல் உணர்வு;! கணையாழியை, அப்படியே மார்போடு அணைத்துக் கொள்கின்றாள். தலை உச்சியில் வைக்கின்றாள்; கண்களில் ஒற்றிக் கொள்கின்றாள். இந்த மகிழ்ச்சியால் தடந்தோள் வீங்கினள்; மெலிந்தாள்; குளிர்ந்தாள்; இராமன் மணத்தை உணர,

*"மோக்கும்; முலை வைத்து உற முயங்கும்"*

கண்களில் ததும்பி, கண்ணை மறைக்கும் நீரை நீக்கி, நெடு நீளம், இங்கிருந்த படியே இராமனைப் பார்ப்பது போல நோக்கினாள்; ஏதோ பேசக் கருதுகிறாள்; ஆனால் பேசவில்லை.

*"நுவலக் கருதும்; ஒன்றும் நுவல்கில்லாள்"*

"சீதையின் மேனி ஒளியில் தான் எத்தகைய மாற்றம்! தன்னைச் சேர்ந்த பொருள்களின் தன்மையை எல்லாம் மாற்றுகின்ற தெய்வமணியோ! 'ஸ்பர்சவேதி' என்னும் 'ரஸகுளிகை தானே ' இந்தக் கணையாழி என்று கம்பன் வியக்கின்றான்.

''பசியால் வருந்துபவர்க்குக் கிடைக்கும் அமுதம் போன்றது; வள்ளல் பெருமக்களை நோக்கி வரும் விருந்தினைப் போன்றது; பிராணாபத்தில் இருக்கும் ஒருவருக்கு, உயிர் அளிக்கும் சஞ்சீவி மூலிகை ஆகியது'' என்று பரவசம் அடையும் கம்பன், ''சீதையை வாழ்வித்து, அவள் மூலம் அனைவரையும் வாழ்விக்கும் இந்தக் கணையாழி என்றென்றும் வாழட்டும்'' என்று மனம் உருகி வாழ்த்துகின்றான். ''வாழி, மணியாழி'' என்பது அவள் ஆசியுரை.

நம்பிக்கை அற்றுப்போய், மனமிழந்து, ''தனக்கு ஏது வாழ்வு? எதற்கு வாழ்வு?'' என்று சலிப்புற்று, உயிர் துறக்கத் துணிந்தவளுக்கு, புது நம்பிக்கை துளிர்க்க, வழி வகுத்தது இந்த கணையாழிதானே! சீதையின் தனிமொழியையும், கணையாழியைக் கண்ட சீதையின் நிலையைச் சித்தரிக்கும் கவிக் கூற்றையும், மாறிப் மாறிப் பிடித்துப் பார்த்தோமானால், கணையாழியின் மகிமை துல்லியமாய் விளங்கும்.

சீதையின் முகத்தில் - சீதையின் முகத்திலும், புன் சிரிப்பு மலர்கின்றது. கண்ணீர் பெருகி, மார்பில் சிந்துகின்றது; பேச்சு குழற, குதலை தள்ள, ''உயிர் தந்தாய், உத்தம'' என்று, பேசத் தொடங்குகின்றாள். கணையாழியைப் பெற்ற பிறகு, அனுமனை நோக்கி பிராட்டியின் வாயிலிருந்து வெளிப்படும் முதல் சொற்றொடர் ''உயிர்தந்தாய், உத்தம'' என்பது தான். கொந்தளிப்பும், அவநம்பிக்கையும் நிறைந்த ''தனியுரை'' யின் பின்னணியில், இந்தச் சொற்றொடருக்குத் தான், எத்தகைய சத்திய ஒளி! இதைத் தொடர்ந்து, சீதை அனுமனை வாழ்த்தும் பாடல்கள் மிகப் பிரசித்தமானவை; கம்பராமாயணத்தைக் கற்றுள்ள ஒவ்வொருவர் மனத்திலும் நின்று நிலைத்தவை. ''நீ அண்ணலின் தூதன் மட்டும் தானா? எனக்கு உயிர் தந்தவன்; தாயும், தந்தையும் நீ தான். நீ அருளுக்கு வாழ்வானாய்! வேறு துணையில்லாமல், தன்னந் தனியாய்த் தவிக்கும் என் துயரத்தைத் தீர்த்தாய்; நீ இன்று போல் என்றும், சிரஞ்சீவியாய் இருப்பாயாக என வாழ்த்தினாள்.

*''மும்மையாம் உலகம் தந்த முதற்வற்கும் முதல்வன் தூதாய்*
*செம்மையால் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியது உண்டே?*
*அம்மையாய் அப்பனாய அத்தனே அருளின் வாழ்வே*
*இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோடு என்றாள்.''*

*''பாழிய பணைத்தோள் வீர, துணை இலேன் பரிவு தீர்த்த*
*வாழிய வள்ளலே யான் மறுவிலா மனத்தேன் என்னில்*
*ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம் உலகம் ஏழும்*
*ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள்''*

இந்த நன்றியுரைக்கும், வாழ்த்துக்கும், தாய்மை உணர்விற்கும் ஈடு ஏது, இணை ஏது? தொடர்ந்து, ''பண்பாளனே, ஆண்தகை இளவலோடும் எங்கிருக்கிறான்? ''என் நிலைமையை யார் சொல்லி அறிந்தான்'' என்று கேட்கிறாள்.

மாரீசன் பொய்க்குரல் கொடுத்து மறைந்ததில் இருந்து தொடங்கி, நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் கூறி, சீதை பிரிவால் வாடும் இராமனின் வருத்தத்தையும் அனுமன் எடுத்துரைக்க, இராமனின் இடையறாத அன்பை அறிந்த உலகையும், அவன் வருத்தத்தை அறிந்த துயரமும், அவள் உள்ளத்தில் குடி கொண்டன. தொடர்ந்து, நீ எப்படிக் கடலைக் கடந்தாய் என்பதைக் கேட்ட சீதைக்கு தன் பேருருவைக் காட்டுகிறான் அனுமன். பேர் உருவை அடக்கும்படி வேண்டிய சீதை, நம்பிக்கையின் சிகரத்தில் நின்று, அனுமனைப் புகழ்கின்றாள். ''நீ உலகையே மலையோடு எடுத்தாலும் வியப்பில்லை. நின் துணையால், ஆண்தகையின் புகழும், அருளும் அழிவின்றி, ஊழி பலவும் நிலை நிறுத்தப்படும் .... இனிமேல் நான் மாய்ந்தாலும் குற்றமில்லை. சிறை வீடு பெற்ற நிம்மதி இன்றே எனக்கு ஏற்பட்டு விட்டது. என்னை எதிர்த்தவரை குலங்களோடு வேர் அறுத்தேன். இராமன் திருவடியைச் சூடினேன்; இனி எனக்குப் பழி ஏது? புகழ் தான்'' என்று விம்மிதம் அடைகின்றாள்.

அவள் நம்பிக்கை மேலும் வளர வேண்டும் என்று விரும்பி, மிகவும் வினயத்துடன், ''கடல் மணலைக் காட்டிலும் அதிகமாக, எத்தனையோ வானரவீரர் உள்ளனர்; நான் என்ன, அவர் பண்ணைக்கு ஒருவன் என வந்தேன்; ஏவல் கூவல் பணி செய்வேன்'' என்று தொடங்கி, வானரர் பெருமையைக் கூறும் போது, அனுமன் மனத்தில் ஒரு புதிய எண்ணம்: ''துணை இல்லாமல் தவிக்கும் தேவியை நாமே கொண்டு சென்றால் என்ன? என்பது தான்.

''கேட்டி அடியேன் உரை; முனிந்தருளல்'' என்று தொடங்கி ''உன்னை இராமன் திருவடியில் கொண்டு சேர்க்கும் பாக்கியத்தை எனக்குக் கொடு'' என்று இறைஞ்சுகின்றான்.

தாயின் முன்னிய கன்றனையானை நோக்கி, அமைதியாக, ஆனால் அழுத்தமாகப் பேசுகிறாள் சீதை. அவள் கற்பின் பெருமையும், ஆற்றலும் வீறு கொண்டு எழுகின்றன. ''உனக்கு அரிய செயல் அல்ல இது; நீ செய்வாய்; ஆனால், இது நீ செய்வதற்கு உரிய செயல் அன்று என்று, என் பெரிய பேதமை, சின் மதிப் பெண்மை எண்ணுகின்றது. உன்னுடன் மாற்றர் வந்து பொருதால், அவர்களுடன் போர் செய்யவும் முடியாமல் என்னையும் காக்காமல் தடுமாறுவாய். .... அது மட்டும் அன்று இராகவன் வில்லிற்கு மாசு ஏற்படுமே! யாவரும் காண, தேவரும் உணர, தன் வில்லாண்மையை இராமன் நிலை நாட்ட வேண்டாமா? என்னைக் கண்ட அரக்கன் விழிகளைக் காகங்கள் கொத்த

வேண்டாமா? அரக்கியரின் மங்கலநாண் இற்று விழும் போது அல்லவா, என் நாணத்திற்குப் பொருளுண்டு. இலங்கை, எலும்பு மலையாக மாறவில்லை என்றால், என் குடிப்பிறப்பையும், ஒழுக்கத்தையும், வழுவாத கற்பையும், பிறருக்கு எப்படிக் காட்டுவேன் . . . அது மட்டுமா? எண்ணிப் பார் நானே என்னை விடுவித்துக் கொள்ள முடியாதா? இலங்கை என்ன, எல்லா உலகங்களையும், என் சொல்லால், கற்புத் தீயால் சுடுவேன். ஆனால், அது தூயவனின் வில்லின் ஆற்றற்கு மாசு ஆகுமே'' என்கிறாள்.

*'' அல்லள் மாக்கள் இலங்கையது ஆகுமோ*
*எல்லை நீத்த உலகங்கள் யாவும், என்*
*சொல்லினால் சுடுவேன், அது, தூயவன்*
*வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்!''*

கற்பின் கனலியின், இந்தச் சொற்களில் எத்தனை வீரம்! எத்தனை தெய்வீகம்! தலைவன் புகழுக்கு மாசு விளையாமல் இயங்கத் துடிக்கும் லட்சியப் பெண்மை, இந்தப் பாடலில், இயற்கையை - பஞ்ச பூதங்களை ஏவல் கொள்ளும் ஆற்றல் நிறைந்த தெய்வீகப் பெண்மையாகவும் விசுவருபம் எடுக்கின்றது.

தொடர்ந்து பேசுகிறாள் பிராட்டி.''புலன் அடக்கம் நிறைந்த உன்னையும், ''ஆண்'' என்று தான் இவ்வுலகம் கூறும். இராகவன் மேனியைத் தவிர, வேறு எந்த உறவையும் நான் தீண்டுதல் கூடுமோ? இராவணன் கூட என்னைத் தொடவில்லை; தூக்கிக், கொணர்ந்திருந்தால், அவன் உயிருடன் இருந்திருப்பானா? தொட்டால், ஒரு கண நேரத்தில் மாண்டு தீர்வான் என்று பயந்தே, மண்ணை அப்படி பெயர்த்து எடுத்துக் கொண்டு ஏகினான்'' என்கிறாள். வான்மீகம், இராவணன் சீதையைத் தொட்டுத் தூக்கிச் சென்றதாகவே விவரிக்கின்றது.

*''. . . . . அவன் தாமரைக் கண்ணியான சீதையைக்*
*கூந்தலில் இடக் கையாலும், இரு தொடைகளிலுமே*
*வலக் கையாலும் பிடித்துத் தூக்கினான் . . . . .*
*தொடையில் தாங்கி, அதிலிருந்து ரதத்தில் வைத்தான்.*
*. . . . .''*

(வான்மீகம் - ஆரணியகாண்டம் - ஸர்க்கம் 49 - ஸ்லோகம் 20-22)

கற்புக் கரசியை, கீழ்மையான் தீண்டுவதை, கம்பன் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. வான்மீகத்தில் யுத்த காண்டத்தில், பதிமூன்றாம் ஸர்க்கத்தில், ''அந்நியமாதரை, வலியத் தீண்டினால், அப்பொழுதே உன் தலை நூறு சுக்கலாகப் பிளந்து விடும்'' என்று பிரம்மன், இராவணனைச் சபித்ததாக ஒரு குறிப்பு வருகின்றது. இந்தக் கருத்தைப் பயன் படுத்திக், கம்பன், ''சீதையைத் தீண்டவில்லை, இராவணன் தோள் வலியால் கீண்டான் நிலம்,

யோசனை கீழோடு மேல் . . .'' என்று மாற்றி அமைக்கிறான். பெண்ணியல் தீபத்தின் கற்பின் மேன்மையை நிலைநாட்டுவதற்கு, பிரம்மனின் சாபம், ஓர் ஒப்பற்ற கருவியாகக் கம்பனால் பயன்படுத்தப்படுகின்றது.

சீதை தொடர்ந்து பேசுகின்றாள். ''விருப்பம் இல்லாத பெண்ணைத் தீண்டினால், உன் தலை வெடிக்கும்'' என்று இராவணனைப் பிரம்மன் சபித்தான்; அந்தச் சாபம் தான் என் உயிரைக் காப்பாற்றி வருகின்றது. வீடணன் புதல்வி திரிசடை, என் மீதுள்ள கருணையால், இந்த சாபத்தை என்னிடம் தெரிவித்தாள்; என் நடுக்கத்தைப் போக்கினாள்'' . . . . . .

''இந்த சாபம் இருப்பதாலும், தர்மம் என்றும் பொய்க்காது என்னும் நம்பிக்கையாலும், என் நாயகனின் வீரத்தை எண்ணியும், என்னுடைய தூய்மையைக் காட்டி, நிலை நாட்டவும் தான் இவ்வளவு காலம் உயிரோடு இருந்தேன். ''அங்கிருந்து அகழ்ந்து கொண்டு, இராவணன் இங்கு வைத்த நிலம், இளவல் கட்டிய நீண்ட பர்ணசாலையோடு நிற்கின்றது. மெய்யை உணரும் உன் கண்களால், இந்தப் பர்ணசாலையைப் பார் . . .'' என்கிறாள்.

*''ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்து கொண்டு*
*ஈண்டு வைத்தது, இளவல் இயற்றிய*
*நீண்ட சாலையோடு நிலை நின்றது*
*காண்டி, ஐய, நின் மெய் உணர் கண்களால்''*

''இந்தப் பர்ணசாலையை விட்டு, ஒரு பொழுதும் நான் நீங்க மாட்டேன்; எப்போதாவது, இராமன் திருமேனியை ஒத்திருக்கும், இந்தப் பொய்கைக்கு வருவேன்; அவ்வளவு தான். அதனால் என்னைத் தூக்கிச் செல்வது உன் காரியமன்று. நீ இராமனிடம் உடனடியாக மீண்டு செல்வதே முக்கியமான காரியம்'' என்கிறாள்.

பெருந்தேவியின் கற்புத்தவம் - லட்சியத் தவம் - உன்னதமாகச் சித்தரிக்கப்படும் ''கம்பன் பாணி'' இது. ''தவம் செய்த தவமாக'' பிராட்டியை அனுமன் போற்றுவதற்கும், மிகச் சிறந்த அனுபவமாகப் பொலிந்த காட்சி இது. உலக நாயகனின் பெருந்தேவியின் தவத் தொழிலை, ''நன்று, நன்று'' என்று போற்றி, உவந்து, மகிழும் அனுமன், ''இன்னும் சில பகல், மனத்திடத்தைக் கைவிடாமல் அருள்கூர்ந்து இங்கு தங்கியிருங்கள், தாயே, இராவணனால் இருண்டு கிடக்கும் பூமியில், விடியல் தோன்றும்; தெளிவு பிறக்கும். உன்னைப் பிரிந்து துயருற்று, மருளும் மன்னவரிடம் நான் என்ன சொல்வது?'' என்கிறான். விடைபெற இருக்கும் அனுமனிடம் சீதை, பேசத் தொடங்குகின்றாள். இராவணன் கொடுத்துள்ள கெடு, இரண்டு மாதங்கள், ஆனால், தன்னால் இன்னும் ஒரு மாதம் கூட துயரச் சுமையைத் தாங்கி இருக்க முடியுமா என்று சஞ்சலம் அடைகிறாள் பிராட்டி.

பிராட்டியின் லட்சியப் பெண்மையையும், தெய்வீகப் பெண்மையையும், அடித்தலத்திற்குத் தள்ளி, மானுடப் பெண்மை மேலெழும்புகின்றது. பேசத் தொடங்குகின்றாள். "இன்னும் ஒரு மாதம் . . . . ஒரே ஒரு மாதம் . . . எப்படியாவது உயிரைக் காத்துக் கொள்கின்றேன்; பிறகு, உயிரைப் பிடித்து நிறுத்த, என்னால் ஆகாது.

*"இன்னும் ஈண்டு ஒரு திங்கள் இருப்பல் யான்*
*பின்னை ஆவி பிடிக்கின்றிலேன்*
*இது மன்னன் ஆணை . . . . "*

என்று விம்முகின்றாள்.

"நிருதர் நீள் நகர் சிறையிருந்தேனை அப்புனிதன் தீண்டுமோ" என்னும் தவிப்பு மீண்டும் தலை தூக்குகின்றது." ஆரம் தாழ் திருமார்பனுக்கு, ஏற்ற மனைவியில்லையோ! அப்படி இருந்தாலும், . . . . அப்படி இருந்தாலும் . . . . . " என்று தயங்குகின்றது உள்ளம். "பரிவு இகந்த மனத்து, ஒரு பற்று இலாது", "நீ வருந்தலை, நீங்குவன் யான்" என்று, நெஞ்சில் ஈரம் இல்லாது, ஒரு முறை சொன்னரே! சிந்தா குலம் நிறைந்த சீதை உள்ளம் சரி . . ." க்ஷத்திரிய குலத்தில் பிறந்து, மாற்றான் கவர்ந்த மனைவியை இராமனால் மீட்க முடியவில்லை என்னும் பழி நிலையாக ஏற்படலாமா? தன் வீரத்தைக் காக்க வேண்டாமா . . . இது இராமன் கடமையல்லவா? . . ." இப்படி ஓடும் சிந்தனையை, அப்படியே அனுமனிடம் கூறுகின்றாள்.

*"ஆரம் தாழ் திரு மார்பற்கு அமைந்ததோர்*
*தாரம் தான் அலளேனும், தயா எனும்*
*ஈரம் தான் அகத்து இல்லை என்றாலும், தன்*
*வீரம் காத்தலை வேண்டு" என்று வேண்டுதியால்."*

இராவணனை நோக்கி, வீரகர்ஜனை புரிந்து, இராமன் பெருமையை பறைசாற்றிய நெஞ்சுரம் எங்கே? கணையாழியைக் கண்டு, விம்மிக் கலங்கிய அன்புள்ளம் எங்கே! ஏன் இந்த கலக்கம்? முன்பு கண்டது போல், விண்ணளாவப் பறக்கும் ஒரு பறவை, சில சமயம் தரையில் இறங்கி வந்து, தத்தித் தத்தி நகரும். அத்ததைய மானிடப் பெண்மை, துயரால் சாம்பி இப்போது அனுமன், மருளும் மன்னவர்க்குத் தான் வாசகம் அருளும்படி கேட்டான். ஆனால் சீதையோ, இராமனோடு நிற்கவில்லை. இணைபிரியா இலக்குவனுக்கும் செய்தி அனுப்புகிறாள். "மஞ்சனை வைது, வழிக் கொள்வாய்" என்று இலக்குவனை அனுப்பிய நேர்மையின்மை சீதையின் மனத்தை உறுத்துகின்றது. "இளவல் எத்தகைய அறிவாளி! எது மாயை, எது உண்மை என்பதைப் பற்றிய எப்படிப்பட்ட சரியான கணிப்பு! பொன்மானைப் பற்றிய வாக்குவாதத்தில், "இல்லாதன இல்லை, இளங்குமரா" என்று பேசிய இராமன் சொல் பொய் ஆயிற்று. பொன்மான் பொய்மான்

ஆயிற்று; இலக்குவனுக்கே வெற்றி! ''பெருமகனுக்கு இன்னல் நேர்ந்தது''என்று நான் வெதும்பிய போது, ''எம்பிரான் ஆற்றலின் மேலும் ஓர் ஆற்றல் உண்மையோ'' என்று கேட்டான். அவனுடைய உறுதியான நம்பிக்கை, வெற்றியடைந்தது; என் ஐயம் தோற்றது'' என்று எண்ணும் சீதை, ''ஏத்தும் வென்றி இளையவன்'' என்று இலக்குவனைப் போற்றுகின்றாள். ''என் ஐயன் நல்லன்; ஆரியன் நல்லன்'' என்று இராமன் போற்றவில்லையா? அப்படித்தான் சீதையும் போற்றி, 'ஏத்தும் வெற்றி இளையவரிடம்' ஒரு சொல் கூற வேண்டும். என்னைக் காத்துநின்ற அவர்தான், சிறையில் இருந்து மீட்கவும் வேண்டும்'' என்கிறாள். ''மஞ்சனை வைது'', வெஞ்சின விதியினால் ஏற்பட்ட விபரீத உரசல், என்னும் குறிப்பு, பிராட்டியின் கழி விரக்கத்தை வெளிப்படுத்துகின்றது.

''ஏத்தும் வென்றி இளையவற்கு, ஈது ஒரு
வார்த்தை கூறுதி; மன் அருளால் எனைக்
காத்து இருந்த தனக்கே கடன், இடை
கோத்த வெஞ்சிறை வீடு'' என்று கூறுவாய்''

''சிறைவீடு இன்னும் ஒரு மாதத்திற்குள் நடைபெற வேண்டும். நான் செய்திருந்த புண்ணியம், ஒரு மாதத்திற்குள் தீர்ந்து போய், அவன் இங்கு வரவில்லை என்றால் . . . வரவில்லையென்றால் பிறகு இங்கு வரவேண்டாம்''என்கிறாள். புதுப்புனலால் பொங்கும் கங்கைத் திருநதி அவள் கண்முன் விரிகின்றது. ''ஒரு மாதத்திற்கு மேல் உயிர் வாழேன். ஒரு மாதத்திற்குப் பிறகு, அவர் கங்கைக் கரைக்குச் செல்லட்டும்; தன் கையால் எனக்கு ஈமக் கடன் செய்யட்டும்'' என்று விக்கியமுது கூறுகின்றாள். மானைப் பிடிப்பது என்றாலும், அதை இராமன் தான் செய்ய வேண்டும். ''நாயக, நீயே பற்றி நல்கலை போலும்'' என்று கேட்பாள். ஈமக் கடன் செய்வது என்றாலும், இராமன் தன் செங்கையால் செய்ய வேண்டும் என்று கெஞ்சுவாள். இப்படி எதற்கும் எதைச் செய்வதற்கும் இராமன், இராமன், இராமன் தான் வேண்டும். இப்படி 'இராமன்' 'இராமன்' என்று துடிக்கும் பெண் சீதை. காதலாகிக் கசிந்துருகி நிற்பவள்.

அடுத்து, ''சிறக்கும் மாமியர் மூவர்க்கும், சீதை ஆண்டு இறக்கின்றாள், தொழுதாள்'' என்று சொல்லுங்கள் என்கிறாள். இராமனின் ஸஹதர்மிணி அல்லவா? எனவே கைகேயியும், அவளுக்கு சிறக்கும் மாமிதான். சிறக்கும் மாமியர் மூவர் தான்; இருவர் இல்லை.

பின்னர், கரம் பிடித்த கணவருடன், காலாகாலமும் வாழத் துடிக்கும் பெண் உள்ளம், எப்படியெல்லாம், அந்திம காலத்தில் புலம்புமோ, அப்படிப் பேசுகிறாள் சீதை. ''என்னைக் கரம் பிடித்த நாளிலே, இந்தப் பிறவியில், இன்னொரு பெண்ணை மனத்தாலும் நினையேன்'' இருமாதரைச் சிந்தையாலும் தொடேன் என்று வாக்களித்தான். அதை மற்றவர்களுக்குத் தெரியாமல், அவனிடம் மட்டும் ரகசியமாக நினைவுபடுத்து. ''திருச்செவி சாற்றுவாய்'' என்று விம்முகிறாள்.

‘‘இங்கு நான் இறந்து விட்டாலும், மீண்டும் எனக்குப் பிறவி வேண்டும்; தீவினையின் பயன் தாக்காத பிறவி வேண்டும். எதற்கு? மீண்டும் அவனையே கணவராக அடைவதற்குத்தான் ‘‘இந்த வரம் தருவாய், எனக்கு எந்த வரங்களும் இல்லை என்றாலும்’’ என்று அவனைத் தொழுது வேண்டியதாகச் சொல்’’. என்கிறாள். ‘‘இம்மைமாறி, மறுமையாயினும் நீயாகியர் என் கணவனே’’ என்று வேண்டுவது, சுமங்கலித்துவத்தின் ஜீவநாடி.

*‘‘ஈண்டு நான் இருந்து, இன்னுயிர் மாயினும்*
*மீண்டு வந்து பிறந்து, தன் மேனியைத்*
*தீண்டவாவது ஓர் தீவினை தீர் வரம்*
*வேண்டினாள் தொழுது என்று விளம்புவாய்’’*

‘‘ஏதோ, வனவாச காலத்தில் இணைந்து இருந்தோம்; ஆனால், மங்கலம் பொங்கும் வாழ்க்கையில் பங்குபெற நான் பாக்கியம் செய்யவில்லையே! பட்டாபிஷேகத் திருக்கோலம். யானை மீது, கம்பீரமாகச் செல்லும் வீதி வலம்; மகாராஜனாய், சிம்மாசனத்தில் வீற்றிருந்த ஆளும் பெருமை இவைகளைக் காண, நான் கொடுத்து வைக்கவில்லையே . . . .’’ ‘‘விரசு கோலங்கள் காண விதியிலேன் . . . ’’ என்று தேம்புகிறாள். ‘‘தாயரும், தம்பியரும், குடிமக்களும் அடைந்துள்ள ஏக்கத்தைப் போக்க, அயோத்தி செல்லாமல், இங்கு எப்படிவர முடியும்? ... சரி புக்ககம் மட்டும் அன்று, பிறந்த இடத்திலும் என் தந்தை, தாய், சுற்றத்தினர் அனைவர்க்கும் என் வந்தனையைத் தெரிவி. என் தலைவனின் துணைவனை, கவிவேந்தன் சுக்கிரீவனிடம், சுந்தரத் தோளனுக்குத் துணையாய், உடன் சென்று. அயோத்தியில் பட்டாபிஷேகம் செய்து வைக்கச் சொல்’’ என்று சொல்லி, நிறுத்துகிறாள் சீதை. பெண் மனத்தில் அலைபாயும் இந்த ஏக்கக் குரலைக் கேட்டு, யார்தான் உருக மாட்டார்?

அனுமனும் உருகினான். ஆனால், அதனை வெளிப் படுத்தாமல், நேர் எதிர்மறைப் பாணியில், அதிர்ச்சி தரும் முறையில் பேசுகின்றான். ஒரு பாத்திரத்தின் சொல்லும், செயலும் எப்படி இன்னொரு பாத்திரத்தின் சொல்லையும், செயலையும் உருவாக்கும் என்பதற்கு இந்த உரையாடல் நல்ல சான்றாகும். இத்தகைய பாத்திரப்படைப்பிலும், நாடகப் பாங்கிலும், கம்பனின் சாதனை பலரும் அறிந்த ஒன்று.

சீதையின் மனப்போக்கினை , அனுமன் மாற்ற முயற்சி செய்வதை அறிவுறுத்துவது போல், கவிதையின் சந்தமே இங்கு மாறுகின்றது. ‘‘அம்மா, அச்சமும், துயரமும் , தடுமாற்றமும், இன்னமும் உங்களிடமிருந்து போகவில்லையா?’’ என்று தொடங்குகிறான். ‘‘கணையாழியைக் கண்ட பிறகும், அதை உங்கள் கவசமாகப் பெற்ற

பிறகும், அச்சமா? இராமனின் மருண்ட நிலையைக் கேட்ட பிறகும், தடுமாற்றமா? ''செம்மையாய் உயிர் தந்தாய்'' என்றீர்கள், உங்கள் துயரம் நீடித்தால், என் செம்மைக்குப் பொருள் ஏது?''என்று' அனுமன் மனம் அசை போட்டிருக்கலாம். ஏன்? தன் தனித்த சிந்தனையின் துயர ஆழத்தின் சாயலைக் கூட, அனுமனிடம் சீதை குறிப்பிடவில்லை. இது அவளுடைய மாபெரும் சிறப்புக்களில் ஒன்று.

அனுமன் தொடர்கின்றான். ''அன்பு என்பது உங்கள் ஒருவரிடம் தான் இருக்கின்றதா? இராமனிடம் இல்லையா? நீங்கள் இங்கே இறந்து விடுவீர்கள்! மெய்தான்! உங்கள் பிரிவால், ஒய்ந்து கிடப்பவன், எப்போதும் உயிர் பிழைத்து இருப்பான்! அயோத்திக்குச் சென்று மகுடமும் சூட்டிக் கொள்வான், இல்லையா?.இப்படியும் ஒரு சிந்தனையா?

*''வீவாய் நீ இவண்; மெய் அஃதே?*
*ஓய்வான் இன் உயிர் உய்வானும்!*
*போய் வான் அந்நகர் புக்கு அன்றோ*
*வேய்வான் மௌலியும், மெய் அன்றோ?''*

''இதே உணர்வுடன், அருவிவெள்ளம் போல், இருபத்தைந்து பாடல்களுள் அனுமன் உரையாகப் பாய்கிறது.

''உன்னை நலிந்தவரைக் கொல்லவே மாட்டோம்; எங்கள் உயிரைக் காத்துக் கொண்டு நாங்கள் எல்லோரும் செல்ல. எங்கள் தலைவனும், வில் ஏந்திய வீரனாய், செல்ல வேண்டாமா?

''தன்னைத் தீண்டா வஞ்சகர் தீண்டுவதற்கு முன் மாண்டுவிட்டாள், கற்புடையாள்! அவள் புகழுக்கு மாசு இல்லை என்று மனம் தேறி நாங்கள் ஊர் திரும்பினால், எங்கள் வீரம் எவ்வளவு நன்றாகத் துலங்கும்!''

. . . . . இவ்வாறாகத், தம்மைத் தாம் ஏளனம் செய்யும் முறையில் பேசத் தோடங்கி, '' தாயே நீ உன் உயிரைப் போக்கிக் கொண்டால், அதன் பிறகு பகைவர் மட்டும் அல்லாமல், ஏழு உலகத்தையும் அம்பு மாரியால் சுட்டாலும், என்ன பயன்? இராமனுக்கு நேரும் பழி தீருமா?'' என்று பலவும் சொல்லி . . . . இன்னும் சில நாட்களுக்கு, நீ இடர் தீராதவளாய், இன்னாத சிறையில் இருப்பதனால், எல்லோரும் நல்ல நாளைக் காண முடியுமே! உன் 'சிறை மீட்பை'நேரடிக் காரணமாக வைத்து, பாவத்தை வீழ்த்தி, அறத்திற்கு வாகை சூட்ட முடியுமே! நீ ஒருத்தி துயரத்தை சகித்துக் கொள்வதனால், சில நாட்களுக்குச் சகித்துக் கொள்வதனால், உலகத்தில் எல்லாரும் துயரம் நீங்கிய நல் வாழ்வைப் பெறுவார் என்றால், அது உயர்வு தானே? உன் ''சிறை மீட்பின் மூலம், உலகில்

உள்ள நல்லோர் வாழ்வெல்லாம் நலம் பெறுமே! என்கிறான். ''உலகத்தோர் நலம் பெற, அறம் வாழ, சீதை, சிறைபட்டிருக்கும் துயரத்தைச் சிறிது காலம் சகித்துக் கொள்ளக் கூடாதா?'' என்பது அனுமனின் ஆசை.

*''சில் நாள் நீ இடர் தீராதாய்*
*இன்னு வைகலின், எல்லோரும்*
*நல் நாள் காணுதல் நன்று அன்றோ!*
*உன்னால் நல் அறம் உண்டானால்?''*

'சிறை இருந்தாள் ஏற்றத்தின்' பரிமாண வளர்ச்சியும், உயர்வும் இங்கு துல்லியமாய் விளங்குகின்றது. சிறையிருந்தவள் மீட்கப்பட்டு, துயரம் நீங்குவது முதல் நிலை; இராகவனே வந்து தன் வில்லின் ஆற்றலால், இராவணனை வீழ்த்தி, சீதையை சிறைமீட்க வேண்டும்; அதற்காக, அவன் வரும் வரையில், சிறைவாசத்தின் துயரத்தைப் பொறுத்துக் கொண்டு, அவனுக்குப் பழி வராமல் காத்து, அவனால் சிறை மீட்கப்பட்டு, அவன் புகழ் அடைய சீதையின் துயரம் நீங்குவது இரண்டாவது நிலை; இராம-இராவண யுத்தம் ஏற்பட நேரடிக் காரணமாய், சீதை - இராவணனால் அபகரிக்கப்படுவதும், இலங்கையில் அவள் சிறைப் படுத்தப்படுவதும் அமைந்தாலும், இந்தக் காரணத்தின் காரியமாய் அமைவது, பாவம் தோற்க, அறம் வெல்வதும் தீயோர் அழிய, நல்லோர் வாழ்வதும் இது மூன்றாவது நிலை. இராமன் போரில் வென்று வாகை சூடும் வரையில், சிறைவாசத் துயரைப் பொறுத்துக் கொள்ளும் தியாகத்தை, சீதை மேற்கொண்டால்தான், ''அறம் வெல்லும்; பாவம் தோற்கும்; உலகில் நல்லோர் வாழ்வர்; தீயோர் அழிவர்'' இந்த ஒப்பரிய தியாகத்தைச் செய்யலாகாதா என்றுதான் அனுமன் வேண்டுகின்றான். ''உன்னால் நல் அறம் உண்டானால், நீ சில நாட்கள் சிறைவாச துயரத்தைச் சகித்துக் கொள்ளக் கூடாதா'' என்று கேட்கிறான்.

இந்த மிக உயர்ந்த மூன்றாம் நிலையை - மனித குலத்தை - அறத்தை - வாழ்விப்பதற்காக, தனக்கு ஏற்படும் ''துன்பத்தைச் சகித்து கொள்ளும்'' தியாகத்தை, சிறை இருக்கும் மாண்பினை சீதையின் ஒப்பற்ற பெருமையாகக் காண்கிறார் சுவாமி விவேகானந்தர்'' மக்கள் இனத்திற்குத் ''துன்பச் சகிப்பு'' என்னும் தியாகத்தின் வடிவம் சீதையே'' என்று போற்றுகின்றார். தான் சிறையில் இருந்து கொண்டு, உலகை விடுவிக்க வந்த எம்பெருமாட்டியின் பெருமைகளை எண்ணித்தான், சான்றோர் இராமாயணத்தைப் போற்றிப் பரவினர்; ஸ்ரீ பிள்ளைலோகாச் சாரியார், ''சிறை இருந்தாளின் ஏற்றம் கூறுவது இராமாயணம்'' என்றார்; ''சீதாயாச் சரிதம் மகத்'' என்றார் வால்மீகி.

''சிறைவீடு பெற்று தன் துயர் நீங்குதல்'' என்று தொடங்கி, ''தன் நாயகன் தன்னைச் சிறைமீட்டு, பழி நேராமல் புகழடைதல்'' என்று வளர்ந்து, ''சிறைவீடு பெறுதலால் உலகம்

நல்வாழ்வு பெறும் என்பதனால்'' சிறைவீடு பெறும் சூழ்நிலை உருவாகும் வரையில், பிராணத்தியாகம் செய்ய நினையாமல், உலக நன்மைக்காக, தான் ஒருத்தி சிறையில் இருந்து துன்பத்தைச் சகித்துக் கொள்ளத் தியாகச் சுடராக உயர்ந்து, படிப்படியாக ஏற்றம் பெறுகின்றாள் சிறையிருந்த பெருந்தேவி. இந்த ஏற்றத்திற்கு நுழைவாயிலாய் அமைகின்றது அனுமனின் ஆசை.

இந்த நிலையைச் சுட்டிக்காட்டிய அனுமன், இராம- இராவணயுத்தத்தில். அரக்கர்களுக்கு ஏற்படக்கூடிய பேரழிவினை வர்ணிக்கிறான். இரத்த வெள்ளம் பாய, ஏழு கடலும் நன்றாகக் கலந்து பேரொலி செய்யுமாம். காகமும், கழுகும் ரத்தக் கடலில் நீராடி, மகளிரின் கண்ணீர் ஆற்றில் குளிக்குமாம். அரக்கியர் இழந்த மங்கலத்தாலி மலைபோல் குவியுமாம். அரம்பையர், ஆடிய நடன அரங்கில் குரங்குகள் ஆடுமாம்; பழிப்பில்லாத சீதை திருமேனியை நோக்கிய இராவணன் கண்களைக், காகம் கொத்தித் தின்னுமாம்; சானகி என்னும் கற்புத் தழல் நடுவில் இருப்பதால், இராமன் அம்பு என்னும் பெருங்காற்றினால், தீப்பிடித்து இலங்கை என்னும் பொன்னகரம் உருகுமாம். இப்படி போர் விளைவுகளை வருணிக்கும் அனுமன், ''அம்மா, நீங்கள் ஒரு மாதம் கூட பொறுத்திருக்க வேண்டாம்; நான் நாயகனைக் காண வேண்டியது தான். உடனே ஆண்தகைப் புறப்பட்டு விடுவானே'' என்று கூறி, ''இடி இடித்தாலும், பாம்பு படமெடுத்து நடுங்கினாலும் அதை உணராத, நிலையில், உன்னை பிரிந்த சோகத்தில் அழுந்தியவன் இராமன். மத்துறு தயிரைப் போல் அல்லவா அவன் உயிர் தத்தளிக்கின்றது! இந்நிலை உடையவன் உயிர் தரிப்பானா?'' என்று இராமன் துயரைக் கூறி, என் தோளின் மீது அண்ணலும், அங்கதன் தோளின் மீது இளையவனும், இங்கு வருவதை விரைவில் காண்பாய் என்கின்றான். கடைசியில் முத்தாய்ப்பாக,

*''. . . . நீ குறித்த நாளில்*
*விராவு அரு நெடுஞ்சிறை மீட்கிலான் எனில்*
*பராவரும் பழியொடு பாவம் பற்றுதற்கு*
*இராவணன் அவன், இவன் இராமன்''*

என்று தீர்ப்பளிக்கின்றான். சீதை திடுக்கிடுகிறாள்.

அனுமன் உரையினைக் கேட்டு, சீதையின் அறிவு தெளிகின்றது. ' நாம் ஏதேதோ பொருத்தம் இன்றி சொன்னேனோ''என்னும் தயக்கமும் நேர்கின்றது. ''சரி, சரி ஐய, நீ சீக்கிரம் புறப்படு; நான் சொன்னதில் தீயவை எல்லாம் ஒதுக்கி விடு. நான் இனி ஒன்றுமே சொல்ல மாட்டேன்.'' ''ஒன்றும் சொல்லலள்''என விரைவுடன் மொழிந்து, இராமன் காகாசுரனைத் தண்டித்த நிகழ்ச்சியையும், சீதையின் கிளிக்கு, ''கைகேயி'' என்று பெயரிடும்படி சொன்ன பண்பையும், அடையாளச் செய்தியாகக் கூறுகின்றாள்.

பிறகு தன் திருத்துகிலில் முடிந்து வைத்திருந்த சூடாமணியை எடுத்தாள்; தன் மலர்க்கையில் தாங்கி, இராமனை நினைத்து ஏங்கினாள்; அதன் ஒளியைக் கண்டு அனுமன் வியந்தான்;

''சூடையின் மணி; கண்மணி ஒப்பது, தொல் நாள்
ஆடையின் கண் இருந்தது; பேர் அடையாளம்;
நாடி வந்து எனது இன் உயிர் நல்கினை, நல்லோய்
கோடி என்று கொடுத்தனள்; மெய்ப் புகழ்க் கொண்டாள்''

சூடாமணியைத் தொழுது வாங்கினான் அனுமன். அதைப் பாதுகாப்பாக வந்தனை செய்தான். சீதையை வணங்கினான்; பிறகு அழுதான்; மூன்று முறை சீதையை அழுதபடியே வலம் வந்து வணங்கினான்; சித்திரப் பாவை போல் இருந்த சீதையும் அன்போடு போற்றினாள்; அனுமன் புறப்பட்டுச் சென்றான்.

அனுமன் சீதை இருவருமே, இந்தப் பாடலில் பேசவே இல்லை. இந்த இருவர் - மௌனத்திற்கு, அனுமன் அழுகைக்கும் 'பாஷ்யம்' எழுதக் கூடியவர் யார்?

இதன்பிறகு, காப்பியத்தில் இடம் பெறும் காட்சி மாற்றமும், கதைத் தொடர்ச்சியும். வாசகர்கள் அறிந்தது தான். அசோகவனத்தை அழித்து, ஊழிக் காலத்து உருத்திர மூர்த்தியை ஒத்து நின்ற அனுமனைக் கண்டு அஞ்சினர் அரக்கியர். சீதையை நெருங்கி, ''அம்மா, இவன் யார் என்று தெரியுமோ? என்று கேட்டனர். சீதை சொல்லும் விடையாக; ''தீயவர்கள் செய்யும் மாயம் தீயவர்களுக்குத் தான் தெரியும்; தூயவர்க்குத் தெரியும் என்றால், பொன் மானின் மாயத்தை உணராமல் இருந்திருப்பேனே?'' என்னும் பொருளுடைய பாடல் ஒன்று பல பிரதிகளில் அமைந்துள்ளது. இதன் அடிப்படையில் ''அனுமனை எனக்குத் தெரியாது'' என்று கூறி சீதை உண்மையை மறைத்தாள் என்று, சீதையின் பண்பில் களங்கம் காண்பவர் உண்டு. ''ஆபத்து நேரும்போது பொய் சொல்லலாம்'' என்னும் சாஸ்திர விதி விலக்கை ஏற்று, இதை நியாயப்படுத்தும் நிபுணர்களும் உண்டு. கம்பராமாயண விற்பன்னர்களுக்கிடையே இந்தப் பாடலைப் பற்றிய சர்ச்சை இன்றும் ஓயவில்லை. வான்மீகியின் போக்கினை ஏற்று, கோவிந்தராஜரின் உரையில் முழுக்க முழுக்க ஈடுபட்டு, ' இராமாயண சிகாமணி' என்று புகழப்படும் ஸ்ரீமான் சுந்தராச்சாரியார் அவர்களும் இக் கருத்தை ஏற்கிறார். யார் சொன்னாலும், எப்போது சொன்னாலும் பொய், பொய் தானே! இந்தக் கருத்தை ஏற்று, சீதைக்குக் களங்கம் கற்பிக்க மனம் வராத பி. ஸ்ரீ ஆச்சாரியா அவர்கள், ''தீயவர் தீய செய்தல்'' என்று தொடங்கும் பாடலை, ஒரு முறை கவனத்துடன் படித்துப் பார்க்கும்படி நம்மை நெறிப்படுத்துகிறார். ''சந்தப் போக்கிலும், சொல் அமைப்பிலும், கருத்துக் கோர்வையிலும் எவ்வளவு நெருடல்! இப்பாடலுக்குப் பின்னும், முன்னும் அமைந்த பாடலுடன் இது பொருந்தவே இல்லையே! இது கம்பன் பாடல் என்று நினைக்கிறீர்களா? அன்று இது இடைச்செருகல். அடுத்த பாடல், என்றனர். அரக்கிமார்கள் வயிறு அலைந்து. . .'' என்று தொடங்க வேண்டும். இதில் ஒரே ஒரு எழுத்தை மாற்றி,'' என்றனர். . . அரக்கிமார்கள் வயிறு அலைத்து'' என இருவாக்கியமாகப் பிரித்து, இதற்கு முன் ஒரு பாட்டைச் செருகி

நட்டார்களே! ஒரு எழுத்தை மாற்றாமல், ''தீயவர் தீய செய்தல்'' என்றும் செருகல் பாடலை ஒதுக்கிவிட்டால், கருத்து குலையவில்லையே! ''அம்மா, இவனை அறிதியோ'' என்று கேட்ட அரக்கிமார்கள், சீதை பதில் சொல்வதற்குள்ளாகவே, வயிறு அலைத்து ஓடினார்கள்; காரணம், அதற்குள் அனுமன் ஒரு செய்குன்றை எடுத்து எறிகிறான்; அரக்கியர் நடுநடுங்கி ஓடுகின்றனர். அரக்கியர் கேள்விக்கு சீதை பதிலே சொல்லவில்லை'' என்று விளக்கம் தருகின்றார்! ''பொய்மை சர்ச்சைக்கு இவ்வாறு ஒரு முற்றுப்புள்ளி வைக்கிறார். பி. ஸ்ரீ. ஆச்சார்யா. அவர்களின், இந்த உயர்ந்த கருத்தையே, இக் கட்டுரை ஏற்கின்றது. ஆழ்வார் திருநகரிப் பதிப்பிலும் இந்தப் பாடல் இடம் பெற்றுள்ள விந்தைதான், இன்னமும் புரியவில்லை.

நிற்க, இலங்கை நிகழ்ச்சிகள் தொடர்கின்றன. அரக்கர் கைகளில் சிக்கி, அனுமன் இராவணனிடம் இழுத்துச் செல்லப்படுவதை, திரிசடை மூலம் அறிந்த சீதை துடி துடிக்கின்றாள். அவள் தாய்மை உணர்வு தலை தூக்குகின்றது. வேடன் ஒருவன் கையில், தன் குஞ்சு அகப்பட்டு கொள்ள, துடி துடிக்கும் தாய்ப் பறவை போல் அன்னப் பறவைபோல், புலம்புகிறாள்! ''வானளாவிய விசுவரூபம் எடுத்த நீ, சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த நீ, அரக்கர் கைகளில் சிக்க வேண்டுமா? இதுவா தருமம்? . . . . கடல் கடந்தும், மாற்றார் உடல் கடைந்தும், நீ ஊழி கடக்கவில்லை! இப்போது, அவர் கையில் சிக்கி விட்டாயே! கிஷ்கிந்தையில் இருந்து, இங்கு வந்தது எனக்குத் துன்பம் தருவதற்கா? கணையாழியைக் காட்டி, எனக்கு உயிர் தந்த உன்னை, ''ஊழிக் காண்பாய், சிரஞ்சீவியாக வாழ்வாய் என்று வாழ்த்தினேன். அந்த வாழ்த்து பொய்க்காது; ஆனால், தகுதியில்லாத காலத்தில், உன் வலியைக் காட்டி, பழியைப் பெற்றுவிட்டாயே! . . . என்னைக் கண்டு, மீண்டு சென்று இராமனிடம் செய்தி உரைத்த பின், நீ வழிகாட்டிட அவன் வருவான், அரக்கனைப் போரில் மாய்த்து என்னைச் சிறை மீட்பான் என்று இருந்தேன்; அந்தக் கொள்கையைச் சிதைத்து விட்டாயே!

> ''ஆழி காட்டி, என் ஆருயிர் காட்டினாய்க்கு
> ஊழி காட்டுவன் என்றுரைத்தேன்; அது
> வாழி காட்டுவதும் உண்டு; என்று உன் வரைப்புயப்
> பாழி காட்டி, பழியையும் காட்டினாய் . . . ''

> ''கண்டு போயினை நீள் நெறி காட்டிட,
> மண்டு போரில் அரக்கனை மாய்த்து, எனைக்
> கொண்டு மன்னவன் போம் என்னும் கொள்கையைத்
> தண்டினாய் – எனக்கு ஆர் உயிர் தந்த நீ!''

எனக்கு நம்பிக்கை ஊட்டி, உயிர் தந்த நீயே, என் நம்பிக்கையைச் சிதைத்து விட்டாயே! விதைத்து, செடியை வளர்த்தவனே, செடியைப் பிய்த்து எறிந்து விடுவது இயற்கையா?! என்று புலம்பித் தவிக்கிறாள்.

''தாயின் முன்னிய கன்றனையானான'' அனுமனுக்கு நேர்ந்த இன்னலைக் கேட்டு, மானுடப் பெண்மை, தவியாய்த் தவிக்கின்றது; தடம் புரியாமல் தளர்ந்து மயங்குகின்றது. ''தீயைச் சுட்டதோர் கற்பெனும் தீயினளுக்கு, இப்படி ஒரு துயரமா?'' என்று கரைந்து நிற்கிறான் கம்பன்.

அடுத்தபடியாக, தீயை வரம் கேட்டு ஏவல் கொள்ளும், தெய்வப் பெண்மையின் வாழ்வாகச் சீதையைச் சந்திக்கின்றோம். அனுமன் வாலில் தீ வைத்த அரக்கர்கள், '' குரங்கிற்கு உற்றதைக் காண வம்மின்' என்று அனைவரையும் அழைக்கின்றனர்; சீதையிடமும் இச் செய்தியை உரைத்தனர்; அவளும் ''உயிர் பதைத்தாள்; வேர்த்தாள்; உலர்ந்தாள்; விம்மினாள்; விழுந்தாள்; அழுதாள்; வெய்துயிர்த்தாள்'' தாய்மைப் பண்பு வீறிட்டு அலறுகின்றது. மானுடப் பெண்மை துடிதுடித்து சாம்புகின்றது. சிறிது நேரத்தில் தெய்வீகப் பெண்மை தலைதூக்கத் தொடங்குகின்றது. ''பெய்யெனப் பெய்யும் மழை'' என்று, மகளிர் கற்பு,பஞ்ச பூதங்களை ஏவல் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தது என்பதைக் கோடிட்டுக் காட்டினர் வள்ளுவப் பெருந்தகை. அவர்கள் ஆணைக்குக் கட்டுப்பட்டு, மழை பெய்யும்; தீ பரவி பொசுக்கும். அந்தந்த இயற்கைச் சக்தியும், தன் ஆற்றலை நிறுவும். ''சொல்லினால் சுடுவன்'' என்று சீதையே கூறவில்லையா! இது மட்டுமன்று. கற்பின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, தன் இயல்புக்கு மாறுபட்ட பண்புடனும் இயங்கும். அக்னிக்குச் சுட்டுப் பொசுக்கும் வெம்மை தான் இயல்பு! தன் இயல்புக்கு எதிர் நிலையில், ''வெம்மை''தண்மையாக மாறும் என்றால், அந்த மாற்றத்தை உண்டாக்கும் தெய்விகச் சிறப்பினை என்னென்பது! இந்த நிலைக்கு உயர்கின்றது சீதையின் தெய்வீகக் கற்பு!

''விம்மித் துடித்த சீதை'', தெளிவு பெற்று அக்னிக் கடவுளை வேண்டுகின்றாள். வாயு புத்திரன் அனுமன்; வாயுவின் நண்பன் அக்னி. ''காற்றும், நெருப்பும் சேர்ந்தாற் போல்'' என்றும் உலகவழக்கு தெரியும் இல்லையா? வாயுவின் நண்பன் அக்னி, தன் நண்பனான மகனுக்குத் துணையாக வேண்டாமா? எதிரியாக இருக்கலாமா? தாயே அனைய கருணையான் துணையே ... நாயே அனைய அரக்கர், அனுமனை வனத்தினால், நீயே பார்த்துக் கொண்டு இருக்கலாமா? அவன் பக்கம் அருள் செய்ய மாட்டாயா? உலகுக்கு சர்வசாக்ஷி நீ தான். உனக்கு எல்லாம் தெரியும். நான் கற்பினால் தூயேன் என்றால், அனுமனைச் சுடாதே'' என்று கூறித் தொழுது வேண்டுகின்றாள்.

*"தாயே அனைய கருணையான் துணையை ஏதும் தகவில்லா*
*நாயே அனைய வல்லரக்கர் நலியக் கண்டால் நல்காயோ?*
*நீயே உலகுக்கு ஒரு சான்று; நிற்கே தெரியும் கற்பினால்*
*தூயேன் என்னில் தொழுகின்றேன் எரியே அவளைச் சுடல் என்றாள்''*

சினமில்லாமல், சிரித்த முகத்துடன் சீதை வேண்டும் பொழுதில், அவள் கற்பின் தூய்மையைக் கருதி, அனுமனைச் சுடுவதற்கு, அக்னி தேவன் பயந்தான். அவ்வளவுதான்! மயிர்கள் தளிர்க்க, உடல் முழுவதும் சிலிர்க்கும்படி, அனுமனின் வால் எலும்புவரையிலும், தண்மையால் குளிர்ந்தது. உலகில் உள்ள அனல் முழுவதுமே குளிரத் தொடங்கியது. கடலில் உள்ள வாடவாக்கினி, புவியளாவிய சுவாலைத் தீ ,ஆகாயத்தில் பரவியுள்ள தீ, முனிவர் பேணும் மூவகைத்தீ, முப்புரம் எரித்தோனின் நெற்றிக் கண்ணின் தீ, அனைத்தும் குளிர்ந்தன. பிரமன் உள்ளங்கையில் உள்ள தீ குளிர்ந்தது; மலையை ஒத்த தன் வாலினை விழுங்கிய செந்தீ, எரிகின்ற போதும், சுடாமல் இருக்கும் தன்மையை நோக்கி, ''சானகியின் கற்பினால் ஏற்பட்டது இது'' என்ற பெருங்களிப்பை எய்தினான் அனுமன்.

''வெற்பினால் இயன்றதன்ன மேனியை விழுங்கி வெந்தீ
நிற்பினும் சுடாது நின்ற நீர்மையை நினைவின் நோக்கி,
அற்பினால் அறாத உள்ளத்து அனுமனும், சனகன் பாவை
கற்பினால் இயன்றது என்பான்; பெரியதோர் களிப்பனானான்''

சீதையின் கற்பின் பெருமை, தெய்விகப் பெண்மையாய் உயர்ந்து, வாழ்வளிக்க முற்படுவதை, கண் கூடாய்க் காண்கிறோம்; இந்த நிகழ்ச்சியால் உணர்கின்றோம். அவளைப் போற்றி வணங்குகின்றோம்.

இலங்கை முழுவதும் எரிந்தது; ஆனால், அசோக வனத்தில் சிறிதும் தீப்படவில்லை'' என்ற விஞ்சையர் சொல்ல, ''நல்ல வேளை, பிழைத்தேன்'' என்று சொல்லி, அனுமன் விரைந்து சென்று, சீதையின் தாள்களில் பணிந்தான். அனுமனைப் பார்த்த பிறகுதான், சானகி குளிர்ந்தாள்; ''பேச்சு எதற்கு? வந்தனம்'' என்று கூறி, மாருதி விரைவாகச் சென்றான்.

இந்த நிகழ்ச்சிக்கு பிறகு, சுந்தர காண்டத்தில் சீதையை நேருக்கு நேர் காணும் காட்சி அமையவில்லை. ஆனால் சீதையின் நினைவும், பெருமையும், உள்ளத்திரையில் இருந்து அகலவே இல்லை. சுந்தர காண்டத்தில் மற்ற படலங்களில், இராமன் நேருக்கு நேர் காண இராமன் காட்சி தராவிட்டாலும், அவன் பண்பும், பெருமையும், அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் ஆதார சுருதியாகவே விளங்குகின்றன. அதே போல்தான் சுந்தர காண்டத்தின் கடைசி படலமான திருவடி தொழுத படலத்தில், சீதையை நேருக்கு நேர் காணும் காட்சி அமையவில்லை. ஆனால் அவள் நினைவும், பெருமையும் தான் ஆதாரதமாக இயங்குகின்றன. ஞாலநாயகன் தேவி, அங்கு இலங்கையில் இருந்தபடியே,இங்குள்ளோர்க்கு எல்லாம் ஆசி கூறினான்'' என்று அனுமன் சொன்னவுடன், வானரர் அனைவரும் கைகூப்பி எழுந்து நின்றனர். தலைவணங்கித்

தாழ்ந்தனர். அப்பபடியானால் சீதையின் குண உயர்வு, எத்தனை அளவு, எல்லோர் மனத்தையும் ஆட் கொண்டிருந்தது தெரியவில்லை. அடுத்து, இராமனிடம் அனுமன் கூறும் செய்தியில், பேசுபவள் அனுமன், கேட்பவன் இராமன். ஆனால் பேசப்படும் செய்தியோ முழுக்க, முழுக்க "சீதை தான்" சீதையின் குணவர்ணனையின் சிகரமாய்த் திகழ்கின்றது. அனுமன் பேச்சு இதை, "சிறை இருந்தாளின் குண சௌந்தர்ய மகாத்மியம் என்னும் தனிப்பிரபந்தமோ இது!"என்று மலைத்து நிற்கிறார் பி.ஸ்ரீ. அவர்கள் "எந்த ரஸவாதிகளுக்கும் அகப்படாத, ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்துக்கு இணையான, கம்பீரமான கவிதைத் தொகுப்பு அது"என்று, மெய்மறந்து ஈடுபடுகிறார் மஹரிஷி வ.வே.சு அய்யர். கம்பராமாயணம் பயில்வோர்,படிப்போர் அனைவருடைய உள்ளத்தையும் கவருபவை இவை. பிராட்டி இருந்த தென்திசை நோக்கித் தொழுது, அனுமன் பேசமுற்படும் பாணியே தனி. "கண்டனன் கற்பினுக்கு அணியை" என்று தொடங்கி, அவள் உன்னத நிலையை எப்படி எல்லாம் வருணிக்கிறான் அனுமன்! இருபத்து மூன்று கவிகளில், சீதையின் எல்லைகாண முடியாத சிறப்பு இடம் பெறுகின்றது. அனுமன் கூறுகின்றான். "இலங்கையில், தவம் செய்யும் நங்கையைக் கண்டேன்? இல்லை, இல்லை; இப் பிறப்பு என்பதும், இரும் பொறை என்பதும், "கற்பு" என்னும் பெயருடைய சூட்சுமப் பண்பாடுகளெல்லாம் கைகோர்த்து, களிநடம்புரியக் கண்டேன்." என்கிறான். "இராமனின் பெருந்தேவி என்றும் உரிமைக்கும், தயரதன் மருமகள் என்னும் சத்திய உறவுக்கும், மிதிலை மன்னன் தனயை என்ற பெருமைக்கும் ஏத்த தல்லமைப் பண்பு அவளுடையது. இராமன் என் தெய்வம்; சீதையோ என் பெருந் தெய்வம்" என்று குதூகலித்து, தொடர்கின்றான் அனுமன். "பொன்னுக்கு நட்பு பொன்தான்; அவளுக்கு நட்பு அவள் தான்; அவளைத் சகதர்மிணியாகப் பெற்ற உனக்கு நிகர் நீ தான். "உங்கள் இருவரையும் தெய்வமாகப் பெற்ற எனக்கு நிகர் நான்தான்" என்று பொங்கிப் பூரிக்கிறான். அவள் கற்பு நிலையை நிறுவக் கம்பன் பயன்படுத்திய பிரமன் சாபம், இலக்குவன் அமைத்த பர்ணசாலை இவைகளைக் குறிப்பிடாமல், அனுமனால் இருக்க முடியுமா?

*"வேலையுள் இலங்கை யென்னும் விரிநகர் ஒரு சார் விண்தோய்*
*காலையும் மாலைதானும் இல்லது ஓர் கனக் கற்பச்*
*சோலை யங்கு அதனில் உம்பி புல்லினால் தொடுத்த தூய*
*சாலையில் இருந்தாள். ஐய, தவம் செய்த தவமாம் தையல்!"*

என்று வியந்து போற்றுகின்றான். "காண்டி ஐய நீ மெய் உணர் கண்களால், என்று கூறி, பெருந்தேவி, அனுமனுக்குக் காட்டிய சாலை அல்லவா? அதைக் குறிப்பிடும் இந்தப் பாடல் ஒரு உயிர்நிலைப் பாடல். மண்ணொடு கொண்டுபோன இர்ராவணன் செயலைக் குறிப்பிட்டு, அதற்குக் காரணமான பிரமன் சாபத்தைக் குறிப்பிடும் அனுமன்,

"இராவணன் தீண்டவில்லை" என்பதற்கு எத்தனை அடையாளங்கள்! என்று வியக்கிறான். பிரமன் படைத்த அண்ட கோளங்கள் சிதறவில்லை. ஆதிசேஷன் குளிரவில்லை. வானத்துச் சுடர்கள் விழுந்து விடவில்லை. வேதங்கள் பொய்க்க வில்லை என்கிறான். அவள் கற்பின் "மாண்பு, கண் கூடாகப் புலப்பட பர்ண சாலை சாட்சியாய் காட்சி தருகின்றது! " தவம் செய்த தவமாம் தையல்" என்று முத்தாய்ப்பு வைத்து, அனுமன் போற்றுவது சீதையின் வாழ்வையும், சிறப்பையும், குன்றில் இட்ட விளக்காய்க் காட்டும் ஒப்பற்ற நிலையாகும்.

அழகு என்றும் ஒரு "நுண்மை" ஒரு காலத்தில் தவம் செய்தது. அப்படி ஒரு தவம் செய்தது. அதன் விளைவாக "சீதை" என்னும் மாமகளைப் பெற்றது. "அழகு இவளைத் தவம் செய்து பெற்றது காண்" என்று, இதை, விம்மிதத்துடன் பேசுகிறான் கம்பன். "அழகு செய்த தவம்" "தவம் செய்த தவமாக" ஆரோகண கதியில் உயர்ந்த கொண்டே வந்தது தான் "சிறையிருந்தாள் ஏற்றத்தின் வரலாறு". தன்னைக் கருவியாகக் கொண்டு, "அழகு" என்னும் நுண்மை, சீதையைப் பெற்றது என்றால், "தவமாகிய நானே, தவம் செய்யத் தொடங்கினால் எப்படி இருக்கும் என்று, "தவம்" என்னும் பெருநிலை நினைத்ததோ என்னவோ! என்னும் தவத்தின் தவம் ஏற,ஏற சுடச் சுடரும் பொன் போல் ஒளிவீசி, "பொற்பின் நிற்பது பொலிவு"என்னும் உண்மையின் விளக்காய் சுடர்விட்டு தவமே அழகு என்றும், புதுப் பொலிவின் வடிவான பிராட்டியைத் தவம், தவம் செய்து பெற்றது; "சிறையிருந்தாளின் ஏற்றம்"சுந்தர காண்டமாய் - சுந்தர ராமாயணமாய் - நிலை பெற்றது.

'இராமனைப் பிரியேன்' என்னும் லட்சியத்துடன் கானகத்திற்கு இராமன் கரம் பற்றிச் செல்கிறாள் சீதை, வெஞ்சின விதியின் போக்கினை, வெல்ல முடியாமல், பொன்மானிடம், மனத்தைப் பறி கொடுத்து, அதன் விளைவாக இராவணனால், அபகரிக்கப்பட்டு, சிறைப்படுகின்றாள். அவள் துயரின், பல பரிமாணங்களை முன்பே கண்டோம். 'தன் துயரம் நீங்குமா'என்று துடிதுடித்து, ஏங்கியவள் தன் துயரம் மட்டும் அல்லாமல், தன் தலைவன் பழிக்கு ஆளாகாமல் மேன்மையடைய வேண்டும், என்னும் உறுதியில் நிற்கிறாள். தன்னுடைய துயரத்தை - அரக்கனால் கவரப்பட்டு, சிறைவைக்கப்பட்ட துயரத்தை ஒரு நேரடிக் காரணமாகக் கொண்டு, ஒரு மிகப் பெரிய சாதனையை உலகம் காண இருக்கிறது. அந்த அற்புதத்தை நிகழ்த்த இருப்பவன் இராமன் என்று உணர்ந்து, அந்த லட்சிய வெற்றிக்காகவே, அறம் வாழ, நல்லோர் வாழ, தான் சிறையில் துன்பம் அனுபவிக்கிறாள். எனவே 'இரக்கம்'. என்னும் பண்பு, சீதை வடிவில் வாழ்கின்றது. 'தவம்' என்னும் பெருக்கினை, தான் செய்து தவமாய், சீதையை தரிசிக்கின்றது. தான் சிறையில் இருந்து கொண்டு உலகை விடுவிக்க வந்த எம்பெருமாட்டியாய், தியாகமூர்த்தியை, வளர்ச்சிபெறும் சீதையின் வாழ்வில், எத்தனை

எத்தனை நிலைகள்! மானுடப் பெண்மையாய் இயங்கி, மனித வாழ்க்கையின் இயல்புகளோடு பின்னிப் பிணைந்து நிற்கிறாள். லட்சியப் பெண்மையாய் உணர்ந்து, மரக்கிளைகள் உச்சிக்குப் பறந்து செல்லும், பறவையைப் போல், வாழ்க்கையின் லட்சியங்களில் ஒன்றி நின்று, அவைகளை உயர்த்திக் காட்டுகின்றாள்; விண்ணில் பறக்கும் பறவையாய், விசுவ வெளியையும் அளக்க முற்பட்டு, தெய்வீகப் பெண்மையாய்ப் பொலிந்து அனைவரையும் வாழ்விக்க முற்படுகிறாள். பாரதியார் கூறுவது போல், ''பசிந்து ஓராயிரம் ஆண்டு தவம் செய்தாலும், இராமனுக்குக் கிடைத்த ஸஹதர்மிணி போல் கிடைப்பது அரிது'' இந்த கருத்தை உணர்ந்ததால் தான், சீதை என்னும் பாத்திரத்தின், தவச் சிறப்பில் லயித்து, பக்திப் பரவசமாகிவிட்டான் கம்பன். ''காசில் கொற்றத்து இராமன் கதையைப் பாடுகின்ற போது, சீதையின் ஏற்றத்தில் அவன் மனம் அதிகம் ஈடுபடுகின்றது. நாட்டில் பிறந்து, ''மனுசர்க்காக''பாடதபாடுபட்டான். இராமன் என்கிறார் நம்மாழ்வார். சீதையின் துயரை - பெண்மைக்கு வாழ்க்கையில் ஏற்படும் சிக்கலை - எண்ணும் போது, இராமன் பட்ட பாட்டை விட'' சீதை பட்ட பாடு, மிக மிக அதிகமோ என்று மனம் நடுங்கின்றது. ''ஏன் நடுக்கம்?, அந்தத் தாயின் பெருமையில் கரைந்து, நம் மனம் நிமிர வேண்டாமா?'' என்று, கம்பன் சுந்தரத் தமிழில் நம்மைக் கேட்பது போன்ற பிரமையும் ஏற்படுகின்றது.

சுந்தர காண்டச் சீதையின் சுந்தரம், என்றும் நம் உள்ளத்தில் தவம் என்னும் அழகைப் பயிராக்கும். தன் மேதாவிலாசம் முழுவதையும், இக் காண்டத்தில் கொட்டி வைத்துள்ள கம்பன் பெருமை, இராமாயணம் போல் நம் உள்ளத்தில் நிலை பெறும்; சீதையுடன் இணைந்து, இராம ஸ்மரணத்துடன்'' சுந்தர காண்டத்தைப் படிக்கத் தொடங்கும் நாம், ''சீதாராம ஸ்மரணத்துடன்'' சுந்தர காண்டத்தின், நிறைவுப் பகுதியைக் காண்போம். அனுமன் ராஜபாட்டையைக் காட்ட, ''என் பெரும் தெய்வம் '' என்று சீதையை வணங்கத் தொடங்குவோம்,

*கம்பனின் சுந்தர காண்ட சீதை, தமிழ்பண்பாட்டின் சிகரம்; பாரதப் பண்பாட்டின் பெட்டகம் ; அவள் வாழ்க்கையே ஒரு வேள்வி; வேள்வியின் ஆகுதியாய் விளங்கும் பெண்மை,பொற்சுடராய் மேலே எழும்பி வருகின்றது.*

*சீதை* கற்பினுக்கு அணி ; பொற்பின் வாழ்வு; புகழின் வேலி; தருமத்தின் துணைவி, துயரத்தின் புனிதம்; தியாகத்தின் உறைவிடம்; ''துன்பச் சகிப்பின் இருப்பிடம்; பொறுமையின் ஆபரணம்; அவளுக்கு மண் பிறந்தகம்; அவள் வானின்று வந்தவள்; வான் புகழ் படைத்தவள்; வழி காட்டும் தெய்வம் அவள், அவளுக்கு ஈடு ஏது? - இணை ஏது?

''பொன் அல்லது இல்லை பொன்னை ஒப்பது'' - கம்பன்

❋❋❋

# சம்புமாலி – பஞ்சசேனாதிபதிகள் – அக்ககுமாரன்

முனைவர் க. முருகேசன்

## முன்னுரை:-

நடையில் நின்று உயர் நாயகனாகிய இராமபிரானின் அவதாரத்தினைக் கருவாகக் கொண்டு, இம்மண்ணில் உயிர் பெற்றுள்ள உயிர்கள் அனைத்தும் வாழ்வாங்கு வாழ்வதற்கு ஏற்ற வாழ்வியல் நுட்பங்களைத் தம் கைவண்ணத்தால், பக்திச் சிறப்பிலும், கதைச் சிறப்பிலும் பாங்குற அமைத்து, பா நயத்துடன் சந்தச் சுவையையும் இணைத்துக் கம்பர் யாத்துள்ள இக்காப்பியத்தில் "சுந்தரகாண்டம்" தனிச்சிறப்புப் பெற்றதாகும். "ஆர்உத விடுவதற்கு ஒத்தார் நீயலால் அன்று செய்த பேருதவிக்கியான் செய் செயல் பிறிதில்லை புல்லுக" என்று பரம்பொருளால் தழுவிக் கொள்ளும் பேறுபெற்ற அனுமனின் ஆற்றல் வெளிப்படுவது சுந்தர காண்டத்தில்தான்.

சீதாப்பிராட்டியைத் தேடிவர அனுமன் இலங்கைக்குப் பயணமாகின்றான். "இராமாயணம் என்ற அழகான மாலையில் நடுநாயகமான இரத்தினப்பதக்கம் போல அனுமன் பிரகாசிக்கிறான்" என்னும் கூற்றிற்கேற்ப, அனுமனின் ஆற்றல் சுந்தரகாண்டத்தின் 14 படலங்களில் பளிச்சிடுகின்றது. இலங்கையைச் சென்றடைய அனுமன் கடலைத் தாவிச் சென்று, தான் பவள மலையில் நின்று இலங்கை நகரினைக் கண்டு, அந்நகரில் அசோகவனத்தில் இராவணனால் சிறை வைக்கப்பட்டிருந்த சீதாதேவியைக் கண்டு, தன் வடிவத்தைக் காட்டி இராமபிரானின் செய்தியைத் தெரிவித்து அலகிலாத் தனது பேருருவத்தைக் காட்டுகின்றான். சூளாமணியைச் சீதையிடமிருந்து பெற்றுக் கொண்டு திரும்பும் போது, தன் வருகையை இராவணனுக்கு அறிவிக்கும் நோக்கில் அசோகவனப் பொழிவினை அழிக்கின்றான். இக்கட்டத்தில் அனுமனை எதிர்த்து இராவணனின் மக்களும், படைகளும், சுற்றமும் அழிவைத் தேடிக் கொள்கின்றனர். அனுமனை எதிர்த்து நின்ற சம்புமாலியின் போர்ச்செயல்களையும், இராவணனின் பஞ்சசேனாதிபதிகள் அனுமனுடன் போரிட்ட தன்மையும், அக்ககுமாரன் தன் ஆற்றலால் அனுமனை எதிர்த்து நின்றழிந்த தன்மையும் இக்கட்டுரையில் விளக்கம் பெறுகின்றன.

## சம்புமாலியும், அனுமனும்

"வாம் பரித் தானையோடு வளைத்து, அதன் மறனை மாற்றித் தாம்பினில் பற்றித் தந்து, என் மனச்சினத் தணித்தி" என்று இராவணன் இட்ட கட்டளையைச் சிரமேற்ற சம்புமாலி, மனமகிழ்ந்து என்னைக் காட்டிலும் பெரும் சிறப்புப் பெற்றவர்கள் யார் இருக்கின்றார்கள் என்றுரைத்துப் படையோடு புறப்படுகின்றான். இராவணனின் சினமே வடிவெடுத்தாற் போன்ற சம்புமாலி நால்வகைச் சேனைகளுடன் திரண்டு பலவகை ஆயுதங்களைக் கையிலேந்தி, சித்திரப் பதாகை ஈட்டம் திசைதொறும் செறிவ சென்ற

காட்சியைக் கம்பர் தன் வாக்கினில்,

*"பல்லியந் துவைப்ப, நன்மாப் பணிலங்கள் முரலப் பொன் தேர்ச்*
*சில்லிகள் இடிப்ப, வாசி சிரித்திடச் செறிபொன் தாரும்*
*வில்லும் நின்று இசைப்ப, யானை முழக்கம் விட்டு ஆர்ப்ப, விண் தோய்*
*ஒல்லொலி வானில் தேவர் உரைதெரி ஒழிக்க மன்னோ"*
*(சம்புமாலி வதைப்படலம், பா. 822)*

என்றுரைக்கின்றார். சேனைகளின் பேரொலியின் மிகுதியை உயர்வு நவிற்சியாகவும், சேனைகள் எழுப்பிய புகையால், புழுதியால் இலங்கை நகரம் சுவர்க்கலோகம் போலப் பொன்மயமாய் மின்னியதாகவும் சுட்டும் கம்பர், சக்கரங்களை உடைய அழகிய பெரிய பத்தாயிரம் தேர்களும், அவற்றோடு பொருந்திய யானைகள் இருபதாயிரமும், தாவிச் செல்லும் குதிரைகள் நாற்பதினாயிரமும், உடன்சென்ற காலாட்படை எண்பதினாயிரமும் திரண்டு சென்றதாகக் காட்சிப்படுத்துகின்றார். "பொருப்பிடை நெருப்பின் பொங்கி, தன்னெடுங் கண்கள் காந்தத் தாழ் பெருங் கவச மார்பின் மின்னிட, வெயிலும் வீச வில்லிடும் எயிற்றுவீரன்" எனப் போற்றப்படும் சம்புமாலியின் படைகளை எதிர்நோக்கி கொண்டு வனத்தின் வெளிவாயிலில் அனுமன் நிற்கின்றான்.

இந்திர தனுவில் தோன்றும் தோரணம் என நிற்கும் வாயிலில் சூரியனை ஒப்பவனான அனுமன் நின்றுகொண்டு, அரக்கர்கள் அஞ்சுமாறு ஆரவாரம் செய்து, தோள்கொட்டுகின்றான். வழிநெடுகப் பிணமலைகள் சிதறிக் கிடப்பதாலும், குருதி வெள்ளமெனப் பாய்ந்து செல்வதாலும் அனுமன் உள்ள இடத்திற்குச் செல்ல முடியாமல் அரக்கப் படைகள் திகைத்தன. இத்தகு தன்மை கொண்ட படையை எதிர்க்க அனுமன் தன்னைத் தயார்படுத்திக் கொள்கின்றான்.

*"ஐயனும் அமைந்து நின்றான், ஆழியான் அளவின்நாமம்*
*நெய்சுடர் விளக்கில் தோன்றும் நெற்றியே நெற்றியாக,*
*மொய் மயிர்ச் சேனைபொங்க முரண் அயில் உகிர்வாள் மொய்த்த*
*கைகளே கைகளாகக் கடைக்கூழை திருவால் ஆக"*

என்ற பாடலில், திருமாலினது அடிமையைக் குறிப்பிடுகின்ற பெருமை மிக்க திருமண் காப்பு, விளக்கில் நெய் நிறையப் பெற்று, அதனிடையே தோன்றுகின்ற நெருப்புச் சுவாலை போன்று விளங்குகின்ற தனது நெற்றியை முன்னணிச் சேனையாகவும் : கூரிய நகங்களே வாளாயுதங்களாகவும்: தனது கைகளே பக்கச் சேனைகளாகவும் : தனது வால் பின்னணிச் சேனையாகவும் பொருந்தி நிற்கத் தன்னையே ஒரு போர்ப் படையாக அணிவகுத்துக் கொண்டு நிற்பதாகக் காட்டுகின்றார் கம்பர். இப்பாடலின்வழி அனுமனின் போர்த்திறமும், வலிமையும் புலப்படுத்தப்படுகின்றது.

### *சம்புமாலியின் படைகளும் அனுமனும் பொருதுதல்*

அரக்கர் கூட்டம் அனுமனின் மேல் பல்வகைப் படைக் கலன்களை வீசுகின்றன; மாயப்பயிர்கள் ஆர்ப்பு எடுப்பவும், நெருப்பு வெகுண்டு எழுவது போல் எழுந்தும் போர் நிகழ்ந்தது. அனுமன் தன் பகைவர் வீசும் படைக்கலன்களையெல்லாம் தன் இடக்கையால் அழித்து, தன் வலக்கையால் யானை, தேர், குதிரை முதலிய படைகளை அழித்தான். கன்று குணிலாக் கணியுகுத்த மாயவனாகிய கண்ணனைப் போல அனுமன் செயல்பட்டு அரக்கர் படைகளைத் துவம்சம் செய்ததாகக் கம்பர் காட்டுகின்றார். அரக்க சேனைகள் முழுமையும் அழிவதைக் கண்டு சினத்தில் வெந்த சம்புமாலி, சிங்கத்தினால் தன்னுடைய யானைக் கூட்டங்கள் எல்லாம் கொல்லப்பட்டு, தனித்து நின்ற யானையின் அரசனைப் போல நிற்கின்றான்.

*"ஏதி ஒன்றால்; தேரும் அஃதால்; எளியோர் உயிர்கோடல்*
*நீதி அன்றால்; உடன் வந்தோரைக் காக்கும் நிலையில்லாய்!*
*சாதி அன்றேல் பிறிது என் செய்தி? அவர் பின் தனி நின்றாய்*
*போதி என்றான் பூத்தமரம்போல் புண்ணால் பொலிகின்றான்"*

போர் அறம் உரைத்து வலிமை குறைந்த உன்னைப் போன்றவரின் உயிரை வாங்குதல் நீதியன்று என்று சொல்லிய அனுமனை நோக்கி சம்புமாலி அம்புகளை எய்தான். அந்த அம்புகளைத் தன் கையில் உள்ள எழு என்னும் ஆயுதத்தால் தடுத்தான். உடனே வெகுண்ட சம்புமாலி அனுமனின் கையிலிருந்த ஆயுதத்தினைக் கீழே வீழ்த்தினான். தன் எழு அறுபட்டவுடன் அனுமன், சம்புமாலியின் தேரினுள் குதித்து அவன் வில்லைப் பிடுங்கி, அவன் கழுத்தில் மாட்டி, அவன் சிரத்தை அறுத்துத் தள்ளினான். பல்வேறு படைகளையும் தன் காலால் மிதித்து அழித்தான். மீண்டும் நெடிய தோரண வாயிலின் மேல் ஏறி அமர்ந்து கொண்டான் அனுமன்.

"உதித்துப் புலர்ந்த தோல் உருவத்து அமரர்" என்று கம்பர் உரைக்கும் அரக்கர்கள் உள்ளத்தால் உறுதியற்றவர்களாகி உயிர்பிழைப்பதற்காக ஓடினார்கள். அரக்கர்கள் பலரும் அழிந்து இராவணன் தன் வலிமையை குறைத்ததனால், அரக்கர்கள் அழிவது உறுதி என்றெண்ணி, அறம் வெல்லும் என தருமதேவதை மகிழ்ச்சி அடைகின்றாள்.

### *பஞ்சசேனாதிபதிகளும் இராவணனும்:*

விருபாட்சன், பூபாட்சன், தூர்த்தனன், ப்ரகசன், பாசகர்ணன் என்ற ஐந்து படைத் தலைவர்களும் இராவணனை வணங்கி நின்று நாங்கள் ஐவரும் சென்று போரிட்டு அந்தக்

குரங்கினை உயிரோடு இழுத்து வருகிறோம் என்று வேண்ட இராவணனும் இசைவு தந்தான். "அலகில் தேர் பரி யானையோடு அடைந்த போர் அரக்கர் தொலைவிலாதன கதும் என வருக" எனக் கட்டளையிட்டனர். வள்ளுவர் இச்செய்தியை பறையறைந்து தெரிவிக்க., நால்வகைப் படைச்சேனைகளும் திரண்டன.

யானைகளின் மதநீர்ப்பெருக்கு இடத்தையெல்லாம் ஆறாக்கின. அந்த மத நீரினால் தோன்றிய ஆற்றினை, தேர்களின் சக்கரங்கள் சேறாக்கின; அந்தச் சேற்றை குதிகைளின் குளம்புகள் புழுதியாக்கின; அந்தப் புழுதிகளை அந்தக் குதிரைகளின் கடிவாளம் பூண்ட வாயிலிருந்து வழியும் பெருநுரைகள் மீண்டும் சேறாக்கின. இப்படைகளும் இசைக்கருவிகளும் எழுப்புகின்ற ஓசை பிரளயகாலத்தில் கடல்பொங்கி உலகை அழிக்கும் சமயத்தில் எழும் பேரொலியை விட மூன்று மடங்கு விரைந்து எழுந்ததாகக் கூறுகின்றார், கம்பநாடன்.

*"ஆழித் தேர் தொகை ஐம்பதினாயிரம்; அஃதே*
*சூழிப் பூட்கைக்குத் தொகை; அவற்று இரட்டியின் தொகைய*
*ஊழிக் காற்று அன்ன புரவி; மற்று அவற்றினுக்கு இரட்டி*
*பாழித் தோள் நெடும் படைக்கலப் பதாதியின் பகுதி"*

என்ற பாடலில் படைகளின் அளவினைக் காட்டுகின்றார். தேர், யானை, குதிரை, காலாள் ஆகிய நால்வகைச் சேனைகள் 1 : 1:2:4 என்ற விகிதத்தில் அமைந்திருந்ததாகச் சுட்டப்பட்டுள்ள தன்மை குறிப்பிடற்பாலது. இப்படைகளின் திரள் நிலையை,

"கை பரந்து எழு சேனைஅம் கடலிடைக் கலந்தார்
செய்கை தாம் வரும் தேரிடைக் கதிர் எனச் செல்வார் "

என்கிறார் கம்பர்.

## *பஞ்சசேனாதிபதிகளின் தோற்றமும் வீரமும்*

இராவணனுடைய வன்மை வாய்ந்த வச்சிராயுதம், வருணனுடைய வலிய பாசக்கயிறு, இயமனது நெருப்பு முனை உடைய தண்டாயுதம், சிவனின் வன்மை மிக்க சூலாயுதம் போன்ற எந்தக் கருவிகளைக் கொண்டும் ஊசிகுத்துமளவும் கூட வடுவினைத் தோற்றுவிக்க முடியாத தோள்களை உடையவர்களாக பஞ்சசேனாபதிகள் விளங்கினர். நவநிதி நாயகனாகிய குபேரனை வலிவிழக்கச் செய்ததும்; இந்திரனின் ஐராவதமெனும் யானையின் வலிமையைக் குறைத்தும்; மலைபோன்ற மார்பினையும், கடல் அலை போன்ற தோளினையும் கொண்ட இவர்கள் எமனது கொலைச் செயலை இகழும்படியும், ஊழிக்காற்று, ஊழித்தீ, ஊழிப்பெரு வெள்ளம் ஆகியவற்றை ஒடுக்கும்படியாகவும்

வல்லன்மை பெற்ற சேனாதிபதிகள் அனுமனுக்கு முன்னால் அணிவகுத்து நின்ற காட்சியைக் காட்டும் கம்பர், இவர்களால் அனுமனுக்கு ஏதேனும் துன்பம் ஏற்படுமோ என்றஞ்சியதாகக் காட்டுகின்றார்.

அனுமனின் சிறிய தோற்றத்தைக் கண்டு, இச்சிறிய குரங்கா அரக்கர்களை அழித்தது என ஐயம் கொண்டு நின்ற படைகளுக்கு முன்பாக அனுமன் தன் பேருரு வடிவினைக் காட்டுகின்றான்.

"ஆயிடை அனுமனும் அமரர்கோன்நகர்
வாயில்நின்று அவ்வழிக் கொணர்ந்து வைத்த மாச்
சேயொளி தோரணத்து உம்பர், சேண் நெடு
மீ உயர் விசும்பையும் கடக்க வீங்கினான்"

என்றவாறு பேருருவுக் கொண்ட அனுமனின் மீது படைக்கலங்களை எய்தவும், அக்கலன்கள் அனுமனை ஒன்றும் செய்யாதிருக்கவும் கண்ட அரக்கர்கள் வெகுண்டனர். அனுமன் அங்கிருந்த இரும்புத் தூணை ஆயுதமாகக் கைக்கொண்டான். யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் அழித்தான். ஒப்பற்ற வீரனாகிய அனுமன் தன் பெரிய கைகளால் வீசியெறியப் பட்டனவும், அதனால் கடலில் சென்று வீழ்ந்தனவும் ஆகிய கிண்கிணி மாலையோடும், சக்க்ரத்தோடும் உள்ள குதிரைகள் பூட்டப்பட்ட தேர்கள் கடலில் தோன்றுகிற ஆயிரங்கிரணங்களை உடைய சூரிய பகவானின் தேரினைப் போன்று திகழ்ந்ததாக உவமை காட்டுகின்றார் கம்பநாடன். மேலும், 'வாசியின் மூரி வெங்கடல்புகக் கடிது முந்தின ஊரின் வெங் குருதியாறு இரைப்ப ஓடின' என்று குருதிப் பெருக்கினைச் சுட்டுகின்றார்.

அனுமனால் வீழ்த்தப்பட்ட அரக்கர்படை பிணங்கள் குவித்து வைக்கப் பட்டிருந்ததால், தோரண வாயிலை அவை மறைத்தன. தமது படைகள் அனைத்தும் அழிந்ததைக் கண்ட பஞ்சசேனாதிபதிகள் தாமே போரிடத் தயாராகின்றனர். அனுமனை நோக்கி எய்த அம்புகளின் பெருக்கினை,

"ஈர்த்து எழு செம்புனல் எக்கர் இழுக்கத்
தேர்த் துணை ஆழி அழுந்தினர் சென்றார்
ஆர்த்தனர் ஆயிரம் ஆயிரம் அம்பால்
தூர்த்தனர் அஞ்சனை தோன்றலும் நின்றான்"

என்று வருணிக்கின்றார் கம்பநாடன்.

நெடுந்தேர் பொய்து அகடு ஒன்று பொருந்திச் செய்த கடும் பொறியைச் சிதைத்ததுடன், தூர்த்தரன் என்னும் அரக்கன் வானில் பறந்து வருவதைக் கண்ட அனுமன் வானில் இருந்தபடியே அவனை அழித்தான். தூர்த்தரன் இறந்ததைக் கண்ட நால்வரும்

உக்கிரங் கொண்டு, சீறி, கொடிய விற்களை வளைத்து அம்புகளைச் சரமாரியாகப் பொழிந்தனர். அப்பொழிவினால் அனுமனின் தோளில் தைத்த அம்பு குருதியை வெளிக் கொணர்ந்தது. உடனே அனுமன், அடுத்த சேனாதிபதியாகிய விருபாட்சனை தேரோடு தூக்கி எறிந்தான். தேரிலிருந்து கீழே விழுந்த அவன்மேல் அனுமன் பாய்ந்து, மேனி சிதைந்து இரத்த குழம்பாகும்படி மிதித்துக் கொன்றான்.

எஞ்சிய மூன்று அரக்கர்களில் இருவரின் தேரினை இரண்டு கைகளில் எடுத்த அனுமன், வானத்தில் பறந்து கொண்டே மற்போர் புரிந்து, சூரியனைப் போன்று சுட்டெரித்தான். இறுதியாக எஞ்சி நின்ற பாசகர்ணனைக் கொன்ற செயலை,

*"நின்றனன் ஏனையன்; நின்றது கண்டான்*
*குன்றிடை வாவுறு கோளரி போல*
*மின் திரி வன் தலை மீது குதித்தான்*
*பொன்றி அவன் புவி தேரொடு புக்கான்"*

என்கின்றார் கம்பர். "அனுமனுக்கு குன்றிடை வாவுறு கோளரி" என்று அனுமனை உவமைப்படுத்துகின்றார். நெய் பூசிய வேலை ஏந்திய அரக்கர்களில், எவரும் உயிர் தப்பவில்லை. அணி வகுப்பில் போர் முழுக்கம் செய்து நின்ற படைத்தளபதிகளும், காலனும் கண்டு அஞ்சும் வலிமை பெற்ற சேனாதிபதிகளும் மாண்டொழிந்தனர். இச்செய்தியை அசோக வனத்துக் காவலர்கள் இராவணனுக்குத் தெரிவிக்கின்றனர்.

## அனுமனும் அக்ககுமாரனும் : ஒப்பீடு

அனுமனைப் பிடித்து வருவதற்காக இதுவரை சென்ற சம்புமாலியும், படைசேனாதிபதிகளும் இறந்தொழிய அனுமனோடு போரிட இராவணன் எழ, அவனைத் தடுத்து அவன் மகனாகிய அக்ககுமாரன் பேசுகின்றான். 'சிவபெருமானே குரங்கின் வடிவத்தை மேற்கொண்டு வந்தாலும் நான் நொடியில் பற்றித் தங்களிடம் ஒப்படைப்பேன்'என வீரம் உரைத்தான். திருமாலின் நரசிம்மமே ஆக இருந்தாலும் வராக அவதாரமாக இருந்தாலும் என்னை எதிர்த்து அவைகளால் வெல்ல முடியாது. எனவே இக்குரங்கு எங்கு சென்றாலும் அதனைப் பற்றி நின் காலடியில் வைப்பேன் என்று உறுதிமொழி கூறுகின்றான். இதனை ஏற்றுக்கொண்டு இராவணன் போருக்கு அனுமதி கொடுத்தான்.

*"பொருகடல் மகரம் எண்ணில், எண்ணலாம் பூட்கை பொங்கித்*
*திரிவன மீன்கள் எண்ணில், எண்ணலாம் செம் பொன் திண்தேர்*
*உருஉறு மணலை எண்ணில், எண்ணலாம் உரவுத் தானை*
*வரு திரை மரபின் எண்ணில், எண்ணலாம் வாவும் வாசி"*

என்று அக்ககுமாரனின் நால்வகைச் சேனையின் மிகுதியை உயர்வு நவிற்சியாகக் காட்டுகின்றார் கம்பநாடன்.

பன்னிராயிரம் அரக்க இளைஞர்களும் தேர்கள் மீது ஏறி அக்ககுமாரனைச் சூழ்ந்து கொண்டும், நான்கு இலட்சம் வீரர்கள் இயந்திரந்தாங்கிய தேர் ஏறிச் சூழ்ந்து கொண்டும் படை நகர்கின்றது. அப்படைகளில் போர்க்களத்தில் அனுமனால் வீழ்த்தப்படுகின்ற அரக்கர்களின் உயிரைக் கவர்ந்து செல்வதற்கு இயமனும், பிணங்களைத் தின்பதற்கு காகங்களும் தொடர்ந்து சென்றன.

## அக்ககுமாரன் தீ நிமித்தங்கள் காணுதல்

அன்று தொட்டு இன்று வரை மானுட வாழ்வில் நிமித்தங்கள் நம்பப்பட்டு வருகின்றன. அரக்க மகளிரின் அழுகுரல் ஒலியும், சேனைகள் எழுப்பும் பேரொலியும், மேகம் எழுப்பும் இடியொலியும் வருணிக்கப்படுகின்றது. நடக்கப்போகின்ற துன்பத்திற்கும் அழிவிற்கும் முன்னறிவிப்புப் போன்று தீ நிமித்தமாகிய அழுகுரல் அக்ககுமாரனுக்குக் கேட்கின்றது. மேலும் ஓடிக்கொண்டிருக்கும் குதிரைகள் சோர்ந்து வழிதலும்; கண்கள் மாறித் துடித்தலும்; மேகம் இரத்தத் துளியைச் சிந்துதலும்; மேகமில்லாத வானத்தில் இடியுண்டாதலும் ஆகிய பல்வகை நிமித்தங்கள் அக்ககுமாரனுக்குத் தோன்றுகின்றன.

போருக்கு அக்ககுமாரன் படையோடு வருவதைக் கண்ட அனுமன், வந்தவனை இன்னான் எனத் தெரியாது ஐயுறுகின்றான். அனுமனின் சிறிய தோற்றத்தைக் கண்டு அலட்சியமாக உரைத்த அக்ககுமாரனுக்கு தேர்ச்சாரதி எச்சரிக்கின்றான். அனுமனுக்கு முன்னால் நிற்கும் அக்ககுமாரன் இந்தக் குரங்கை மட்டுமல்ல; குரங்கினத்தையே அடியோடு அழிப்பேன் என்று சூளுரைக்கின்றான். தனியொருவனாக இருந்த அனுமன், வெள்ளமெனப் பெருகி வந்த அரக்கர் சேனையோடு போரிட்டான். அரக்கர்கள் அனுமனின் மேல் எறிந்த ஆயுதங்கள் எவ்விதத் தீங்கும் செய்யவில்லை. ஆனால் அவன் எதிர்த்துப் போரிட்டதால் யானைகளும், குதிரைகளும், தேர்களும் வரம்பில்லாமல் அழிந்து போயின. "ஆயிரம் கோடி தூதர் உளர்கொலோ நமனுக்கு" என வியக்கும் அளவு உயிர்கள் இறந்து ஒழிந்ததாகக் குறிப்பிடுகின்றார் கம்பர்.

"வரவுற்றார் வாரா நின்றார்
வந்தனர், வரம்பில் வெம்போர்
பொரவுற்ற பொழுதும், வீரன்
மும்மடங்கு ஆற்றல் பொங்கி"

என்று அரக்கர் கூட்டம் மாண்டு போன காட்சியைக் காட்டுகின்றார் கம்பர். இலங்கையில் உள்ள உயிர்கள் அனைத்தையும் இயமன் கொள்ளை அடித்துவிட்டான் என்று கண்டவர் உரைக்கும் வகையில் அனுமன் அனைத்துப் படைகளையும் அழித்தான்.

*உவமைச் சிறப்பு*

அனுமன் போர்க்களத்தில் அரக்கர் கூட்டத்தை நன்றாகக் கலக்கம் அடையச் செய்ததைப் பற்றி, அரக்க வீரர்களுக்குத் தயிரையும், அனுமனுக்கு மத்தினையும் உவமையாக்குவதுடன், அரக்கர் கூட்டத்திற்கு பிரளய கால வெள்ளத்தையும், அனுமனுக்கு அந்தப் பிரளய கால வெள்ளத்தை உறிஞ்சி எடுக்கின்ற ஆற்றல்மிக்க வட வாமுகாக்கினியையும் உவமையாகக் காட்டுகின்றார். மேலும் அனுமனை எதிர்க்க அக்ககுமாரன் ஏறிய தேருக்குச் சூரியனின் ஏற்றச் சக்கரத் தேர் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

அக்ககுமாரன் செலுத்திய அம்புகளை, தான் ஏந்திய இரும்புத் தண்டினாலும், தன் கைகளாலும் அடித்து நொறுக்கிய அனுமன் அக்ககுமாரனின் தோளின் மீது பாய்ந்து சென்று, அவன் கையிலிருந்த வில்லைப் பற்றிக் கொண்டான்.

*“நீத்தாய ஓடின உதிரப் பெருநதி நீராக ச்சிலை பாராக*
*போய்த் தாழ் செறிதசை அரி சிந்தினபடி பொங்கப் பொருமுயிர் போகாமுன்*
*மீத்தாம் நிமிர்சுடர் வயிரக் கைகொடு பிடியா விண்ணொடு மண்காணத்*
*தேய்த்தான் ஊழியன் உலகேழ் தேயினும் ஒருத்தன் புகழ்இறை தேயாதான்”*

என்ற பாடலில், ஏழு உலகங்களும் அழிகின்ற ஊழிக் காலத்திலும், அழியாத புகழையுடைய அனுமன் இரத்த வெள்ளமே அரைக்கப் பயன்படுகின்ற நீராகவும், போர்க்களமே அம்மிக் கல்லாகவும், அக்ககுமாரனின் மாமிசப் பிண்டமே அரைக்க வேண்டிய அரிசியாகவும், அவனுடைய தசை நீக்கிய உடல் பகுதி எலும்புகளே குழவிக் கல்லாகவும் கொண்டு தன் கைகளால் அரைத்துத் தேய்த்து ஒழித்தான் என்னும் செய்தி கிடைக்கின்றது. “உலகேழ் தேயினும் ஒரு தன் புகழிறை தேயாதான் ” என்று அனுமனை கம்பர் சிறப்பிக்கின்றார்.

அக்ககுமாரன் அழிக்கப்பட்ட காட்சியைக் கண்ட அரக்கர்கள் கண்ணுக்கு எட்டாத தூரம் வரை ஓடினார்கள். அரக்கி மகளிர் எழுப்பிய அழுகையொலியானது இவ்வுலகம் மட்டும் அல்லாது விண்ணுலகத்தையும் எட்டியது. அரக்கியர்களின் துன்பம் இவ்வாறிருக்க, பருவ தேவர்கள் இராவணனிடம் நடந்த செய்தியைச் சென்று தெரிவித்தனர்.

தனது இளைய மகன் அக்ககுமாரன் மரணம் கேட்டு மயம் மகளும், இராவணனது பட்டத்தரசியுமான மண்டோதரி கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்து ஓட, விரித்த கூந்தலோடும் இராவணன் முன் “மயன் மகள் அலைத்து அலறி மாழ்கினாள்” எனக் கம்பன் குறிப்பிடுவான். சகோதரனான இந்திரஜித்தோ “எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழன்றோ தேய்ந்தது” என்று வருந்தினான்.

## தொகுப்புரை

வீரத்திற்கும், விவேகத்திற்கும், அன்பிற்கும், நட்பிற்கும், செய்நன்றி தெரிவித்தலுக்கும் இருப்பிடமாகக் கம்பர் படைத்துள்ள பாத்திரம் அனுமன். அவனுடைய போர்த்திறமும், வலிமையும் பெரிதும் வெளிப்படுத்தப் பட்டுள்ளது சுந்தரகாண்டத்தில்தான். இக்காண்டம் அனுமனுக்காகவே இயற்றப்பட்டது போல, இந்தக் காண்டத்தின் தலைவனாகவே அனுமன் வலம் வருகின்றான். எடுத்த காரியம் முடித்தலில் இமைப்பொழுதும் சோராத குணம் கொண்ட அனுமன், இராவணனின் படைத் தளபதிகளாகிய அனைவரையும் அழித்து, இராமபிரானின் ஆற்றலை ஒருவகையில் இராவணனுக்குத் தெரிவிக்கின்றான். இராமனின் தூதுவனாக வந்த அனுமனின் வீரமே இலங்கையில் ஒரு பகுதியை அழித்தது என்றால் இராமனின் வீரத்திற்கு முன்பாக இவ்விலங்கை நகரம் என்னவாகும் என்ற எண்ணத்தை மறைமுகமாக இராவணனுக்கு ஏற்படுத்த வேண்டும் என்பதே கம்பனின் நோக்கம். ஆனால் சீதையின் தோற்றத்தில் மயங்கிப்போய் கிடந்த அவனுக்கு மதிநுட்பம் வேலைசெய்யவில்லை ஆதலால் அனைத்தையும் இழந்தான்.

❋❋❋

## இராமனும் – சுக்ரீவனும்

– நா. நஞ்சுண்டன்

சுந்தரகாண்டத்தில் பெரும்பாத்திரங்களாக வருபவர்கள் அனுமன், சீதை, இராவணன் ஆகிய மூன்றுபேர்கள்தான். இதனையே சிறையிருந்தாள் ஏற்றம் கூறும் சுந்தரகாண்டம் எனச் சிறப்பித்தனர் வைணவ ஆச்சாரியர்கள். சொல்லின் செல்வனான அனுமனின் செயல்களால், தொண்டால் இக்காண்டம் சிறப்புடைத்து என்பது பௌராணிகர்களின் கூற்று. கற்பின் கனலியை இதயமாம் சிறையில் வைத்து, தனக்குத்தானே அழிவைத் தேடிக்கொண்டான் என்பது இராவணன் இலக்கியவாதிகளின் விரிவுரைகள்.

இக்காண்டத்தில் பிற பாத்திரங்களின் மூலமாக இராமனைப் பற்றிச் சிந்திக்க வைக்கின்றார் கம்பர். காண்டத்தின் இறுதிப்பகுதியில் சீதையைக் கண்ட செய்திகளை அனுமன் சொல்ல, சீதையின் சூடாமணியை வாங்கிய இராமனின் நிலை இவைகள்தான் நேரடியாகச் சில பாடல்களில் இராமனைப் பற்றிப் பேச வைக்கப்படுகின்றது.

வானரவேந்தனான சுக்கிரீவனைப் பற்றிய செய்திகளும் மிகக் குறைவே. சீதையைத் தேடிச் சென்றவர்கள் இன்னும் வரவில்லையே என்று இராமன் ஏங்கி வருத்தப்படும்பொழுது, சுக்கிரீவன் தலைவனுக்கு ஆறுதல் சொல்வது மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அசோகவனத்தில் சிறை வைக்கப்பட்டிருக்கும் சீதை இராமனைக் குறித்த பழைய நினைவுகளை எண்ணிப் பார்க்கும் சில வரிகளைப் பார்க்கலாம்.

“மும்மடங்கு பொலிந்த முகத்தினன்
வெம்மடங்கலை உன்னி வெதும்புவாள்”

“சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்”

“வாங்கு கோல வடவரை வார்சிலை
ஏங்கு மாத்திரத்து இற்று இரண்டாய்விழ
வீங்கு தோளை நினைத்து மெலிந்துளாள்”

“... ... ... எம்பி நின் தம்பி நீ
தோழன், மங்கை கொழுந்தி எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்”

மேலும் அந்தணன் ஒருவனுக்கு அவன் பலங்கொண்ட மட்டும் தண்டு எறிந்த தொலைவிற்குப் பசுக்கூட்டம் கொடுத்த செய்கையையும், பரசுராமன் வில் வென்ற

செய்தியையும், இந்திரன் மகன் ஜயந்தன் காக்கையின் உருக்கொண்டு, தகாத செயல் செய்த பொழுது, ஒரு தருப்பத்தினால் அதன் கண் ஒன்றினைப் பறித்ததையும் நினைவு கூர்கிறாள் சீதை.

இப்படியாக இராமனுடைய பெருமை, வீரம், கருணை, அருளுதல் ஆகிய நற்குணங்கள் சீதை என்ற பாத்திரத்தின் மூலம் இக்காண்டத்தில் காட்டப்படுகின்றது.

அடுத்தது இராவணன் சீதையிடம் இறைஞ்சி நின்று, தன் காதலை வெளிப்படுத்தி, "முடியின் மீது முகிழ்த்து உயர்கையினன் படியின்மேல் விழுந்தான் பழி பார்க்கலான்" எனக் கம்பர் அவனை வர்ணனை செய்கிறார்.

இங்கேதான் இராமனுடைய வில்லாற்றலை, வீரத்தை, சொல்ல வந்த சீதை, "வெள்ளி பொருப்பை நீ எடுக்க முயன்றபொழுது சிவனின் சேவடிக்கொழுந்தின் ஊற்றத்திற்கு ஆற்றாது வருந்தினாய். அத்தகைய சிவனுடைய வில் எனது கணவனது ஆற்றலுக்கு தாங்காது இற்று விழுந்த ஓசையை நீ கேட்கவில்லையா? எனவும், படைப்புக் கடவுளான நான்முகனாகவும், காத்தற்கடவுளான திருமாலாகவும், அழித்தல் கடவுளான சிவனாகவும் நின்று விளங்குபவன் முழுமுதற்கடவுளான பரம்பொருளேதான், இராமன் என்ற வடிவில் கால்தரைதோய நின்று கட்புலன்களுக்கு எளியவனாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றான் என்பதையும் நீ அறிந்துகொள்" என்று சிறையிருக்கும் தேவியான சீதை இராவணனுக்குச் சொல்லுவதன் மூலம் இராமன் பெருமையினை இங்கு காணமுடிகின்றது.

பின்னர் அனுமன் சீதையைச் சந்தித்துத் தான் யார் என்பதைச் சொல்ல நின்றபொழுது, "அருவிநீர் ஒழுகு கண்ணாள் ஐய! சொல் ஐயன்மேனி எப்படிக்கு அறுதி" எனச் சீதை கேட்கிறாள். "படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்து அன்று படிவம்" எனச் சொல்லி 'அடிமுதல் முடியும் காறும் அறிவுற' அனுமன் இராமனைப் பாதாதிகேசம் வர்ணிக்கின்றான். இருபத்தியொரு பாடல்களில் இந்த வர்ணனையைக் கம்பன் மிகவும் அற்புதமாக "நீண்டு, குழன்று, நெய்த்து, இருண்டு, நெறிந்து, செறிந்து, நெடுநீலம் பூண்டு, புரிந்து, சரிந்து, கடை சுருண்டு, வெறியே கமழும் நறுங்குஞ்சி"யோடு கூடிய இராமனைப் பற்றி அனுமனால் வர்ணிக்கப்படும் பாடல்கள் கம்பனின் கவித்துவத்திற்கு எடுத்துக்காட்டு.

இறுதியாக சீதை, " வீரன் யாண்டையான், இளவலோடும் எவ்வழி எய்திற்று உன்னை" என வினவுகிறாள். இராமன் சுக்ரீவனைச் சந்தித்ததும், வாலியைக் கொன்றதும், சீதையைத் தேடுவதற்காக வானர சைன்யத்தை நாற்திசைகளில் ஏவியதையும், தென்திசையில் நின்னைக் காணுதற்காக வானர இளவரசன் அங்கதன் தலைமையில் என்னை ஏவினான் என்றும் அனுமன் சொல்லும் செய்திகள் வாயிலாக இராமன் பற்றிய நினைவுகள் பேசப்பட்டது.

காண்டத்தின் இறுதியிலேதான் அனுமன், இராமனோடு பேசும் காட்சியும், சுக்ரீவன் இராமனைத் தேற்றும் காட்சியும் இடம்பெறுகின்றன. இங்கேதான் சுக்ரீவன் இராமன் தோன்றுகிறார்கள். இராமன் துயரக்கடலிலே வீற்றிருந்தான். சீதையைத் தேடிச் சென்ற வானர வீரர்கள், தென்திசை சென்றவர்களைத் தவிர, ஏனையோர் தாங்கள் எங்கு தேடியும் சீதை கிடைக்கவில்லை என்ற செய்தியை உரைத்தபொழுது இராமனது மனம் உளைந்து ஊசலாடத் தொடங்கியது. பிராட்டியின் பிரிவாற்றாமையால் உடலை விட்டு உயிர் நீங்கினான் போன்று மூர்ச்சிக்கத் தொடங்குகின்றான். அவ்வப்பொழுது எல்லாம் கார்வரை இருந்த கதிரின் காதலானான சுக்ரீவன் சிறந்த மொழிகளைக் கூறி அவனைத் தேற்றினான். இந்நிலையில் சுக்ரீவனைப் பார்த்து இராமன் பேசுகின்றான்.

*"சீரியது அன்றுநம் செய்கை ; தீர்வு ஆரும்*
*மூரிவெம் பழியொடு முடிந்த தாம்"*

என்று. இதுவரை நாம் மேற்கொண்ட முயற்சிகள் எல்லாம் பயன்பட்டதாகத் தெரியவில்லை. தீராத பழிச்சொல்லோடு முடிந்ததாக அமைந்துவிட்டது என்கின்றான். இங்கு தன்னுடைய மனைவியைத் தீயோனாகிய இராவணன் கவர்ந்து சென்ற நிலையில் அவளை மீட்டும் ஆற்றல் அற்றவனாக இராமன் இருக்கின்றானே என்ற பழிச்சொல் உலகத்தாரால் கூறும்படி அமைந்துவிட்டதே என்ற பொருள்படும்படி, "மூரிவெம் பழியொடு முடிந்ததாம்" எனக் கம்பன் உணர்த்திக் காட்டியிருப்பது அருமையிலும் அருமை.

மேலும் தெற்குதிசையில் தேடிச் சென்றவர்கள் குறிப்பிட்ட காலத் தவணைக்குள் இதுகாறும் திரும்பவில்லையே என நினைக்கும்பொழுது அவர்களுக்கு நேர்ந்த கதி என்ன இறந்துவிட்டிருப்பார்களோ என ஐயமுறுகிறான் இராமன். இதனைக் கம்பன்,

"வெறிக் கருங்குழலியை நாடல் மேயினார்
மறித்து இவண் வந்திலர் மாண்டுளார் கொலோ
பிறித்து அவர்க்கு உற்றது என்னை பெற்றியோய்"

என்று குறிப்பிடுவான்.

இராமனது சிந்தனை, வருத்தம் மேலும் பலவிதமான சந்தேகங்களுக்கு இடமளிப்பதாக இங்கே கம்பன் அமைத்து நமக்கு இராமனின் ஏக்கத்தைப் புலப்பட வைக்கின்றான். ஒரு வேளை சீதை மாண்டு விட்டாளோ, அப்படியாயின் இச்செய்தியை எவ்வாறு இராமனிடம் போய் சொல்லுவது என்று எண்ணி, அதைவிட நாம் உயிர்துறத்தலே நன்று என மாண்டுபோனார்களோ, இல்லை இன்னும் பல இடங்களிலும் தேடிக் கொண்டிருக்கின்றார்களோ என எண்ணுவதாகப் பாடல் அமைவதைக் காணமுடிகின்றது.

"மாண்டனள் அவள்; இவள் மாண்ட வார்த்தையை
மீண்டு அவர்க்கு உரைத்தலின் விளிதல் நன்று எனா
பூண்டது ஓர் துயர் கொடு பொன்றினார் கொலோ
தேண்டினர்; இன்னமும் திரிகின்றார் கொலோ"

என்னும் இப்பாடலின் மூலம் இராமனது துயரத்தின் எல்லையைக் காட்டுகின்றான் கம்பன்.

இலங்கையில், சீதையை எடுத்துச் சென்ற இராவணனைக் கண்டவுடன் கோபம் மிகுதியால் அவனுடன் போர் புரிந்து, அரக்கர்களின் வஞ்சகச் செயல்களால் மாண்டு, வீர சுவர்க்கம் அடைந்தார்களோ அல்லது எக்காலத்தும் விடுபடல் இல்லாத கொடிய சிறையில் தள்ளப்பட்டார்களோ என்று இராமன் எண்ணுகின்றான். மேலும் குறித்த காலத்திற்குள் வர இயலாமையினால், இராமனைக் காண அஞ்சித் தவத்தை மேற்கொண்டு விட்டனரோ "வேறு அவர்க்கு உற்றது என் விளம்புவாய்" என சுக்ரீவனைப் பார்த்துக் கேட்கின்றான் இராமன்.

இந்த நேரத்திலேதான் தென்திசையிலிருந்து சூரியன் உதிப்பது போல அனுமன் இராமன் இருக்கும் திசைநோக்கி வருகிறான். அந்த அனுமனும் வந்தவுடன் இராமனைத் தொழவில்லை. தன் கைகள் இரண்டையும் தலைமேல் வைத்து, தென்திசையிலுள்ள தையலாகிய சீதையை நோக்கி, நிலத்தில் விழுந்து நெடுசாண்கிடையாக வணங்கினான்.

"எய்தினன் அனுமனும்; எய்தி ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன்; முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன், கையினன்,
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி, வாழ்த்தினான்"

இங்கு ஒரு குறிப்பு நோக்கத்தக்கது. இராமனைக் காணவந்த அனுமன் இராமனை வணங்காமல் அவன் இருந்த பக்கம் கால் நீட்டி, சீதை சிறையிருந்த இலங்கையை நோக்கிக் கையெடுத்து வணங்கினான் என்றால், இராமன் இதனைத் தன் குறிப்பால் உணர்ந்து கொள்வான் என்றே எண்ணி அவ்வாறு செய்தான் என்பதை அறியலாம்.

இங்கே இராமனது மனவோட்டத்தை நன்கு உணரும்படியாகக் கம்பன் பாடல் அமைக்கப்பட்டுள்ளது. அனுமான் சீதையைக் கண்டதும் உண்டு. அவள்தன் கற்பும் நன்று என பிராட்டியின் நிலை இப்பாடலில் பேசப்படுவதைக் காண்போம்.

*"திண்திறல் அவன்செயல் தெரிய நோக்கினான்*
*வண்டுறை ஓதியும் வலியள்; மற்று இவன்*
*கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்று எனக்*
*கொண்டனன், குறிப்பினால் உணரும் கொள்கையான்"*

அனுமனது செய்கையாலே, மகிழ்ச்சிப் பெருக்கினால் இராமனது தோள்கள் பூரித்து நின்றன. கண்களிலிருந்து ஆனந்த நீர் பெருகியது. இதுகாறும் அவன் அனுபவித்து வந்த துன்பமும் நீங்கியது. சீதையின்பால் கொண்ட அன்பு மேலும் மேலும் வளர்வதாயிற்று.

பின்னர் அனுமன் தான் சீதையைக் கண்டதும், சீதை இராவணனுக்கு எச்சரிக்கை செய்ததையும், கற்போடு இருப்பதையும், கணையாழியை வாங்கிக் கொண்டு, அவள் அடைந்த மகிழ்ச்சியையும் விரிவாக எடுத்துச் சொன்னான். கற்பினுக்கு அணியான, தவம் செய்த தவமாம் தையலாகிய சீதையைப் பற்றி அனுமன் சொல்லக்கேட்டு, இராமன் பெருமகிழ்வு கொண்டான்.

சீதை இராமனிடம் கொடுக்கும்படி சொன்ன சூடாமணியை அவனிடம் கொடுத்தான். பெற்ற இராமனின் நிலை எவ்வாறு என்பதைக் கம்பன் அனுபவிப்பதை காண்போம்.

*"பை பையப் பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து பொங்கி*
*மெய்யுற வெதும்பி உள்ளம் மெலிவுறும் நிலையை விட்டான்*
*ஐயனுக்கு அங்கி முன்னர் அங்கையால் பற்றும் நங்கை*
*கையெனல் ஆயிற்று அன்றே கை புக்க மணியின் காட்சி"*

சூடாமணியைத் தன் கையில் இராமன் பெற்றுக்கொண்டபோது, மிதிலையில் திருமணத்தின் போது வேள்வித்தீயின் முன்னால் சீதையின் கையைப் பற்றி வலம்வந்த செய்கை அவனது உள்ளத்திலே தோன்றியதாம். அம்மகிழ்ச்சியால் சீதையைக் காணாது தவித்த மனத்துன்பம் போய்விட்டது என்று காணும்பொழுது இராமனுடைய விரகதாபமும், சூடாமணியைக் கண்டபொழுது அவ்விரகதாபம் ஒழிந்து, தோள்கள் வீங்கிப்புடைத்து, மயிர்க்கால்கள் சிலிர்த்தும், கண்கள் நீர்பொழிந்தும், வியர்வைத் துளிகளால் உடல் நனைந்தும், மணிவாய் மடிப்புண்டும், உயிர்வருவதும் போவதுமாக பெற்று உடல் பூரித்தது.

*"என்னே யார் உளர் தன்மை தேர் வார்"*

எனக் கம்பர் இதனைக் குறிப்பிடுவார்.

சூடாமணியை இராமனிடத்தில் அனுமன் கொடுத்த நிகழ்வுகளை எவ்வாறு வால்மீகி சொல்லிச் செல்கிறார் என்பதை இங்கு காணலாம்.

"சூடாமணியைக் கையில் வாங்கியதும் இராமர் கண்ணீர் விடுகிறார். பெரும் துயரம் அவரை ஆட் கொள்கிறது. பின்பு துக்கத்தின் வேகம் அடங்கிய பிறகு அனுமனைப் பார்த்துக் கூறுகிறார்.

"அவள் கூறிய வார்த்தைகளை மீண்டும், மீண்டும் என்னிடம் சொல்லு. அவையே என் உயிரை இவ்வுடலில் தரிக்கச் செய்யும். உயிரிழந்தவன் போன்ற என்னை மழைத்துளிகள் போன்ற அந்தச் சொற்களே உயிர் பிழைக்கச் செய்பவை. எங்கே அந்த வார்த்தைகளை மீண்டும் கூறு. மூர்ச்சித்துக் கிடக்கும் மனிதனின் முகத்தில் தண்ணீர் தெளிப்பது போல், அந்த வார்த்தைகள் என் காதுகளில் விழுந்து என் மூர்ச்சையைத் தெளிவிக்கும். இன்னும் ஒரு மாத தவணை இருக்கிறது. அதற்குள் நான் வந்து அவளை மீட்டு அழைத்துப் போவேன் என்றே அவள் அதுவரையிலும் உயிர் தரிக்க இருக்கிறாள்."

"அந்த ஒரு மாதம் அவள் ஜீவித்திருந்தால் போதும். அவளைவிட்டு என்னால் அதிக நாட்கள் பிரிந்து இருக்க முடியாது. அவள் இன்னும் என்ன கூறினாள். ஒன்றையும் நிறுத்த வேண்டாம். வைத்தியன் கொடுக்கும் மருந்தை நோயாளி நம்பி இருப்பதைப் போல நானும் அவள் வார்த்தைகளையே நம்பி இருக்கிறேன்."

(சுந். காண்டம். சர் 65-8,10,14,15)

மகாகனம் வி.எஸ் சீனிவாஸ சாஸ்திரியார் தம்முடைய இராமாயணப் பேருரையில் " உலக இலக்கியங்களிலே இத்தகைய அன்பையும், துக்கத்தையும் வெளியிடும் வாக்கியங்களை நான் அதிகம் படித்திருப்பதாகக் கூற முடியாது" எனக் குறிப்பிடும் பொழுது, வான்மீகியின் இராமன் எப்படிப்பட்ட மானுடனாக வாழ்ந்து காட்டினான் என்பது நமக்குப் புலனாகிறது. கம்பன் இந்த இடத்தில் சற்றே மாறுதல் செய்து, இராமன் தனது உணர்ச்சிகளைக் கொட்டுவதை திறம்பட காண்பிக்கிறான். அதனையும் கண்டோம்.

மேலும் அனுமனைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது " மற்ற எவனும் கனவினிலும் நினைக்க முடியாத காரியத்தை அனுமான் எனக்காகச் செய்திருக்கிறான்" என வான்மீகியின் இராமன் கூறுகிறான். இவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தால் போன்று " இத்தகைய செய்தியைத் தாங்கி வந்த உனக்கு தகுந்த வெகுமதி என்னிடம் இல்லையே! ஆனால் நான் என்னையே வேண்டுமானால் அதற்குப் பிரதியாக அளிக்கலாம். இதோ நான் உன்னைச் சேர்த்துக் கட்டிக் கொள்கிறேன். இதோ என் நெருங்கிய ஆலிங்கனம்" என்று இராமன் கூறி அவனைக் கட்டித் தழுவித் கொள்வதாக வான்மீகி - (யுத் 1- 13, 14) எழுதியுள்ளார். அனுமானுக்கு இதைவிட வேறு என்ன பேறு வேண்டும்!

இந்த ஆலிங்கனச் செய்தியைக் கம்பன் நன்றாக உள்வாங்கிக் கொண்டு, திருமுடி சூட்டும் படலத்தில் கொண்டு போய் இணைத்துக் காட்டுகிறான்.

*"மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்து, இனிதே அருளின் நோக்கி,*
*ஆர் உதவிடுதற்கு ஒத்தார், நீ அலால்,? அன்று செய்த*
*பேர் உதவிக்கு யான் செய் செயல் பிறிது இல்லை; பைம் பூண்*
*போர் உதவிய திண் தோளாய், பொருந்துறப் புல்லுக! என்றான்"*

என்று இராமன் அனுமனை விளித்து "நீ என்னை ஆலிங்கனம் செய்து கொள்வாயாக" எனச் சொல்லுவதாக அமைத்து தக்க மாற்றம் மூலம் இருபெரும் பாத்திரங்களின் தன்மையை, புகழை நமக்கு எடுத்துக் காட்டுகிறான் கம்பன்.

இந்நிலையில் அருக்கன் மகனாகிய சுக்ரீவன் இராமபிரானை நோக்கி, இலங்கையில் சிறை வைக்கப்பட்டுள்ள சீதாபிராட்டியானவள் இப்பொழுது நம்மிடம் அழைத்துக் கொணர்தற்கு எளிய தன்மையில் இருக்கிறாள் என்பதைச் சொன்னவுடன், "ஏற்கெனவே காலம் தாழ்ந்து போய்க் கொண்டிருக்கின்றது. இங்கேயே இருக்கின்றாய் போலும்" என இராமன் சொல்லுகின்றான். வானர அரசன் உடன்,

*"எழுக வெம் படைகள் என்றான் ஏ என்னும் அளவில் எங்கும்*
*வழுவில் வெள்ளத்தானை தென்திசை வளர்ந்தது அன்றோ"*

இவ்வானரப் படை பனிரெண்டு நாட்களில் தென்கடலை வந்து அடைந்தது என்பதோடு சுந்தரகாண்டம் நிறைவடைகின்றது.

இக்காண்டத்தில் இராமனது பெருமை, வீரம், கருணை, தயாளகுணம் இவைகளெல்லாம் சீதையின் கூற்றாகவும், இராமனின் மேனியழகும் வடிவழகும் அனுமனால் அடிமுதல் முடி வரை சீதையிடம் சொல்லிய பாங்கும், இராமனின் விரகதாபம், சூடாமணியை வாங்கிய பின் அவனது மெய்ப்பாடுகள் ஆகியவை கம்பனது கவித்திறத்தால் மிளிர்கின்றது. இராமன், சுக்ரீவன் பாத்திரங்களின் செயல்பாடுகள், உரையாடல்கள் மிகவும் குறைவாக இருந்தபோதிலும், பிறபாத்திரங்களின் வாயிலாக, அவர்களது பெருமையை உயர்த்திக் காண்பித்துள்ளது கம்பனது தனிச்சிறப்பு.

❋❋❋

## சுந்தர காண்ட இராவணன்

பேராசிரியர் டாக்டர் த. அகரமுதல்வன்

### முன்னுரை

வெள்ளியம் கிரியினை இருபது கரங்களால் அள்ளி எடுத்த போது, அரன் விரலூன்ற, மலையினடியில் மாட்டிக் கொண்டு கதறி அழுதவன் இலங்கை வேந்தன். இசை பாடி, ஈசன் மனத்தைக் குளிர்வித்து, சந்திரகாசம் எனும் வாளும், இராவணன் எனும் பெயரும் பெற்றவன் தசமுகன். இராவணன் என்றால் அழுதவன் என்று பொருள். இதனைத் திருஞானசம்பந்தர் சுவாமிகள் (கி. பி. 7 ஆம் நூற்.)

"தேரார்தரு திகழ்வாள் எயிற்று
அரக்கன் சிவன்மலையை
ஓராதெடுத்து ஆர்த்தான் நெரித்துக்
கூரார்தரு கொலைவாளொடு
குணநாமமும் கொடுத்த
ஏரார் தரும இறைவர்க்கு
இடம் இடும்பாவனம் இதுவே" (1 - 17 - 8) - ம்

என்று பாடியுள்ளார்.

இராவணன் விச்வாசு முனிவருக்கும், கேகசி எனும் அரக்கிக்கும் பிறந்த முதல் மகன். முனிவர் மகனாதலின் வேதங்களிலும், கலைகளிலும் முதல்வனாக விளங்கினான். அரக்கியின் வயிற்றில் பிறந்தவனாதலின் அரக்க குணமும், உடற் பெரு வலிமையும் ஒருங்கே பெற்றிருந்தான். தன் தலையை அடுத்தடுத்துப் பத்து முறை வெட்டி வேள்வியில் இட்டுக் கடுந்தவம் புரிந்தமையால் ஒருசேரப் பத்துத் தலைகளும் முக்கோடி வாழ்நாளும் இறைவனிடமிருந்து பெருவரமாகப் பெற்றான். எனினும், பிறன்மனை நோக்கல் எனும் குற்றத்தின்பாற்பட்டு உற்றார் உறவினருடன் சுற்றமும் கொற்றமும் இழந்தான்.

*எனைத்துணையராயினும் என்னாம் தினைத்துணையும்*
*தேரான் பிறனில் புகல் . (144)*

எனும் திருக்குறளுக்கு இலக்கியமானான் இராவணன். தொடக்கத்தில் புலனடக்கத்தால் தவம் செய்து அனைத்துச் செல்வங்களையும் அதிகமாகப் பெற்றவன் இராவணன். நீர்ப்பெருக்கம் மிகுந்த வரும் நீர் நிலைக்கு உறுதியான கரையும் கட்டுக்காவலும் தேவை. உரமும் வரமும் மிகுதியாகப் பெற்றுள்ள ஒருவனுக்குப் பொறி அடக்கம் எனும் உறுதியான கரை தேவை. அக்கரையில் ஓர் உடைப்பு ஏற்பட்டு விட்டால் உரமும் வரமும் வெள்ளமென

வெளிப்போந்து பிறரையும் அழித்துத் தன்னையும் அழித்து விடும். ( கம்பர் ஆய்வுக்கோவை ப. 34) அந்நிலைக்கு ஆளான அவல வீரன்தான் இராவணன். அவன் கதையில் சுந்தர காண்டப் பகுதி மட்டும் ஈண்டு ஆயப்படுகிறது.

### *அனுமன் வழி அறிமுகம் :*

ஆரணிய காண்டத்திலேயே இராவணன் அறிமுகம் ஆகிவிடுகிறான். எனினும், சுந்தரகாண்டத்தில் நூற்பெருங்கடல் நுணங்கிய கேள்வனாம் அனுமன் வாயிலாக மீண்டும் நாம் இராவணனைக் காணுகிறோம். ஊர் தேடு படலத்தில் - இலங்கையின் உட்புகுந்து உலா வந்து ஊடுறுவும் அனுமன், இராவணனைத் துயிலும் நிலையில் நோக்கினான். ஒருவன் விழித்திருக்கும்போது பதுக்கிக் கொள்ளும் இயல்பான குணங்கள் உறங்கும்போது தோன்றுமன்றோ! ஆதலின் அரக்கர் குலத்தோரை உறங்கும்போது கண்டு அவர் உட்புகுந்து ஆய்ந்து உணர்த்தும் வண்ணமே கம்பர் நமக்குக் காட்டுகின்றார்.

தழைத்த தோளோடு தலைபல பரப்பிச் சிங்கம் ஒன்று படுத்திருப்பதுபோல அவன் கிடந்தான். அவன் சூடியிருந்த மணிமுடிகள் ஒளி வீசின. குன்றின் மேலிருக்கும் குழவி ஞாயிறு போன்று அவன் விளங்கினான். ஆய்வளை அரம்பையர் ஆயிரவர் அவனுக்குத் தூய வெண் கவரி வீசி நின்றனர். குளிர்ந்த காற்று பட்டபோதும் அவன் மேனி எரிந்தது. சீதையை நினைந்து நினைந்து அவன் பெருமூச்சு விட்டான். அவன் படுத்திருந்த மலர்ப் படுக்கையும் கூட வெந்து போனது. அவனுடைய தணியாத காமநோயைக் கண்ட அனுமன், சீதைக்கு ஊறு ஏதும் விளையவில்லை என்று உணர்ந்தான். இராவணனைக் கொல்லத் தோன்றிய தன் சினத்தையும் அடக்கிக் கொண்டு, 'அதனை இராம பிரானே செய்ய வேண்டும் என்று' முடிவு செய்தான்.

### *இராவணன் - அலங்கார பவனி :*

மீண்டும், இராவணன் நிந்தனைப் படலத்தில் தோன்றுகிறான். அவன் அங்கு வந்த நேரமோ நள்ளிரவுப் பொழுது. உறக்கம் வராது காமநோயால் தவித்துக் கொண்டிருந்த அவன் சீதையை எப்படியும் இணங்க வைக்கலாம் என்ற நம்பிக்கையில் அங்கு வந்தான்.

கம்பர், இராவணன் வரும் கோலாகலமான காட்சியை இருபதுக்கும் மேற்பட்ட பாடல்களில் விளக்கி வரைகிறார். மாவீரனனான அவன் ஒரு பெண்ணைக் காணச் செல்லும்போது வீரர் படை சூழவா செல்வான்? மகளிர் புடை சூழச் செல்கிறான். அவன் உடைவாளை உருப்பசி ஏந்தி வருகிறாள்; வெற்றிலை மடித்துக் கொடுக்க மேனகை வருகிறாள். செருப்பைத் தாங்கி திலோத்தமை வருகிறாள். இப்படித் தேவ மகளிர் ஆயிரவர் புடை சூழ சந்தனமும் மாலைகளும் மணக்க மணக்க வருகிறான்.

" உருப்பசி உடைவாள் எடுத்தனள் தொடர
மேனகை வெள்ளடை உதவ
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல
அரம்பையர் குழாம் புடை சுற்ற
கருப்புரச் சாந்தும் கலவையும் மலரும்
கலந்து உமிழ் பரிமளகந்தம்
மருப்புடைப் பொருப்பு ஏர் மாதிரக் களிற்றின்
வரிக் கை வாய் மூக்கிடை மடுப்ப"

பால்நிறுத்து அன்னக்குழாம் படர்ந்ததென்ன பற்பல மங்கையர் அங்கையில் விளக்கேந்தி அணிபெற அசைந்து வர, இயக்கியர், அரம்பையர், வித்யாதரமகளிர், நாக நங்கையர், சித்த நாரியர், அரக்கியர், என மங்கையர் கூட்டம் மால்வரை தழீ இய மஞ்ஞையும் குழுவெனச் சூழ்ந்துவர இராவணன் வந்தான். "இத்துணைப் பெண்கள் என் காலடியிற்கிடக்க, ஏ! சீதை எனும் சின்னப்பெண்ணே! உனக்கு மட்டும் என்மேல் என்ன வெறுப்பு?"என்று காட்டுவதற்காக இப்படி மகளிர் புடைசூழ இராவணன் வந்தான் போலும்!

## காமத்தால் வீழ்ந்தான் :

அன்னை சீதையின் எதிரில் ஆடம்பரமாக வந்த இராவணன் காமத்தால் கூனிப்போகிறான். அவன் கம்பீரம் காணாமல் போகிறது. இன்பக்குயிலே எனக்கு இன்னருள் செய்வது எப்போது? என்று அவன் இரந்தான். இன்று வரை நாள்கள் வீணாயின; இனிவரும் நாட்களும் வீணாகுமோ? நீ என்றுதான் எனைக் கூடுவாய்? நான் இறந்த பின்னரா? என்று கெஞ்சினான்.

"இன்று இறந்தன நாளை இறந்தன
அன் திறம் தரும் தன்மை இதால் எனைக்
கொன்று இறந்தபின் கூடுதியோ? குழை
சென்று இறங்கி மறம் தரு செங் கணாய் !" -

இறுதியாக இராவணன், மூன்றுலகங்களையும் வென்றாளும் நான் உன் அடிமை, என்னை ஏற்றருள்க எனக் கெஞ்சியவாறே தலைமேல் கரங்களைக் கூப்பியபடி சீதையின் கால்களில் விழுந்தான். நம்பவே முடியவில்லை! எத்துணை பெரிய வீரன் இராவணன்! எண்டிசையும் வென்றவன்! மூவுலகங்களையும் ஆள்பவன்! முக்கோடி வாழ்நாளும், முயன்றுடைய பெருந்தவமும், எக்கோடி யாராலும் வெலப்படாய் என்ற வரமும் வீரமும் பெற்றவன். வாரணம் பொருத மார்பும் வரையினை எடுத்த தோளும் நாரதமுனிவர்க்கு ஏற்ப நயம்பட உரைத்த நாவும் உடையவன்! இவனா இப்படி மாற்றான் மனைவியின்

கால்களில் விழுகிறான்! காமம் எந்த அளவிற்கு ஒருவனைக் கீழ்மைப் படுத்தும் என்பதற்கு இந்தக் காட்சியே சாட்சி.

## *சீதையின் சீற்றம் :*

இராவணன் சொற்களால் சினங்கொண்ட சீதை, "ஏ துரும்பே! இல்லப் பெண்ணிற்கு ஏற்காத பேச்சினைப் பேசினை. என் கணவரின் அம்பு பதினான்கு உலகங்களையும் அழிக்க வல்லது. அதற்கு அஞ்சியே நீ என்னை வஞ்சகமாகக் கவர்ந்து வந்தாய். சடாயுவிடம் தோற்றவன் நீ. சிவன் தந்த வாளால் நீ பிழைத்தாய். தவத்தால் பெற்ற உன் நீண்ட ஆயுள் இராமனின் அம்புக்கு முன் நில்லாது. ஆயிரம் கைகளை உடைய கார்த்த வீரியனை அழித்த பரசுராமனையே வென்றவன் என் கணவன்! நீதி என்பதை யறியாத நீசனே இதனை நீயறியாயா?" என்று சீறினாள்.

## கோபத்தை வென்ற கொடுங்காமம் :

சீதையின் பேச்சைக் கேட்ட இராவணன் ஆத்திரமடைந்தான். அவனுடைய இருபது கண்களும் கனலைக் கக்கின. பத்து வாய்களையும் பயங்கரமாகத் திறந்து கத்தினான். இவளைக் கொன்று தின்பேன் என்று கிளம்பினான். ஆனால் சீதையின் பால் அவன் கொண்ட காதல் அவனை தடுத்து, "கிளர்ந்த சீற்றமும் கீழான காதலும் எதிர் எதிர்கிடப்ப" என்றெழுதுகிறார் கம்பர். இராவணன் சினத்தீ காம வெள்ளத்தால் அணைந்தது. "மூண்ட கால வெந்தீ என முற்றிய சீற்றம், நீண்ட காமநீர் தீர்த்தத்தின் வீவுறு நிலையின் மாண்டு நின்று" என்கிறார் கம்பர். காமம், லோபம், குரோதம், மோகம், மதம், மாச்சர்யம் எனும் அறுவகைக் குற்றங்களில் இராவணனிடம் காமமே மிக்கிருந்ததைக் காணுகிறோம்.

## இராவணன் செருக்கு :

சற்று சாந்தமடைந்த இராவணன் மீண்டும் பேசினான். "பெண்ணே! உன் அறிவற்ற பேச்சு என்னைச் சினமுறச் செய்தது. உன்னை கொன்று விட மாட்டேன். நான் வஞ்சகமாக உன்னை கவரவில்லை. இவ்வுலகத்தில் என்னால் முடிந்தது இது; முடியாதது இது என்று ஒன்றில்லை. நான் இதுவரை பெற்ற வெற்றியும் தோல்வியும் விளையாட்டாக நிகழ்ந்தன."

"ஒல்வது ஈது ஒல்லாதது ஈது
என்று எனக்கு ஒன்று உலகத்து உண்டோ?
வெல்வதும் தோற்றல்தானும்
விளையாட்டின் விளைந்த மேல்தான்"

என்று செருக்கோடு தொடங்கிய இராவணன் சீதை கேட்ட கேள்விக்கெல்லாம் பதில் சொல்கிறான்.

"நான் இராமனைப் போரில் கொன்று உன்னைக் கவர்ந்து வந்திருந்தால் நீ உயிரை விட்டிருப்பாய் பிறகு என் உயிரும் போயிருக்கும். எனவேதான் வஞ்சகமாக உன்னை எடுத்து வந்தேன். மற்றபடி என்னைப் போரில் வெல்ல எவரால் முடியும்? மாயமானை உண்மையான மான் என எண்ணிப்போன மனிதர்கள் என்னை எதிர்த்து வரமாட்டர்கள். தேவர்களும் என்னெதிரே வரத்தயங்குவார்கள். என்னை வென்றவன் என்று நீ குறிப்பிட்ட கார்த்த வீரியனும் மும் மூர்த்திகளும் இருக்கும்போதே இந்திரன் ஏவல் செய்ய மூவுலகங்களையும் ஆண்டவன் நான் ஒருவனே. இன்றே இராம இலக்குவனையும் இங்கே கொணர்ந்து எனக்குப் பணி செய்ய வைப்பேன்." பரதனையும் கொல்வேன். மிதிலை நகரில் உள்ளோரையும் அழித்து உன்னையும் கொல்வேன். இன்னும் இரண்டு மாதத்திற்குள் "சிந்தித்து முடிவு செய்" என்று கடுமையாக மிரட்டினான் இராவணன்.

பின்னர், "சீதையை இணங்கச் செய்யாவிட்டால் உங்களையும் கொல்வேன்" என்று அரக்கியரையும் மிரட்டி விட்டு இராவணன் அரண்மனைக்குச் சென்று விட்டான்.

*மாட்சியும் வீழ்ச்சியும் :*

இராவணன் மாட்சியையும் வீழ்ச்சியையும் காட்ட இவ்வொரு காட்சியே போதும். அரம்பையர் புடைசூழ அவன் வந்தது அவன் மாட்சியைக் காட்டுகிறது. அடுத்து அவன் மாற்றான் மனைவியின் பால் காமுற்றுக் காலில் வீழ்ந்தது அவன் வீழ்ச்சியைக் காட்டுகிறது. காமம், மாவீரன் இராவணனை எந்த அளவுக்குத் தாழ்த்தி விட்டது ! சீதையின் அறிவுரையைக் கேட்ட பின்பும் சற்றேனும் அவன் சிந்தித்தானா? இல்லையே! செருக்கோடல்லவா தன்னை வியந்து பேசினான்!

இராவணன் அழிந்தமைக்கு இவ்விரண்டும்தான் காரணம் ஒன்று கழி காமம்; இன்னொன்று தன்னை வியக்கும் செருக்கு. ஆய்வாளரும் இதனையே எடுத்துமொழிவர். மூவுலகங்களும் புகழ்ந்து போற்றும் உயர்ந்த நிலையினின்று இராவணன் வீழ்ந்ததற்கு அடிப்படைக் காரணங்களாய் அமைந்தவை அவனுடைய காமமும் செருக்கும் ஆம் என்பார் அ.ச.ஞா அவர்கள். (இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும் ப. 146 )

காமத்தாலும் செருக்காலும் கெட்டழிந்தார்கள் கூடக் கடைசிக் காலத்தில் பிறர் அறிவுரை கேட்டுத் திருந்துவர். இராவணன எவர் அறிவுரையையும் கேட்கமாட்டான். இருபது காதுகள் இருந்தாலும் எதுவும் அவன் காதில் ஏறாது. அவன் வீழ்ச்சிக்கு இதுவும் இன்னொரு காரணம் எனலாம். இக்காட்சியில் கம்பர் அதனையும் சுட்டத் தவறவில்லை. சீதை இராவணனிடம் பேசிய போது இறுதியாகச் சொன்ன வார்த்தைகள் இவைதாம். "கடித்துக் கொல்லும் பாம்பும் மந்திரத்திற்குக் கட்டுப்படும்: செருக்குற்று நிற்கும் உன்னை தக்கது இது தகாதது இது என்று காரணங்காட்டி இடித்துச் சொல்லித் திருத்துபவர் ஒருவரும்

இல்லை போலும், நீ நினைப்பதையே தாமும் நினைத்து உன்னைக் கெடுப்பவர் தாம் உள்ளனர் போலும். அவ்வாறாயின் நீ அழிவது தவிர வேறு ஒரு முடிவு உனக்கு உண்டோ?''

"கடிக்கும் வல் அரவும் கேட்கும் மந்திரம் கவிக்கின்றோயை
அடுக்கும் ஈது அடாது என்று ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி
இடிக்குநர் இல்லை உள்ளார் எண்ணியது எண்ணி உன்னை
முடிக்குநர் என்றபோது முடிவு அன்றி முடிவது உண்டோ?''

*இராவணன் - கிங்கரர், சம்புமாலி, பஞ்சசேனாபதிகளை இழத்தல்*

சீதையிடம் பேசியபோதே இராவணனைக் கொல்ல எண்ணிய அனுமன் அது தன் கடமையன்று என்று தன்னை கட்டுப்படுத்திக்கொண்டான். எனினும் இராவணனைச் சந்தித்து புத்தி சொல்ல ஒரு வழி தேடினான். அங்குள்ள பொழிலை அழித்தால் இராவணனுக்கு அச் செய்தி போய்ச்சேரும். அப்போது அவனைச் சந்திக்க ஒரு வழி பிறக்கும் எனக்கருதி அப்பொழிலை அழித்தான். ஒரு குரங்கு பொழிலை அழித்தது என்ற செய்தியைக் கேட்ட இராவணனுக்கு நகைப்பும் தோன்றியது. பொறாமையும் தோன்றியது. உடனே அளவற்ற கிங்கரர்களை அழைத்து அக்குரங்கைப் பிடித்து வாருங்கள் என்று ஏவினான்.

குரங்குதானே என்று ஏளனமாக எண்ணிச் சென்ற கிங்கரர் அனைவரையும் அனுமன் அழித்தான். அச்செய்தியைக் கேட்ட இராவணனால் அதனை நம்ப முடியவில்லை. "குரங்கொன்று கிங்கரரைக் கொன்றது என்று கேள்விப்பட்டுச் சொல்கிறீர்களா? கண்ணால் கண்டு சொல்கிறீர்களா?'' என்று கேட்டான். சரகர்கள் கண்ணால் கண்டோம் என்றனர். உடன் சம்புமாலி எனும் வீரனைப் பார்த்து, "அக்குரங்கைப் பற்றி இழுத்து வந்த என் சினத்தைத் தணி என்று ஆணையிட்டான். சம்புமாலியையும் அவனுடன் வந்த படைகளையும் அனுமன் அழித்தான். அதைக் கேள்விப்பட்ட இராவணன் பெருங்கோபங்கொண்டான். நானே சென்று அக்குரங்கை பிடிக்கிறேன்'' என எழுந்தான். அப்போது சேனைத் தலைவர் ஐவரும் தடுத்துத் தாங்களே போருக்குச் சென்றனர். அவர்களையும் அனுமன் அழித்தான்.

*அக்க குமாரனையும் இழந்தான் :*

பஞ்சசேனாதிபதிகளும் அவர்களுடன் சென்ற பல இலட்சம் அரக்க வீரர்களும் அழிந்தனர் எனக் கேட்டு வெகுண்டெழுந்த தானே போருக்குப் புறப்பட்ட இலங்கேஸ்வரனை அவன் மகன் அக்ககுமாரன் தடுத்தான். மற்றவர்கள் சொன்னது

போலவே ஒரு குரங்கை எதிர்க்க இராவணன் செல்வது அவன் பெருமைக்கு இழுக்கெனக் கூறினான். போருக்குச் சென்ற அக்ககுமாரனையும் அனுமன் அழித்தான்.

## இராவணனுக்கு இந்திரசித்தன் கண்டனம் :

அக்ககுமாரனும் அவனுடன் சென்ற பெரும் படைகளும் அழிந்தன எனக் கேட்டு மாவீரன் இந்திரசித்தன் மனமொடிந்தான். "எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழன்றோ தேய்ந்தது! என்று குமுறினான். இராவணனைச் சந்தித்தான். தந்தையை வணங்கி, குரக்கின் வலிமையை அறிந்த பின்னும் அடுத்தடுத்து வீரர்களை அனுப்பி அரக்க குழுவைக் கொன்று விட்டாயே! "

" ஒன்று நீ உறுதி ஓராய் உற்றிருந்து உளையகிற்றி
வன் திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும் அன்னோ
சென்று நீர்பெருதிர் என்று திறத் திறம் செலுத்தித் தேயக்
கொன்றனைநீயே அன்றோ அரக்கர் தம் குழுவை எல்லாம்."

இவ்வாறு கூறியபின் இராவணனின் அனுமதி பெற்று இந்திரசித்து போருக்குச் சென்றான். அனுமனை வெல்ல முடியாத நிலையில் இறுதியாகப் பிரமாத்திரத்தால் அவனைப் பிணைத்தான். இராவணனைச் சந்தித்து அறிவுரை சொல்ல இதுவே நல்ல வழி என்று அனுமனும் பிரமாத்திரத்திற்குக் கட்டுப்பட்டான்.

## இராவணன் வீற்றிருக்கும் காட்சி :

கம்பர் மீண்டும் இராவணனின் கம்பீரக் காட்சியை இங்கு காட்டுகிறார். வெள்ளிமலை போன்ற வெண்கொற்றக்குடையின் கீழ் அவன் வீற்றிருக்கிறான். அவன் மேனியில் வீரத்தழும்புகளும் உள்ளன. மகளிரின் நகங்கள் பட்ட காயங்களும் உள்ளன என்கிறார். இராவணனின் வீரத்தையும் காமத்தையும் ஒரு சேரக் காட்டும் நோக்கில் இக்காட்சியைக் கம்பர் படைத்துள்ளார்.

## இராவணனுக்கு - இராமனைப் பற்றிக் கூறுதல் :

இராவணன் எதிரே நின்ற அனுமனை நோக்கி, நீ யார்? ஏன் இலங்கைக்குள் வந்தாய்?" என்று கோபம் கொப்பளிக்க கேட்டான். " நீ திருமாலா? இந்திரனா? சிவனா? பிரமனா இல்லை ஆயிரந்தலைகளுடைய ஆதிசேடனா? சொல். பெயரையும் உருவையும் மறைத்துக் கொண்டு ஏனிங்கு வந்து போர் செய்தாய்?" என்று மீண்டும் வினவினான்.

அனுமன் அழகாகப் பேசினான். "நீ குறிப்பிட்ட எவரும் அல்லன். கமலச் செங்கண் கொண்ட ஓர் வில்லியின் தூதன் யான். அவ்வில்லாளி யாரெனில் முனிவரும் தேவரும் மும்மூர்த்திகளும் வேறொருவரும் நினைத்தற்கரியவன். இருவினைகளை முடிக்க வந்தவன்."

"அனையவன் யார் என அறிதியாதியேல்
முனைவரும் அமரரும் மூவா தேவரும்
எனையவர் எனையவர் யாவர் யாவையும்
நினைவு அரும் இரு வினை முடிக்க நின்றுளோன் "

"உன் வரத்தையும் உரத்தையும் ஓரம்பினால் அழிக்க வந்தவன். அவன் வேதமும் அறமும் சொல்லும் மெய்அறமூர்த்தி."

" போதமும் பொருத்து கேள்விப் புரை அறுபயனும் பொய்தீர்
மாதவம் சார்ந்த தீரா வரங்களும் மற்றும் முற்றும்
யாது அவன் நினைத்தான் அன்ன பயத்தன ஏது வேண்டின்
வேதமும் அறனும் சொல்லும் மெய் அறமூர்த்தி வில்லோன்."

"முதல், இடை, நடு என்பதன்றி முக்காலங்களையும் அவற்றின் கணக்குகளையும் கடந்து நிற்கும் பரம்பொருள் அவனே. பிரமன் தன் கமண்டலத்தையும், திருமால் தன் சங்கு சக்கரங்களையும், சிவன் தன் சூலத்தையும் விடுத்துக் கையில் வில் ஏந்தி இராமன் எனும் ஒருவனாக வந்துள்ளனர். திருமால் ஆலிலையையும், பிரமன் தாமரையையும், சிவன் கயிலையையும் விடுத்து அயோத்தியில் இராமனாகப் பிறந்துள்ளனர்."

"மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கை வில் ஏந்தி
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்."

"அது மட்டுமா? அறங்காத்து உலகை நல்வழியில் ஒழுகச் செய்து தீயவர்களை அழித்து நல்லவர்களின் நலிவு நீக்கி தன்னடியைத் தொழுவார்க்குப் பிறப்பறுத்து முக்தி தரும் பரம்பொருள் அவனே. அவனுக்கு யான் அடிமை. என் பெயர் அனுமன். சீதையைத் தேடி வந்த வாலி மகனின் தூதுவனாக இங்கு வந்துள்ளேன்" என்றான்.

இராவணனுக்கு அனுமன் கூறிய இராமனைப் பற்றி உண்மைகள் காதில் ஏறவில்லை. அவன் மனிதரை துச்சமாக நினைக்கக் கூடியவனல்லவா? ஆனால் வாலியைப் பற்றி அனுமன் கூறியது மட்டும் அவனுக்கு சுருக்கென்று நெஞ்சில் பாய்ந்தது.

வாலியை இராவணன் மறக்க முடியுமா! அவன் வாலில் கட்டுண்டு வதைப்பட்டதைத்தான் மறக்க முடியுமா! எனவேதான் வாலி நலமா? என்று கேட்டான். அனுமனும் சிரித்துக் கொண்டே, கிண்டலாக, "அஞ்சாதே அரக்கனே! வாலியும் வானுலகம் போய்விட்டான். அவன் வாலும் போய்விட்டது. இதைச் செய்தது யார் தெரியுமா, எங்கள் இராமபிரான். அவர் விட்ட ஓரம்பினாலே வாலி உயிர் விட்டான், இப்போது எங்கள் அரசன் சுக்ரீவன்" என்றான். பிறகு தான் வாலியைக் கொல்லும் வலிமையுடையவன், இராமன் என்றெண்ணி இராவணன் நடந்ததை எல்லாம் கேட்கிறான். நடந்ததை அனுமன் சொல்லக் கேட்ட இராவணன், " உங்கள் குலத் தலைவன் வாலியைக் கொன்ற இராமனுக்கு நீங்கள் அடிமையாயிருப்பது உங்களுக்கு இகழ்ச்சியில்லையா? சரி நீ என்ன செய்தி சொல்ல இங்கு தூதனாக வந்தாய்? சொல்" என்றான்.

"சுக்ரீவன் உரைத்த நல்ல நீதிகளை உனக்குச் சொல்லவே நான் இங்கு வந்துள்ளேன். நீ உன் வாழ்க்கையை வீணடித்து விட்டாய். எனினும் இனியாவது நான் சொல்வதைக் கேட்டால் உயிர் வாழலாம். கற்பின் கனலியைக் கவர்ந்து வந்துள்ளதால் நீ ஐம்புலன்களை அடக்கி வென்று காத்து வந்த தவத்தின் பயனை இழக்கத் தொடங்கிவிட்டாய். உன் மாதவத்தால் பெற்ற தூய்மையை சீதைபாற் கொண்ட காமம், அழித்து விட்டது. காமமும் செருக்கும் கொண்டவர்கள் அழிவரே யன்றி வாழ்வரோ?"

"திறம் திறம்பிய காமச் செருக்கினால்
மறந்த தம்தம் மதியின் மயங்கினார்
இறந்து இறந்து இகழ்ந்து ஏறுவதே அலால்
அறம் திறம்பினார் ஆர் உளர் ஆயினார்."

அனுமன் இராவணனின் வீழ்ச்சிக்குக் காரணமானக் கழிகாமம், மிரு செருக்கு ஆகிய இரண்டையும் ஈண்டு அழகாகச் சுட்டிக் காட்டுகிறான்.

மேலும், அனுமன், "சிவனிடம் நீ பெற்றுள்ள வரமும் பிற சிறப்புகளும் அறம் தவறும் போது உன்னைக் காப்பாற்றாது போய்விடும். இராமன் விடும் அம்பு உன் உயிரைப் பறிக்கத் தவறாது. எனவே சீதையை விட்டுவிடு என்று சுக்ரீவன் உனக்கு சொல்லி அனுப்பினான்" என்றான்.

## இலங்கை எரிந்தது :

இதைக் கேட்ட இராவணன் பெரிதாகச் சிரித்துக் கொண்டே, "குன்றில் வாழும் அற்பக் குரங்குகளெல்லாம் எனக்கு அறிவுரை சொல்லுகிறதா? நன்று! நன்று! குரங்கின் பேச்சு கிடக்கட்டும்! மனிசரின் ஆட்சி கிடக்கட்டும்! தூதனாக வந்த நீ ஏன்டா அரக்கரை

அழித்தாய்?'' என்றான். "உன்னை நேரில் காண வேண்டுமென்றே கானகத்தை அழித்தேன். கொல்ல வந்தவனைக் கொன்றேன்'' என்றான் அனுமன். கோபம் கொண்ட இராவணன் இவனைக் கொல்லுங்கள் என்றான். வீடணன், தூதுவனைக் கொல்லக் கூடாது'' எனத் தடுத்தான். பின்னர் "அனுமனின் வாலைச் சுட்டு அனுப்புக'' என இராவணன் கட்டளை இட்டான். அனுமன் இலங்கையைத் தீக்கிரை ஆக்கினான். குரங்கு சுட்டது எனக் கேட்ட இராவணன் கொதித்தான். "குரங்கு ஒன்று இலங்கையை எரித்தது எனக் கேட்டால் அமரர் நகைப்பர்'' என்று சினத்தோடு சிரித்தான். அக்குரங்கைப் பற்றிக் கொண்டு வாருங்கள் எனக் கட்டளையிட்டான்.

*முடிவுரை :*

இவ்வாறாக இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும் சுந்தர காண்டத்தில் சொல்லப்படுகிறது. இராவணனின் பெருமைகளும் பேரரசும் பேசப்படும் சுந்தர காண்டத்தில் அவனுடைய வீழ்ச்சிக்குக் காரணமான காமமும் செருக்கும் காட்டப்படுகிறது. அரக்கர் கோமானின் அழிவுக்கான, அறமூர்த்தியின் வெற்றிக்கான ஆரம்பத்தையும் சுந்தரகாண்டத்தில் கண்டு மகிழலாம். இராவணன் குபேரனிடமிருந்து பறித்துக் கொண்ட பொன்னகரின் பெருமையை சுந்தர காண்டத்தின் தொடக்கத்தில் அனுமன் வியந்து பேசுகிறான். இறுதியிலோ "அறம் நுழைய முடியாத'' அந்நகரை அனுமனே அழிக்கிறான். மாநகரின் அழிவு இலங்கையர்கோன் வீழப்போகிறான் என்பதற்கு ஒரு முன்னறிவிப்பு போலும்.

❋❋❋

## காவ்ய ரஸனை – சுந்தர காண்டம்

அமரர் வ.வே.சு. அய்யர்

சுந்தர காண்டத்தின் அமைப்பை ஆராயப் புகுவோம். அதற்கு இப்பெயரை வைத்தது வால்மீகியேயாயிருந்தாலும், வேறு யாராயிருந்தாலும், பெயர் வைத்தவன் மிகப் பொருத்தமாகவே வைத்திருக்கிறான். இதுவே காண்டங்களனைத்தினும் பேரழகு வாய்ந்தது. உயுத்த காண்டத்தில் காம்பீரியமும் கதையின் ஓட்டமும் அதிகம். ஆரணிய காண்டத்தில் வெவ்வேறுபட்ட சம்பவங்களின் சமன் வயத்தினால் வரும் அழகு பிரதானமாக இருக்கிறது. அயோத்தியா காண்டத்தில் நாயகர்களின் சுக வாழ்வுக்கு நேரும் எதிர்பாராத தடையும் சோக பரம்பரையும், அக்காண்டத்தின் வேகமும் அதற்கு ஓர் தனிச் சுவையைத் தருகின்றன. ஆனால், கவி தன் அருமையை யெல்லாம் தன் சக்தியை யெல்லாம், தான் சிறையிலிருந்து உலகை விடுவிக்க வந்த எம்பெருமாட்டியான சீதா பிராட்டியின் பெருமைகளை வர்ணிக்கும் இந்தச் சுந்தர காண்டத்திலேயே வரையாமற் செலவு செய்திருக்கிறான். சிறையிருந்தாளின் ஏற்றத்தைக் கூறுகின்றதுதான் ராமாயணம் என்று ஸ்ரீ. பிள்ளைலோகாச்சாரியர் சொல்லியதும், 'ஸீதாயச் சரிதம் மகத்' என்னும் வால்மீகி ராமாயணப் பாயிரத்தின் சூத்திரத்திற்கு இலக்கியமாக விளங்கும் வால்மீகி ராமாயண சுந்தர காண்டத்தையும், 'அதற்கு நான் தோற்றேனில்லை!' என்று துவஜம் கட்டி நிற்கும் கம்ப ராமாயணத்தின் சுந்தர காண்டத்தையும் கருதியேயாகும்.

சீதையைத் தேடிக் கண்டு பிடிப்பதற்காக அனுப்பப்பட்ட வானர தூதர்களுக்குள்ளே, மகா புத்திமானும், பலவானும், ஸ்வாமி பக்தனும், திறமைசாலியுமான அனுமான் மகேந்திர பர்வதத்தின் மீது நின்று கடலைத் தாவுகிற வர்ணனையோடு சுந்தர காண்டம் ஆரம்பிக்கிறது. கடலைத் தாவும் வர்ணனையில் வால்மீகி கம்பனை எளிதில் வென்று விடுகிறான். வால்மீகியில் அதிசயோக்திகள் கூட இயற்கைக்குப் பொருந்த ரஸக்ஞர்கள் சிரக் கம்பம் செய்யும்படி இருக்கின்றன. கம்பனில் இந்த வர்ணனைச் சுவை குறைவாக இருக்கிறது என்றே சொல்ல வேண்டும். அவன் சொல்லுகிற உத்பிரேக்ஷைகள் சமுத்திரத்தின் காம்பீரியத்தையும் அனுமான் தாவுகிற சண்டமாருத வேகத்தையும் மறைத்து விடுகின்றன. ஆனால், அதற்கு மாறாக, மைந்நாக பர்வதத்தினுக்கும் அனுமானுக்கும் நடக்கிற சிறு சம்பாஷணையில் கூட கம்பனுடைய திறன் அதிகமாய் விளங்குகிறது. 'நீ நான் செய்யும் விருந்தினை ஏற்றுப் போக வேண்டும்' என்று மைந்நாகம் செய்கிற உபசாரத்துக்கு,

"பெருந்தேன் பிழிசாலும்நின் அன்பு பிணித்த போதே
இருந்தேன்! நுகர்ந்தேன்! இதன்மேல்இனி ஈவது என்னா?"

(தேன்பொங்கிப் பொழிவது போன்ற உன் அன்பு என்னைத் தழுவிய போதே உன்மீது நான் இளைப்பாறின்வனாகி விட்டேனன்றோ? நீ கொடுக்கும் அமுதை உண்டவனாகிவிட்டேனன்றே? இதற்கு மேல் நீ செய்யத் தக்கது என்ன உளது?)

என்று அனுமான் சொல்லுகிற பதில் எவ்வளவு ரஸமாக இருக்கிறது! இலங்கிணிக்கும் அனுமானுக்கும் நடக்கும் போரும் சம்வாதமும் இன்னும் உயர்ந்த ஸ்தாயியை எட்டுகிறது. சீதா ராவண சம்வாதமும், ஹனுமத் ஸீதா சம்வாதமும், இன்னும் பிற சம்பாஷணைகளும் நிகழும்போது கம்பன் தன்னிலும் உயர்ந்து கொண்டு விடுகிறான்! இவற்றைப் பற்றி மறுபடியும் பேசுவோம்.

ஊர்தேடு படலத்தில் கம்பனுடைய செழுமையுள்ள பாவஞ சக்தி கரை புரண்டோடி இலங்கையை சுவர்க்கத்திற்கும் விழுமியதோர் பூமியாக்கி விடுகிறது. பின்னே வர இருக்கும் சீதையின் சோகத்திற்கும், இலங்கைத் தீவின் ஆவேசத்திற்கும் இது மணியின் ஜ்வலிப்பைத் தூக்கிக் காட்டும் வர்ணத் தகட்டைப் போல அடி நிலமாக விளங்குகிறது. ஆனல் இதிலும் வர்ணனை சற்று விளம்பமாக நடந்து வருகையில் படிப்போருக்கு,

*"கரியனாய், வெளியனாய், செய்யனாய்க் காட்டும் காண்டற்கு*
*அரியனாய், எளியனாய்"*

நிற்கும் ராமபிரானையும், செவிக்குத் தேன் என நிற்கும் ராமனுடைய புகழையும், சிறையின் எய்திய செல்வியின் முகத்தையும் கம்பன் நினைவுறுத்திக் கொண்டே செல்லுகின்றான்.

ஒரு உத்கிருஷ்டமான கவிக்குப் பிறகு இன்னொரு கவி அதே கதையைப் பாடினானானால், முதல் கவியின் போக்கும் வாக்கும் பின்னவன் காலைச் சுற்றி நிற்கும் ஈயத்தளை போலாகி விடுகின்றன. ஆனால், கம்பன் பூமண்டலத்தை ஓர் தலையால் தாங்கும் ஆயிரந் தலை ஆதிசேஷன் போல வால்மீகியின் கனத்தை அலக்ஷியமாய்த் தாங்கி நடப்பதோடு, அவனது கதையையும் தனக்குக் குற்றவேல் செய்து தன் உத்பிரேக்ஷைகளை அலங்கரிக்கும் மணிப் பூண்களாகச் செய்துவிடுகிறான். தாடகை வதைகாலத்திலும், மந்தரை சூழ்ச்சியால் கைகேயியின் மனம் திரிந்த காலத்திலும் வால்மீகி புனைந்து வைத்திருக்கிற கதை முடிவைக் கம்பன் எவ்வாறு கையாளுகிறனென்று அயோத்தியா காண்டப் பகுதியில் நாம் காட்டியுள்ளோம். சுந்தர காண்டத்தில் அந்த வழியை அவன் இன்னும் அழகாகப் பின்பற்றிச் செல்லுகிறான் என்பதை நேயர்களுக்கு இப்பொழுது எடுத்துக் காட்டுவோம்.

சீதையைத் தேடுவதற்காக இலங்கையில் ஒவ்வொரு வீடாக அனுமன் நுழைந்து சென்றான் என்று சொல்லி வரும்போது, 6-வது சருக்கத்தில் வால்மீகி, 'பிரஹஸ்தன் வீட்டையும், மகாபார்சுவன் வீட்டையும், கும்பகர்ணன் அரண்மனையையும், இந்திரசித்தன் அரண்மனையையும், விபீஷணன் மந்திரத்தையும்' என்று வேறொரு வர்ணனையுமில்லாமல் ஜாபிதாவாக அடுக்கிக் கொண்டு போகிறான். கம்பன், சுந்தர

காண்டத்தில் பிற்பகுதியிலும் யுத்த காண்டத்திலும் வால்மீகி புனைந்திருக்கிற கதையை இங்கேயே சூசிப்பித்து தன் வர்ணனைக்கு வேறுபடுத்தி வைத்தலால் வரும் அழகைத் தந்து வைத்திருக்கிறான். உதாரணமாக, கும்பகர்ணனை அனுமன் கண்டான் என்னும்போது, அவன் ஆதிசேஷனைப் போலவும், பரந்த கடலைப் போலவும், உலகத்திலுள்ள இருளெல்லாம் ஒரேயிடத்தில் செறிந்து நின்றது போலவும், தீவினையெல்லாம் உடல்பெற்றுத் தோன்றியது போலவும் இருந்தானென்றும் பிறவுமாக வர்ணிக்கிறான். விபீஷணனது அரண்மனையில் பிரவேசித்ததும், அவன் தோற்றத்தினின்று அவனது தன்மையை அனுமன் ஊகித்துக் கிரகித்துக் கொண்டு, அரக்கர் நாட்டில் பகிரங்கமாக வசித்தல் அசாத்திய மென்பது கண்டு, அவர்களைப் போன்றதோர் உடலை எடுத்துக் கொண்டு வசிக்கும் அறத்தைப் போலிருக்கிறான் என்று அவன் நினைத்தான் என்று கவி கூறுகிறான். இந்திரசித்தனை அனுமன் கண்ணுற்றான் என்பதற்கு முன்னேயே,

*''இந்திரன் சிறையிருந்த வாயிலின் கடை எதிர்ந்தான்.''*

என்று ஓர் கட்டியம் கூறிவிட்டு, அவனைக் கண்ணுற்றபோது, ஆச்சரியப்பட்டு,

*''வளையும் வாள் எயிற்று அரக்கனோ, கணிச்சியான் மகனோ,*
*அளையில் வாளரி அனையவன் யாவனோ, அறியேன் - - -*
*இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் பலநாள்*
*உளைய உள்ளபோர் இவனொடும் உளதுஎன உணர்ந்தான் ''*

'குகையில் சிங்கம் தூங்குவது போன்று தூங்குகிற இவன் ராவணனேதானோ, சூலபாணியின் மகனான முருகக் கடவுளோ, யாவனோ, அறிய முடியவில்லை: ஆனால் லஷ்மணனும் ராமனும் பல நாள் தவிக்கும்படி போர் கொடுக்கப் போகிறான் என்பது நிச்சயம்!' என்று அனுமன் சொல்லிக் கொண்டான்.

*"சிவனை நான்முகத்து ஒருவனை, திருநெடு மாலாம்*
*அவனை அல்லவர் நிகர்ப்பவர் என்பதும் அறிவோ?"'*

*(சிவனையும் விஷ்ணுவையும் விட்டால் இவனுக்கு வேறொருவர் நிகர் ஆவர் என்று சொல்லுவதும் அறிவாகுமா?')*

இந்த மேற்கோள்களினின்று, பிறருடைய கதைகளை சுவீகரித்து அவற்றை முதனூலாசிரியன் போலவே சுதந்திரமாகவும் கம்பீரமாகவும் நடத்திக் கொண்டு போவதில் கம்பன் ஹோமரின் கதைகளை சுவீகரித்துக் கையாண்ட எஸ்கூலனுக்கும் ஸோபோகிளனுக்கும் ஓர் படி உயர்ந்தவன் எனவே அறிஞர் கண்டுகொள்வர்.

ஊர்தேடு படலம் போன்ற கட்டங்களில் கவிக்கு நீண்ட உபதேச வர்ணனை மாலையை யாக்கவேண்டியதவசியமாக இருக்கிறது. ஆனல், இவற்றை வெறும் வர்ணனைகள் மாத்திரம் நிரப்பின் படிப்போருக்குச் சலித்துப்போம். இவற்றோடு பொருந்திய உணர்ச்சிகள் விரவி வருகின்றதே ரசனைக்கு அழகு தரும். இவ்விரகசியம் மகாகவிகளுக்குத்தான் தெரியும். மற்றக் கவிகள் யாதொரு உணர்ச்சியும் மெய்ப்பாடும் இல்லாமல் நூற்றுக் கணக்கான விருத்தங்களைப் போட்டு வர்ணனைகளை நிரப்பி விடுகிறார்கள், அல்லது உத்பிரேக்ஷைகளை மழை பொழிவது போலப் பொழிந்து வெள்ளம் வெள்ளமாய்ப் போலி உணர்ச்சிகளைத் தோற்றுவித்து, படிப்போரின் பாவனையை விலக்கிவிட்டுத் திக்குமுக்காடச் செய்துவிடுகிறார்கள். கம்பன் இப்படலத்தில் அனுமன் மனத்தில் தோற்றுவிக்கிற உணர்ச்சிகள் பொருத்தமாயும் சுபாவிதமாயும் இருக்கின்றன. அவற்றிலும் ஆரோகண அவரோகணத்தை அழகுபட அமைத்து - மேளச் செவ்வி அதாவது வாத்தியத் தொகுதியில் அனுபவிக்கப்பெறும் பல சப்தங்களுள் ஸ்வரங்களும் சம்மேளிப்பதால் வரும் அழகு குறையாமலிருக்கும்படி செய்து விட்டிருக்கிறான்.

சில உதாரணங்கள் காட்டுவோம். இலங்கையைக் காக்கும் படையை அனுமன் கண்டதும்,

*"தெவ்வர் இவர்! சேமம் இது! சேவகனும் யாமும்*
*வெவ் அமர் தொடங்கிடின் எனய் விளையும்?"*

(பகைவர் இத்துணைப் பலிஷ்டர்; அவர்களது காவற்படையோ இத்தகையது; ராமனும் நமது வானர சைனியமும் போர் துவக்கினால் முடிவு என்ன ஆகுமோ?')

*"கருங்கடல் கடப்பு அரிது அன்று, நகர் காவல்*
*பெருங்கடல் கடப்பது அரிது! எண்ணம் இறை பேரின்*
*அருங்கடன் முடிப்பு அரிது; ஆர் அமர் கிடைக்கின்*
*நெருங்குஅமர் கிடக்கும் நெடுநாள்!"*

*('இலங்கையின் காவற்படையைத் தாண்டிச் செல்வது கடலைக் கடப்பதைவிடக் கடினமான காரியமாயிருக்கிறது; கொஞ்சம் கவனம் தப்பினால் நான் வந்த காரியத்தைச் சாதித்தல் அசாத்தியமாய்விடும். போர் செய்ய நேர்ந்தால் யார் வெல்வர் என்று சொல்ல முடியாதபடி நெருங்கிய போர் நெடுநாள் செய்ய வேண்டி வரும்!')*

என்றும் தனக்குள் சொல்லிக்கொள்ளுகிறான்.

பிறகு மண்டோதரியைச் சீதையென ஓர் நிமிஷ நேரம் ஐயுற்று நோக்கிய பின்னர்,

"'கான் உயர்த்ததார் இராமன்மேல் நோக்கிய காதல் காரிகையர்க்கு
மீன் உயர்த்தவன் மருங்குதான் மீளுமோ? நினைந்தது மிகை'

என்று அனுமன் இவ்வாறு ஐயுற்றதே மகா பாபம் எனச் சொல்லிக்கொள்ளுவதும் எத்துணைச் சிறப்பு வாய்ந்திருக்கின்றது என்று ரஸிகருக்கு எடுத்துக் காட்டவும் வேண்டுமா?

ராவணனுடைய சொந்த அரண்மனைக்குள் பிரவேசிக்கையில் வானம் மின்னலின்றி இடித்ததையும் பூரண மங்கல கலசங்கள் வெடித்ததையும் கண்ட ஆஞ்சனேயன்,

நெக்கு நின்றனன், 'நீங்கும் அந்தோ, இந்த
நெடு நகர்த்திரு' என்று.

ராவணனைக் கண்ணுற்றதும் அனுமனுக்கு ஆவேசமுண்டாகி அவனைத் தாளாற்றலால் இடித்துத் தலை பத்தையும் தகர்க்க எண்ணுகின்றான். ஆனால், உடனே மறுபடியும் யோசித்துப் பார்த்து அது பிழையாகும் என்று தீர்மானித்து, தன்னைத் தானே அடக்கிக் கொள்ளுகிறான். இதைச் சொல்லும் செய்யுட்கள் கம்பனுடைய பெயர்போன செய்யுட்களின் வகுப்பைச் சேர்ந்தவையாகும்.

"ஆலம்பார்த்து உண்டவன் போல் ஆற்றல்
அமைந்துளர் எனினும்
சீலம்பார்க் குரியோர்கள் எண்ணுது செய்பவோ?
மூலம்பார்க் குறின், உலகை முற்றுவிக்கும்
முறை தெரினும்
காலம் பார்த்து, இறைவேலை கடவாத
கடல் ஒத்தான்"

"இற்றைப் போர்ப் பெருஞ் சீற்றம் என்னேடு முடிந்திடுக:
கற்றைப் பூங்குழலாளைச் சிறைவைத்த கண்டகனை
முற்றப் போர் முடித்தது ஒரு குரங்கு என்றால் முனை வீரன்
கொற்றப் போர்ச்சிலைத் தொழிற்குக் குறைவு உண்டாம்!"எனக்குறைந்தான்.

ஊர் முழுதும் தேடிய பிறகும் சீதையைக் காணுததால் அனுமனுக்கு உண்டாகும் விஷாதத்தின் வர்ணனை இப்படலத்திற்கு அழகிய முத்தாய்ப்பாக விளங்குகிறது.

சீதையின் நிலைமையையும் எண்ணங்களையும் கலைத்திறன் அனைத்தையும் கொட்டி விட்டான். சீதையின் தவத்தைக் கண்ணுற்றதும், அனுமன் அடையும் ஆனந்தத்தையும், சொல்லும் வார்த்தைகளையும் கவிதையின் எல்லை என்றே கூறிவிடலாகும். அந்த ஆனந்தத்தில் அனுமன்'வீடின தன்று அறன்' என்றதும், 'கள்ளவாள் அரக்கன் கமலக் கண்ணனார் உள் உயிரினை ஒளித்து வைத்தவா!' என்றும் 'ஐயம் இல்! அரவின் நீங்கிய தேவனே அவன்! இவள் கமலச் செல்வியே!' என்றும்,

*'மாசுண்ட மணியனாள், வயங்கு வெங்கதிர்த்*
*தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்,*
*காசுண்ட கூந்தலாள் கற்பும் காவலும்*
*ஏசுண்ட தில்லையால்! அறத்துக்கு ஈறுஉண்டோ?'*

'அழுக்குண்ட ரத்தினத்தையும் தேய்ந்த சந்திரனையும் போல மலிவான நிலையிலிருக்கிற சீதையின் கற்பும் காவலும் சிறிதும் கெடாமலிருக்கின்றன. அறம் அழியுமோ?' என்றும்,

*"புனைகழல் இராகவன் புயத்தையோ,புகழ்*
*வனிதையார் திலகத்தின் மனத்தின் மாண்பையோ,*
*வனைகழல் அரசரின் வண்மை வீக்கிடும்*
*சனகர்தம் குலத்தையோ, யாதைச் சாற்றுகேன்?"*

'இதற்காக, ராகவனுடைய திருமேனி யழகைப் புகழட்டுமா? அல்லது பிராட்டியின் திடச் சித்தத்தையும் சீலத்தையும் புகழவோ? அல்லது அரசரின் வள்ளன்மைக்குப் பெருமை தரும் சனகரின் குலத்தையேதான் புகழவோ? யாதைப் புகழ?' என்றும்,

*'தேவரும் பிழைத்திலர்! தெய்வ வேதியர்*
*யாவரும் பிழைத்திலர்! அறமும் ஈறு இன்றால்!*
*யாவது இங்கு இனிச் செயல் அரியது?'*

தேவர் மீது இனிப் பழியில்லை - வேதியர் மீதும் பழியிலது - அறத்திறனுக்கு எல்லை இல்லையென்று ஏற்பட்டுவிட்டது: இனி உலகில் அசாத்தியம் என்று எது இருக்கிறது? என்றும் கூறிக்கொண்டு ஆடுகிறான், பாடுகிறான், அங்கும், இங்குமாக ஆனந்த வெறி கொண்டு ஓடுகிறான்! இன்னும் அவளது தவத்தைப் பார்த்துவிட்டு அவள் அங்கிருந்த ஆற்றைக்

*'காண நோற்றிலன் . . . அவன் கமலக் கண்களால்!'*

'ராமன் கொடுத்து வைக்கவில்லை.' என்கிறான். 'தருமமே காத்ததோ? ராவணனுடைய வினைதான் அவளைக் காத்துக் கொடுத்ததோ? அல்லது சீதையது கற்புத்தான் வேறோர் துணைப் பலமின்றி அவளைக் காத்து வைத்ததோ? அருமை! அருமை! யாரால் இவ்வளவு ஆச்சரியமான தற்காப்பு சாத்தியம்? என் நண்பருக்கு இச் செய்தியை எத்துணை முறை சொன்னால்தான் என் ஆவல் அடங்கும்? வேறு ஒரு பிராணிக்கு இத்துணை மனோதிடம் இருக்குமோ? இவ்வளவு தவத்தை இவள் ஆற்றும்போது உலகின் கஷ்டங்களெல்லாம் இன்றோடு முடிந்துவிட்டன! அறத்தினைத் தீவினை வெல்லுமோ? ஒரு நாளும் வெல்லாது!' என்று அவன் வாயினின்றும் பெருகுவதாகக் கூறும் வார்த்தைகள் முத்தாய்ப்புக்கு மேல் முத்தாய்ப்பாக ஏறிக் கொண்டு செல்லுகின்றன என்று படிப்போருக்கு எடுத்துக் காட்டுவோம்.

சீதையோடு அனுமன் பேசுமுன் வால்மீகி சீதையையும் ராவணனையும் சந்திக்கச் செய்திருக்கும் அமைப்பைக் கம்பன் ஸ்வீகரித்துக் கொண்டுவிட்டான். 'சீதையை ராவணன் தொடுவதானால் அவனையும் தாக்கி இலங்கையையும் அழித்துவிடுவேன்!' என்று அனுமன் சங்கற்பித்துக் கொள்ளுவதாகக் கூறுவதன் ரசனை குறிப்பிடத்தக்கது.

உருக்காட்டுப் படலத்தின் அமைப்பின் செவ்வியை எக்கவியும் எக்காலத்திலும் வென்றதில்லையென்றும், வெல்ல முடியாது என்றும் கூறிவிடலாகும். சூளாமணி கொடுக்கு முன் சீதை ராமனுக்கு அனுப்பும் செய்தியும் அனுமனது பதிலும் மிகப் பொருத்தமாக அமைந்துள்ளன. இதனின்று பிணி வீட்டு படலம் ஈறாக உள்ள கதை சங்கிலி கோத்தது போலச் சம்பவத்துடன் சம்பவம் அழகுபட ஒட்டிக்கொண்டிருக்கும்படி செல்லுகிறது.

இலங்கையை அனுமன் எரிக்கும் சம்பவத்தில் கடல் தாவு படலத்தில் போல வால் மீகியின் வர்ணனை கம்பனதைவிட மிகவும் அழகாக இருக்கிறது. கம்பனது உத்பிரேக்ஷைகள் அக் காட்சியின் காம்பீரியத்தைத் திரை போட்டது போல மறைத்துவிடுகின்றன. ஆனால், இதிலும் படிப்போருக்கு ராவணனை நினைவுறுத்தி,

'என்று கொல் குரங்கு அன்னது இவ்வலி உளது? இலங்கை
நின்று வெந்துமா நீறுஎழு கின்றது! நெருப்புத்
தின்று தேக்கிடு கின்றது! தேவர்கள் சிரிப்பார்:
நன்று, நன்று போர்வலி!' என இராவணன் நக்கான்,

என்று கூறிக் கம்பன் தன் அமைப்புத் திறமையை விளக்கி விடுகின்றான்.

சுந்தர காண்டத்தில் ஊர்தேடு படலத்தில் எதிர்பார்க்க வைத்தபடி, கம்பன் தனது ஸ்தாயியைப் படிப்படியாக ஏற்றிக்கொண்டு சென்று கடைசிப் படலமாகிற திருவடி தொழுத படலத்தில் முத்தாய்ப்பை வைத்து விட்டான். இதில்கூட ஓர் ஜீகினு வேலை செய்திருக்கிறான். இலங்கையில் நிகழ்ந்தவற்றை வினவிய வானர வீரருக்குச் சீதையின் கற்பை வர்ணித்தும் அவள் கொடுத்த சூடாமணியைக் காட்டியும் விட்டு அனுமன்,

.. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. .. போரில்
நீண்டவாள் அரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச்சிந்தி
மீண்டதும் விளம்பான், தான்தன் வென்றியை உரைப்ப வெள்கி!

தான் அரக்கரோடு போர் செய்து, இலங்கைக்கு நெருப்பு வைத்துத் திரும்பியதை அனுமன் சொல்லவில்லை: தான் காட்டிய பராக்கிரமங்களைப் பற்றித்தானே உரைக்க அவன் நாணினன் என்று கம்பன் எழுதுகிறான்.

அதற்கு வானரர், பாரஸீகக் கதையில் வரும் ஒட்டகத்தைக் கண்டிராமலே அதைக் கண்டவன் போல வர்ணித்த அராபிய சாதுவைப் போலவும், கோனன்தாயில் சிருஷ்டித்துள்ள ஷெர்லக் ஹோம்ஸைப் போலவும், தாங்கள் சகலத்தையும் ஊகித்தறிந்து கொள்வதாகக் கூறுகிறார்கள்.

'பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த தன்மை
உரைசெய, ஊர் தீ யிட்டது ஓங்கு அரும் புகையே ஓத,
கருதலர் பெருமை, தேவி மீண்டிலாச் செயலே காட்டத்
தெரிதர உணர்ந்தோம்!'

'உன் உடம்பில் கோரமான காயங்களிருப்பதினின்று போர் செய்தாய் என்றும், நீ இங்கு திரும்பி வந்ததினின்று நீ பகைவரை வென்றாய் என்றும், அதோ வானளாவிச் செல்லுகிறதே புகை-அதினின்று நீ இலங்கைக்குத் தீ வைத்தாய் என்றும், சீதா தேவியை நீ உடன் அழைத்து வராததினின்று பகைவர் இத்துணைப் பலிஷ்டர் என்றும் உணர்ந்து கொண்டோம்.' என்றார்களாம். ஆனால், இந்தச் சமத்காரவர்ணனை யன்று, கம்பனுக்குச் சிறப்பான பெருமையைத் தருவது. மற்று,

'விற்பெருந் தடந்தோள் வீர!
வீங்குநீர் இலங்கை வெற்பின்
நற்பெருந் தவத்தள் ஆய
நங்கையைக் கண்டேன் அல்லேன்
இற்பிறப்பு என்பது ஒன்றும்,
இரும்பொறை என்பது ஒன்றும்,
கற்பு எனும் பெயரது ஒன்றும்
களிநடம் புரியக் கண்டேன்!'

என்பது போன்ற ரஸவாதிகளுக்கும் அகப்படாத ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்துக்கிணையான கம்பீரமான செய்யுட்களும், அவற்றைப் பொருந்த அமைத்துவைக்கும் ரசனைத் திறனுமே கம்பனைப் பிராகிருதமான கவிகளினின்றும் அவன் சாதியைச் சேர்ந்த கலைவலாளரான வால்மீகி, வியாசன், ஹோமர், மில்தன் முதலியோரினின்றும் வேறுபடுத்தித் தனிச் சிறப்புத் தருகின்றன.

கம்பன் வழக்கமாய்க் கதைப் பாங்கை மறப்பதில்லை. ஆனால் அனன்னிய சாத்தியமான பராக்கிரமம் காட்டித் தன் பெருந்தேவி சிறையிருந்த உளவைக் கண்டுபிடித்துத் தந்த அனுமனுக்கு இவ்விடத்தில் ராமன் ஓர் நன்றிக் கூற்றுக்கூடக் கூறுவதாகச் சொல்லவில்லை. இருப்பினும் வால்மீகி கூறுவது போல அனுமன்மீது தானும் அங்கதன் மீது லக்ஷ்மணனும் 'ஏறிச் செல்வோம்' என்று ராமனே சொன்னான் என்னுமல், கம்பன், அனுமன் இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு, 'என்னைக் குரங்கென இகழாமல் என்மீது ஏறி வரத் திருவுளம் பற்றவேண்டு' மென்று சொல்லிய பிறகே ராமன் சிறிய திருவடியின் மீது சரணம் வைத்தான் என்று கதையைப் புனைந்திருப்பதினின்று மிகச் சிறிய விஷயங்களிலும்கூட அவன் தன் அரிய கருத்தைச் செலுத்திக் காவியத்தைத் திறம்பட அமைத்திருக்கிறான் என்று படிப்போர் கண்டுகொள்வர்.

***

